உ

முருகன் துணை.

---

குருபாததாசர் அவர்களால்

செய்தருளிய

திருப்புல்வயல்

# குமரேச சதகம்

மூலமும்,

திருநெல்வேலி வித்வான்

குப்புசாமிப்பிள்ளை அவர்கள் செய்த

உரையும்.

---

**MADRAS:**

**PRINTED AT THE** S. P. V. PRESS.

**No. 84, Acharappen Street.**

---

**1914**

முருகன் றுணை.

# குமரேசசதகம்.

குமரேச என்ற திருநாமத்தை யமைத்துப் பாடப்பெற்ற நூறுசெய்யுள்கொண்ட பிரபந்தமாதலால் இந்த நூலுக்கு குமரேசசதகம்என்று பெயராயிற்று. இந்நூலின்செய்யுள் ஒவ்வொன்றிலும், மயிலேறிவிளையாடுகுகனே புல்வயனீடு மலைமேவு குமரேசனே, என்பது மகுடமா யமைக்கப்பட்டிருத்தல் காண்க. குமரேசசதகம் என்ற தொடர் குமரேசனைக்குறித்த சதகம் எனவிரிந்தால் இரண்டாம்வேற்றுமையுருபும் பயனுமுடன்றொக்க தொகையாகவும், குமரேசன் விஷயமான சதகம்என விரிந்தால் ஆறும் வேற்றுமைத் தொகையாகவும் கொள்ளப்படும். குமரேச என்பது குமரேச என்னும் வடமொழித்தொடரின் விகாரம், அது குமார ஈச என்றுபிரியும், இதுவடசொற்புணர்ச்சி, குணசந்தி. குமாரனாகிய ஈசன் என்பது இருபெயரொட்டுப் பண்புத்தொகை, சுப்பிரமணியனாகிய கடவுள் என்பது பொருள். குமாரன் என்பது, கு - மார என்று பிரிந்து (கு-குற்சிதம். மாரன்-மன்மதன்) எனப் பொருள்படும். மன்மதனுங் குரூபமுடையவனென்றுசொல்லும்படி செய்யவல்ல கட்டழகுடையவனென்பது கருத்து. ஈசசதகம் என்பதும் வடநூன் முடிபேயாம்.

சதகம் என்பது பிரபந்தவகை தொண்ணூற்றாறனுள் ஒன்று. அதனிலக்கணம் அகப்பொருளொன்றன் மேலாவது புறப்பொருளொன்றன்மேலாவது நூறுசெய்யுள்பாடுவது (அகப்பொருள் சிற்றின்பம், புறப்பொருள் மற்ற விஷயங்கள்) இந்நூல் பலவகைநீதிகளையும் சிலசரித்திரங்களையும் மற்றும் பலவகையியல்புகளையும் விளக்குதலால் புறப்பொருளின்மேற் கூறியதாம். சதம் நூறு, அது கப்பிரத்தியம்பெற்று சதகம் என நின்றது.

இந்நூல் முதலில் காப்புச்செய்யுளாகிய வெண்பா ஒன்றும் அவையடக்கமாகிய விருத்தமொன்றும் தவிர நூறு ஆசிரியவிருத்தங்களா லமைந்தது, திருப்புல்வயல் என்ற தலத்தில் மலையின்மீதெழுந்தருளியிருக்கிற பாலசுப்பிரமணியரென்னுந் திருநாமத்தையுடைய முருகக்கடவுளின்மேல் பாடப்பட்டது. இந்நூலின் ருக - ம் செய்யுளில், மாடமிசையன்னக் கொடித்திரள்கொள் சோணாடு வாழவந்திடுமுதல்வனே என்றும், கூய-ம் செய்யுளில், வாணுடு புகழுமொரு சோணாடு தழையவிவண் வந்தவதரித்த முதலே, என்றும், சுஅ-ம் செய்யுளில், மதிலுடன்கோபுரமும் வாவியும்புடைசூழ மருவுசோணாட்டதிபனே என்றும், பாடியிருத்தலால், திருப்புல்வயல் என்றதலம் சோழநாட்டிலுள்ளதென் றறியலாம். சுப்பிரமணிய சுவாமியினிடத்தில் மிகுந்த பக்தியோடு அப்பெருமானைப் பிரபந்தத்தலைவனுகவைத்துப் பாடப்பட்ட இந்நூல் தத்துவஞானத்தையும் சிறந்த பதவிகளையும் முடிவில் முத்தியையும்

தரவல்லதென்பதை 'பன்னரியபுல்வயலில் வாலகுமரேசர் மேற் பரிந்துகுருபாததாசன் பாங்கானதமிழாசிரியவிருத்தத்தினறை பாடலொரு நூறும்நாடி நன்னயமதாகப் படித்தபேர்கேட்டபேர் நாடோறுங்கற்றபேர்கள் ஞான யோகம்பெறுவர் பதவியாவும்பெறுவர் நன்முத்தியும்பெறுவரே' என்று இந்நூலின் இறுதிச்செய்யுளிற் கூறியிருத்தலால் அறியலாம். இந்நூல்போலவே கடவுளின்பெயரையமைத்து நீதியுரைக்கும் நூல்கள் மற்றுஞ் சிலவுள, அவை திருவேங்கடசதகம், அறப்பளீசுரசதகம்,கோவிந்தசதகம், தண்டலையார்சதகம் முதலியன.

இக் குமரேசசதகத்தைப்பாடினவர் குருபாததாசர் என்பதுமாத்திரம் இந்நூலின் இறுதிச்செய்யுளால் விளங்குகின்றது. இவரது சரித்திரமுதலிய விவரங்கள் தகுதியான ஆதாரத்தோடு விளங்கவில்லை. இவர் சற்றேறக்குறைய ௩௱-வருடங்களுக்குமுன் இருந்ததாக ஊகிக்கப்படுகின்றது. இவர் சுப்பிரமணியக்கடவுளின்மீது மிகுந்த பக்தியுள்ளவர் என்பது இந்நூலினால் நன்குவிளங்கும். இந்நூலின், ௯௯-ம் செய்யுளில், வல்லமையினு லெண்ணத்தினுலொன்றும்வாராது பரமசிவனெத்தனப்படி-முடியுமாம்-என்றும், ௮௫-ம் செய்யுளில், வாடாமலினைவெலாஞ், சிவன்செயல்களல்லாது மனச்செயலினாலும்வருமோஎன்றும் கூறியிருத்தலாலும், விபூதிவாங்குமுறைமையையும் அதைத் தரிக்கும்முறைமையையும்பற்றி இந்நூலிற் கூறியிருத்தலாலும், இவர் சைவமதஸ்தர் என்பது இனிதுவி

ளாங்குகின்றது அன்றியும், ௪௬-ம் செய்யுளில், மேவாகமஞ்சிவ புராணமிவைகேளாமல் விட்டசெவி யென்னசெவி என்றதும் அதை வற்புறுத்துகின்றது.

புல்வயல் என்பது புதுக்கோட்டையை யடுத்ததோரூர் என்றும், இதில் ஒருமலையும் அதின்மேல் முருகக்கடவுளின் ஆலயமும் இருக்கின்றதென்றும், அதற்கு அருணகிரிநாதர் அருளிச்செய்த திருப்புகழும் உண்டென்றும், இந்தக் குருபாததாசரது இயற்பெயர் முத்துமீனாக்ஷிக்கவிராயர் என்றும், இவர்பரம்பரைச் சைவவேளாளர்என்றும், இவர் இந்தச் சதகமொன்றையே யன்றி வேறு பல நூல்களையுஞ் செய்தாரென்றும், இவர் புத்திர பரம்பரையோர் சேலத்தையடுத்த சார்வாய்என்னும் ஊரிலும் இப்பொழுதும் இருக்கிறார்கள் என்றும், இவர் புத்திரிபரம்பரையாரில் கதிர்வேற் கவிராயர் என்றொரு மஹாவித்துவான் இருந்தாரென்றும் சிலமுதியோர் கூறுகின்றனர்.

---

உ

முருகன் றுணை.

# குமரேசசதகம்.

## மூலமும் உரையும்.

---

### காப்பு.

பூமேவு புல்லைப் பொருந்துகும ரேசர்தம்மேல்
தேமேவியசதகஞ் செப்பவே—கோமேவிக்
காக்குஞ் சரவணத்தான் கம்பகும்பத் தைந்துகரக்
காக்குஞ் சரவணத்தான் காப்பு.

(பதவுரை.)

பூமேவு-அழகுபொருந்திய, புல்லை-திருப்புல்வயலில், பொருந்து-எழுந்தருளிய, குமரேசர் தம்மேல்-குமாரக்கடவுள்மீது, தேம்மேவிய சதகம்செப்ப-இனிமைபொருந்திய சதகமொன்றைப்பாடுதற்கு, கோமேவி-தலைமைபெற்று, காக்கும்-(எல்லாவுயிர்களையும்) காப்பாற்றுகிற, சரவணத்தான் - முருகக்கடவுளும், கம்பம்-(எப்பொழுதும்) அசையுமியல்புள்ளதும், கும்பத்து-குடம்போன்ற மத்தகத்தையுடையதும், ஐந்துகரம் - ஐந்துகைகளை யுடையதும், கா-சோலையிற் பயில்வதும் ஆகிய, குஞ்சரம்-யானைபோன்ற, வணத்தான்-வடிவத்தை யுடையவனாகிய விநாயகக்கடவுளும், காப்பு-பாதுகாவலாவர், எ-று.

(விசேடவுரை.)

பூ என்பது மங்கலமொழிகளுள் ஒன்றாதலாலும், நூற்றொடக்கத்தில் மங்கலச்சொல் வைப்பது சான்றோர் மரபாதலாலும், இந்நூலாசிரியரும் பூ என்னும் மங்கலமொழியைத் தமது நூலாகிய இச்சதகத்தின் காப்புச்செய்யுளின் முதலில் அமைத்துக்கொண்டனர். புல்வயல் என்பது புல்லைன மரூஉவாயிற்று. இவ்வாறே தஞ்சாவூர் தஞ்சையென்றும் ஆற்றூர் ஆறையென்றும், பேறூர் பேறையென்றும், உறையூர் உறந்தையென்றும், மரூஉவாகிவழங்குதல்காண்க. தாம்தொடங்கும் சதகம் தம்மால்வணங்கப்படும் கடவுளின் கருணையால் இனிதுமுடியுமென்பது கருதி, 'தேமேவிய சதகஞ்செப்பக் காப்பு, என்றார் குமாரக்கடவுளையே முதற்பெருந் தெய்வமாகக் கொள்ளுகிற கௌமார மதத்தின் சித்தாந்தப்படியே குமாரக் கடவுள் மும்மூர்த்திகளுக்கும் மேம்பட்டவராதலால் அத்தலைமைதோன்ற 'கோமேவிக் காக்குஞ் சரவணத்தான், என்றார். கோமேவிகாக்கும் என்பதற்கு தேவலோகத்தை விரும்பிக்காக்கின்ற என்றுரைத்தலுமாம், தேவசேநாபதியாய் அசுரர்களை யழித்துத் தேவர்களைக் காத்தமையால். கோ-தேவலோகம்.

சரவணத்தான்-நாணற்காட்டில் அவதரித்தவன், சூரபதுமன்முதலிய கொடிய அசுரர்களைக்கொல்லுமாறுபிரார்த்தித்த தேவர்களுடைய பிரார்த்தனைக்கிரங்கிய சிவபிரான் ஆறு திருமுகங்கொண்டு அவற்றின் நெற்றிக்கண்களி

னின்று உண்டாக்கிய ஆறு அனற்பொறிகளை அக்கினியும் வாயுவும் கொண்டுபோய்க் கங்கையிற் சேர்க்க, கங்கையும் அவற்றைச் சரவணப்பொய்கையிற்சேர்க்க, அவ்விடத்தில் குமாரக்கடவுள் ஆறு திருமுகங்களோடும் பன்னிரண்டு திருக்கைகளோடும் அவதரித்தனன் என்பது புராணவரலாறு, சரவணப்பொய்கை-நாணற்காட்டினாற் சூழப்பட்டதோர் கங்கையின் மடு. சரம்வநம்-சரவணம். இது வடமொழிப்புணர்ச்சி.

கம்பம் கும்பம் கா-என்றவை யானைக்கேற்ற அடைமொழிகள் ஐந்துகரம் என்பது விநாயகருக் கேற்ற அடைமொழி தூங்குங்களிறு என்றபடி யானைக்கு எப்பொழுதும் அசைதலியல்பாதலால் கம்பம் என்பதற்கு அசைதல் எனப் பொருள் கூறினுமாம். இப்பொருட்கு கம்பம் சாதியடையெனக் கொள்க. மதயானையென்பது கருத்து. யானைத்தலையில் இரண்டுகுடங் கவிழ்த்தாற்போலத் தோன்றுகிற மாமிசபிண்டங்க ளிரண்டும் கும்பங்களென்று பெயர்பெறும், இயல்பாகிய நான்கு திருக்கைகளோடு யானை யுருவத்துக்குரியதான துதிக்கையுஞ்சேர்ந்து ஐந்தாதல்காண்க ஐந்துகரக்கா-ஐந்துகைகளாகிய ஐந்து கற்பகவிருக்ஷங்களையுடையவென் றுரைத்தலுமாம். கா-சோலை மரத்துக்கிலக்கணை கருதியவற்றைத் தருதலால் கரம் கற்பகம எனப்பட்டன கம்பம், கும்பம், கரம், குஞ்சரம் என்பன வடசொற்கள். குஞ்சரம் என்பதற்கு காட்டுப் புதர்களிற் சஞ்சரிப்பதென்பது பொருள். வணம-வண்ணமென்பதன் தொகுத்தல்.

மாகதன் என்னும் முனிவனுக்கு விபுதையென்னும் அசுரப்பெண்ணினிடத்தில் யானைமுகனைப் பிறந்த கஜ முகாசுரன் (இரணியன்போல) தேவர்களாலும் அசுரர்க ளாலும் மனிதர்களாலும் மிருகங்களாலும் வேறெந்தப்பி ராணிகளாலும் தனித்தனி இறவாதபடி வரம்பெற்று அச் சமின்றிச் செருக்கி உலகத்தை மிக வருத்திவருகையில், தேவர்கள் வேண்டுகோளால் இவனைக் கொல்லும்பொரு ட்டு யானைமுகமும் தெய்வப்பிறப்பும் பூதவடிவமுமாகத் தோன்றினவர் விநாயகர் என்றறிக.

இடையூறு நீக்கும்பொருட்டு விநாயகரை முதலிற் கூறுதல் பொருந்துமாயினும் இந்நூலாசிரியர் முருகக் கடவுளை முதலில் துதித்தது இவரது சுப்பிரமணிய பக்தி விசேஷத்தாலென்க. அன்றியும் விநாயகர் வழிபடுகடவுள் மாத்திரமேயாக, சுப்பிரமணியர் அதனோடு இந்நூலுக்கு ஏற்புடைக் கடவுளுமாகி முன்னிற்றற் குரிமையுடையரா தல் காண்க.

## அவையடக்கம்.

மாரிக்கு நிகரென்று பனிசொரிதல் போலவு
 மனைக்குநிக ரென்று சிறுபெண்
மணல்வீடு கட்டுவது போலவுஞ் சந்திரன்முன்
 மருவுமின் மினிபோ லவும்
பாருக்கு ணல்லோர்மு னேபித்தர் பலமொழி
 பகர்ந்திடுஞ் செயல் போலவும்
பச்சைமயி லாடுதற் கிணையென்று வான்கோழி
 பாரிலா டுதல் போலவும்

பூரிக்கு மினியகா வேரிக்கு நிகரென்று
போதுவாய்க் கால் போலவும்
புகல்சிப்பி முத்துக்கு நிகராப் பளிங்கைப்
பொருந்தவைத் தது போலவும்
வாரிக்கு முன்வாவி பெருகல்போ லவுமின்சொல்
வாணர்மு னுகந்து புல்லை
வாலகும ரேசர்மேற் சதகம் புகன்றனன்
மனம்பொருத் தருள் புரிகவே.

(இ-ள்.) மாரிக்கு நிகர் என்று - மழைக்குநிகரென்று, பனி சொரிதல்போலவும்-பனிபெய்தல்போலவும், மனைக்குநிகர் என்று-வீட்டுக்கு நிகரென்று, சிறுபெண்-சிறுபெண்ணானவள், மணல்வீடு கட்டுவதுபோலவும் - மணல்வீட்டைக்கட்டுதல்போலவும், சந்திரன்முன்-சந்திரனுக்கெதிரில், மருவு-பொருந்திய, மின்மினிபோலவும் - மின்மினிப்பூச்சிபோலவும், பாருக்குள்-உலகத்தில் நல்லோர் முன்னே - நல்லோர்களுக்கெதிரில், பித்தர்-பைத்தியக்காரர், பலமொழி-பலசொற்களை, பகர்ந்திடும் செயல்போலவும்-சொல்லுகிற செய்கைபோலவும், பச்சைமயில் ஆடுதற்கு இணையென்று - பச்சைநிறமுள்ளமயிலானது ஆடுதற்குச் சமானமென்று வான்கோழி-வான்கோழியானது, பாரில் ஆடுதல்போலவும் - உலகத்தில் ஆடுதல்போலவும், பூரிக்கும்-நீரால் நிறைக்கப்பட்ட, இனிய காவேரிக்குநிகர் என்று-இனிதாகிய காவேரியாற்றுக்குச் சமானமென்று, போதுவாய்க்கால் போலவும்-ஓடுகிற வாய்க்கால்போல

வும், புகல்கின்ற சிப்பிக்குநிகரா-சொல்லப்பட்ட முத்துச் சிப்பிக்குச் சமானமாக, பளிங்கை-படிகக்கல்லை, பொரு ந்தவைத்ததுபோலவும்-பொருத்தமாக வைத்தாற்போல வும், வாரிக்குமுன்-கடலுக் கெதிரே, வாவிபெருகல்போ லவும் - தடாகமானது பெருகுதல்போலவும், இன்சொல் வாணர்முன்-இன்சொற்களை யுடைய கவிவாணருக்கெதி ரில், உகந்து-விரும்பி புல்லை-திருப்புல்வயலிலெழுந்தருளி யிருக்கிற, வாலகுமரேசர்மேல்-பாலசுப்பிரமணியக் கட வுள்மேல், சதகம் புகன்றனன்-சதகமொன்றைப் பாடி னேன், மனம்பொறுத்து அருள்புரிக-மனம்பொறுத்த ருள்செய்யக்கடவீராக, எ-று.

அவை-சபை அது இடவாகுபெயராய் அந்தச்சபை யிலுள்ளோரை யுணர்த்திற்று, ஆகவே, சபையிலுள்ள பெரியோரைநோக்கி இந்நூலாசிரியர் மாரிக்குமுகமொன் று பனிசொரிதல்முதலிய செயல்கள்போல, கல்வியிற்சிற ந்த வுங்களுக்குமுன்னே நானும் ஒருசதகத்தைப் பாடி னேன், இதிலுள்ள குற்றங்களைக் குணங்களாகக்கொண் டருள்புரிதல்வேண்டுமென் றிரக்கின்றாராதலால் இதற்கு அவையடக்கமென்று பெயராயிற்று. அவையடக்கம்-ச பையிலுள்ளார் அடங்குதற்குரிய பணிமொழி, இனிய என்னும் அடையை நீருக்காக்குக புகல்-யாவராலும் சிற ப்பித்துச் சொல்லப்படுகிற, சதகம்-குமரேசசதகம் என் னும் பிரபந்தம் புரிக-வியங்கோள்.

## நூல்.

### குமரேசர்மகிமை.

பூமிக்கொ ராறுதலை யாய்வந்து சரவணப்
 பொய்கைதனில் விளையாடி யும்
புனிதற்கு மந்த்ரவுப தேசமொழி சொல்லியும்
 போதனைச் சிறையில் வைத்தும்
தேமிக்க வரிகரப் பிரமாதி கட்குஞ்
 செயிக்கமுடி யாவ சுரனைத்
தேகங் கிழித்துவடி வேலினு லிருகூறு
 செய்தமரர் சிறை தவிர்த்தும்
நேமிக்கு ளன்பரிட ருற்றசம யந்தனி
 னினைக்குமுன் வந்து தவியும்
நிசமுமெய்த் துணையாய் விளங்கலா லுலகிலுனை
 நிகரான தெய்வ முண்டோ
மாமிக்க தேன்பருகு பூங்கடம் பணியுமணி
 மார்பனே வள்ளி கணவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயலீடு
 மலைமேவு குமரேசனே. (க)

(இ-ள்) பூமிக்கு-பூமியின்மேல், ஓர் ஆறுதலையாய்வந்து ஒரு ஆறுதலைகளையுடையவனு யவதரித்து, சரவணப்பொய்கைதனில் விளையாடியும்-சரவணப் பொய்கையில் விளையாடுதல்செய்தும், புனிதற்கு - சிவபெருமானுக்கு, மந்த்ர உபதேசமொழிசொல்லியும் - மந்திரோபதேசவார்த்தையைச்சொல்லியும், போதனை சிறையில்வைத்தும்-பிரம

லைச் சிறையிலடைத்துவைத்தும், தேமிக்க அழகுமிகுந்த அரிஅர பிரமாதிகட்கும்-அரி அரன் பிரமன்முதலியோர்களுக்கும், செயிக்கமுடியா அசுரனை-வெல்லவொண்ணாத அசுரனை, தேகம்கிழித்து-சரீரத்தைப்பிளந்து, வடிவேலினால் - வடித்த வேலாயுதத்தால், இருகூறுசெய்து - இரண்டுபங்காக்கி, அமரர்சிறைதவிர்த்தும்-தேவர் சிறை நீக்கியும், நேமிக்குள்-உலகத்தில், அன்பர்-அன்பர்கள், இடர் உற்றசமயந்தன்னில்-துன்பமடைந்தகாலத்தில், நினைக்குமுன்-அவர்கள் நினைக்குமுன்னே, வந்து உதவியும்-வந்து உதவிசெய்தும், நிதமும்-நாள்தோறும், மெய்த்துணையாய் விளங்கலால்-உண்மையாகிய துணையாகிவிளங்குதலால், உலகில்-உலகத்தில், உன்னைநிகர் ஆனதெய்வம்-உன்னை நிகர்த்ததெய்வம், உண்டோ-உளதோ, மாடவண்டுகள், மிக்கதேன்பருகு-மிகுதியாகிய தேனையுண்ணுதற்கிடமாகிய, பூகடம்பு அணியும்-கடப்பமலர்மாலையையணிந்த மணிமார்பனே - அழகியமார்பையுடையவனே, வள்ளிகணவா-வள்ளிமணாளனே மயில்ஏறி விளையாடு குகனே-மயிலின்மேலேறி விளையாடுகிறகுகனே, புல்வயல்நீடு-திருப்புல் வயலிலுள்ள, மலைமேவு-நீண்டமலையின்கண் எழுந்தருளியிருக்கிற, குமரேசனே-குமாரக்கடவுளே எ-று.

தலையாய்-தலைமையுடையவனாய், மந்த்ரவுபதேசமொழியென்றது-பிரணவார்த்தம்போதித்தசொல்லை, போது-தாமரைமலர், அதிலிருப்பவனாதலால் பிரமனைப்போதன் என்றார் அரிகரப்பிரமாதிகட்குஞ் செயிக்கமுடியாவசுரன் என்றது சூரபன்மனை அணிமார்பன்என்றும் பிரிக்கலாம்.

## அந்தணரியல்பு.

குறையாத காயத்ரி யாதிசெப மகிமையுங்
 கூறுசுருதிப் பெருமையுங்
கோதிலா வாகம புராணத்தின் வளமையுங்
 குலவுயா காதி பலவும்
முறையா நடத்தலாற் சகலதீ வினைகளையு
 முளரிபோ லேதகிப் பார்
முதன்மைபெறு சிலைசெம்பு பிருதுவிக ளிற்றெய்வ
 மூர்த்தமுண் டாக்கு விப்பார்
நிறையாக நீதிநெறி வழுவார்க ளாகையா
 னீண்மழை பொழிந் திடுவதும்
நிலமது செழிப்பதும் மரசர்செங் கோல்புரியு
 நிலையுமா தவர்செய் தவமும்
மறையோர்க ளாலே விளங்குமிவ் வுலகத்தின்
 மானிடத் தெய்வ மிவர்காண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேச னே. (உ)

(இ-ள்.) குறையாத-குறைவுபடாத, காயத்ரி ஆதி-காயத்ரிமுதலிய மந்த்ரங்களை, செபமகிமையும் - செபித்தலின் பெருமையும், கூறுசுருதிப்பெருமையும்-சொல்லப்பட்ட வேதத்தின்பெருமையும், கோது இல்லா - குற்றமில்லாத, ஆகமபுராணத்தின்வளமையும்-ஆகமபுராணங்களின்பெருக்கமும், குலவு யாகாதிபலவும்-விளங்குகிற யாக முதலிய

வற்றையும், முறையாகடத்தலால்-கிரமமாகநடத்துதலா லே, சகலதீவினைகளையும்-சகலமானபாவங்களையும், முளரி போலேதகிப்பார்-சூரியன்போலஎரித்துவிடுவார்கள், முதன்மைபெறு-தலைமைபெற்ற, சிலை செம்புபிருதுவிகளில்-கல்செம்புமண் என்பவைகளில், தெய்வமூர்த்தம் உண்டாக்குவிப்பார்-தெய்வமூர்த்த முண்டாக்கிவைப்பார்கள், நிறையாக நீதிநெறிவழுவார்கள்-பூர்ணமாக நீதிமார்க்கத்தினின்றும் வழுவமாட்டார்கள், ஆகையால்-ஆதலால், நீள்மழைபொழிந்திடுவதும்-பெருமழைசொரிவதும், நிலமதுசெழிப்பதும்-பூமிசெழிப்பதும், அரசர்-அரசர்கள், செங்கோல்புரியும் நிலையும்-செங்கோல் செலுத்துந் தன்மையும், மாதவர்செய்தவமும்-பெரிய தவத்தினர் செய்கிறதவமும், மறையோர்களாலே விளங்கும்-வேதியராலேவிளங்கும், (ஆதலால்) இவ்வுலகத்தில்-இந்தலோகத்தில், இவர்-இந்தவேதியர், மானிடத்தெய்வம்-மாநுஷரூபமான தெய்வமாவர், மயிலேறிவிளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவுகுமரேசனே.

காயத்ரி-வேதமந்திரம், சுருதி-கேட்கப்படுவது, வேதம்-எழுதிப்படிக்காமல்கேட்டற்கே யுரியதாதலால் இதற்கு இப்பெயர்வந்தது, ஆகமம்-காமிகமுதலியன புராணம்-மச்சமுதலியன. யாகம்-ராஜசூயம், அசுவமேதம், பசுமேதம் முதலியன, தீவினை-தீவினைப்பயன் (பாவம்) தெய்வமூர்த்தம்-தைவாவேசம்.

அரசரியல்பு.

குடிபடையி லபிமான மந்திரா லோசனை
 குறிப்பறிதல் சத்யவசனங்
 கொடைநித்த மவரவர்க் கேற்றமரி யாதைபொறை
 கோடாத சதுரு பாயம்
படிவிசா ரணையொடு ப்ரதானிகளை கர்த்தரைப்
 பண்பறிந் தேய மைத்தல்
 பல்லுயி ரெலாந்தன் னுயிர்க்குநிக ரென்றே
 பரிந்தக்குற் றங்கள் களைதல்
துடிபெறு தனக்குறுதி யானநட் பகமின்மை
 சுகுணமொடு கல்வியறிவு
 தோலாத காலமிட மறிதல்வினை வலிகண்டு
 துஷ்டநிக் ரக சௌரியம்
வடிவுபெறு செங்கோ னடத்திவரு மரசர்க்கு
 வழுவாத முறைமை யிதுகாண்
 மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேச னே. (ரு)

(இ-ள்.) குடிபடையில் அபிமாநம்-குடிபடைகளின்மேல் அபிமாநமும், மந்திராலோசனை - மந்திராலோசனையும், குறிப்பறிதல்-குறிப்பறிதலும், சத்யவசநம்-உண்மைமொழியும், கொடை-கொடையும், நித்தம்-நாள்தோறும், அவரவர்க்கு ஏற்றமரியாதை - அவரவர்க்குத் தகுதியாகிய மரியாதைசெய்தலும், பொறை-பொறுமையும், கோடாத சதுருபாயம்-கோணாதநான்குபாயங்களும், படிவிசாரணை

யொடு-லோகவிசாரணையுடனே, ப்ரதானிதளகர்த்தரை-பிரதானி தளகர்த்தன் என்பவர்களை, பண்பு அறிந்தே அமைத்தல்-குணமறிந்தே யமைத்துக் கொள்ளுதலும், பல் உயிர் எல்லாம்-பல்லுயிர்களெல்லாம், தன் உயிர்க்கு நிகர் என்றேபரித்தல் - தன்னுயிர்க்குச் சமானமென்றெண்ணியே அவற்றைக் காப்பாற்றுதலும், குற்றங்களைதல்-குற்றங்களை விலக்குதலும், குடிபெறு-மேன்மைபெற்ற, தனக்கு உறுதியான நட்பு-தனக்குறுதியாகிய நட்புடைமையும், அகம்இன்மை-அகமில்லாமையும், சுகுணமொடு-நற்குணத்துடன், கல்வியறிவு-கல்வியறிவும், தோலாத-தொலையாத, காலம் இடம் அறிதல்-கால இடங்களை யறிதலும், வினைவலிகண்டு-வினைவலிநோக்கி, துஷ்டநிக்ரஹ சௌரியம்-துஷ்டநிக்ரஹமாகிய சூரத்துவமும், (ஆகிய) இவை-இவைகளே, வடிவுபெறுசெங்கோல் நடத்திவரும் அரசர்க்கு-அழகுபெற்ற செங்கோல்செலுத்திவருகிற வேந்தருக்கு, வழுவாதமுறைமை-தவறாதமுறைமையாகும், மயிலேறிவிளையாடு குகனேபுல்வயலீடு மலைமேவு குமரேசனே, எ-று.

குடி-அந்தணர் முதலான குடிகள், படை-தேர், யானை, குதிரை, காலாள் என்பன. அபிமானம்-அன்பு, மந்திராலோசனை-ரகசியமான ஆலோசனை, குறிப்பறிதல்-நினைப்பறிதல், சதுருபாயம்-சாமம், தானம், பேதம், தண்டம் என்பன. அகம்-அகங்காரம். நிக்ரஹம்-வெற்றி.

வணிக ரியல்பு.

கொண்டபடி போலும்விலை பேசிலா பஞ்சிறிது
 கூடிவர நய முரைப்பார்
கொள்ளுமொரு முதலுக்கு மோசம்வா ராதபடி
 குறுகவே செலவு செய்வார்

வண்டப் புரட்டர்தா முறிதந்து பொன்னடகு
வைக்கினுங் கடனீந்திடார்
மருவுநாணயமுளோர் கேட்டனுப் புகினுமவர்
வார்த்தையி லெலாங் கொடுப்பார்
கண்டெழுது பற்றுவர வினின்மயிர் பிளந்தே
கணக்கிலொனு வாகிலும் விடார்
காசுயீ ணிற்செல விடாருசித மானதிற்
கனதிரவி யங்கள் விடுவார்
மண்டலத் தூடுகன வர்த்தகஞ் செய்கின்ற
வணிகர்க்கு முறைமை யிதுகாண்
மயிலேறி விளையாடு குகனே புல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (ச)

(இ-ள்) (தகுதியுள்ள வியாபாரிகள்) கொண்டபடிபோலும் விலைபேசி-(தாம்பொருளை) வாங்கிய வகைக்கு ஏற்ற விலையைக்கூறி, லாபம் சிறிது கூடிவர-சொற்பலாபம்(அதனோடு) சேர்ந்துவரும்படி, நயம் உரைப்பார் (வாங்குகிறவர்களுக்கு) நஷ்டமில்லாதிருக்கும்படி சொல்லுவார்கள்; கொள்ளும் ஒருமுதலுக்கு மோசம்வாராதபடி-(தாம்வியாபாரத்தின்பொருட்டுப் பொருள்களை) வாங்குதற்கென்று வைத்திருக்கிறமுதல் தொகைக்குக் குறைவு வராதபடி, குறுகவே செலவுசெய்வார்-(அதன் இலாப வரவு தொகையைக்கொண்டே) சொற்பமாகவே செலவுசெய்வார்கள், வண்டப்புரட்டர்தாம் - துஷ்டத்தன்மையுள்ள வஞ்சகர்கள், முறிதந்து-சீட்டு எழுதிக்கொடுத்து, பொன்

அடகு வைக்கினும்-பொன்னை ஈடாகவைத்தாலும், கடன் ஈந்திடார் - அவர்களுக்குக்கடன் கொடுக்கவேமாட்டார்கள், மருவுநாணயம் உளோர்-பொருந்திய நாணயத்தையுடையவர்கள், கேட்டு அனுப்புகினும் (நேரில்வந்து பொருளீடுகாட்டிச் சீட்டு எழுதிக்கொடுத்த லில்லாமல் தமது ஏவலாளர் மூலமாக இன்னபண்டம் வேண்டுமென்று வாய்மொழியாய்க்) கேட்டு அனுப்பினாலும், அவர் வார்த்தையில்-அவர்களுடைய அந்தச்சொல்மாத்திரத்தைக்கொண்டே, நம்பிக்கையோடு எல்லாம் கொடுப்பார்-(அவர்கட்கு) வேண்டிய வைகளையெல்லாம் கொடுப்பார்கள், கண்டு எழுது-ஒவ்வொன்றையும் தவறுமற் குறிப்பிட்டு எழுதுகிற, பற்றுவரவினில் - கொடுக்கல் வாங்கல் விவரத்தில், மயிர்பிளந்தே மயிரை இருபிளவாகக் குறுக்கே பகிர்ந்தளவு நுண்ணிய தொகையையுங்காட்டி, கணக்கில்-கணக்கில், அணு ஆகிலும் விடார்-மிகச்சிறிதொன்றையும் விடமாட்டார்கள், காசு-ஒரு காசையும், வீணில் செலவிடார் வீணான வகையில் செலவுசெய்யமாட்டார்கள், உசிதம் ஆனதில்-தகுதியான ஒருகாரியத்தில், கன திரவியங்கள் விடுவார்-மிகுதியான பொருள்களைச் செலவுசெய்வார்கள், மண்டலத்தூடு-உலகத்திலே, கனவர்த்தகம் செய்கின்ற-பெருமைக்கு இடமான வியாபாரத்தைச்செய்கிற, வணிகர்க்கு-வைசியர்களுக்கு, முறைமை இதுகாண்-உரிய நிலைமை இதுவேயாம், மயிலேறிவிளையாடு குகனேபுல்வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

"வாணிகஞ்செய்வார்க்கு வாணிகம் பேணிப், பிற வுந்தம்போற்செயின்" என்ற திருக்குறளினாலும், பிறர் பொருளையும் தம்பொருள்போல எண்ணிக்கொள்வது மிகையும் கொடுப்பதகுறையும் ஆகாமல் ஒப்பநாடி வாணிகம் செய்தலே நல்ல வாணிகமா மென்று அறிக.

தாம் வாங்கியவிலையை யுள்ளபடிகூறி அதற்குமேல் இவ்வளவுலாபம் தரவேண்டுமென்று சொற்பலாபத்தைக் குறிப்பிட்டுக்கேட்டலும், அங்ஙனமன்றித் தாம் கொண்டவிலையோடு சொற்பலாபத்தையும் கூட்டியே விலைகூறுதலும் ஆகிய இருவகையும் இதனுள் அடங்கும். முதல் வியாபாரஞ்செய்தற் கென்றுவைத்த தொகை. "ஆனமுதலிலதிகஞ்செலவானான், மானமழிந்து மதிகெட்டுப்போனதிசை, யெல்லார்க்கும் பொய்யனாயேழ்பிறப்புந் தீயனாய், நல்லார்க்கும் பொல்லனாநாடு" என்ற ஔவையார் வாக்கினாலும் அதிகச்செலவுசெய்தல் பெருங்குற்றமாதல் அறிக வண்டத்தனம்-துடுக்குத்தனம், இச்சொல், இந்நூலின் எருஆம் செய்யுளிலும் 'வண்டப்பரத்தையர் எனப் பருன்றுள்ளது' புரட்டர்-பொய் பேசுபவர்; சொன்ன சொல் தவறுவோர்; வாக்கு நாணயமில்லாதவர்; மோசக்காரர். நாணயம்-சொன்னசொல் தவறாது நடத்தல் (நம்பிக்கைக்கிடமான தன்மை) பற்று - தம்மிடத்தினின்று பிறர்பொருளைப் பெற்றுக்கொண்ட விவரம் குறிப்பது, வரவு - பிறரிடத்தினின்று தமக்குப் பொருள்வந்த விவரம் குறிப்பது. காசு - ஒரு சிறுநாணயம், வீண்-பயனற்

றது. உசிதம் - பயனுள்ளது. செலவிடார் என்பதை செ ல்லவிடார் எனவும் செலவு இடார் எனவும் பிரிக்கலாம். ஒவ்வொரு காசாகப் பொருளைச்சேர்த்து வராகன் வரா கனகச் செலவுசெய்தல் வணிகரியல்பென்பது இதனல் கூறப்பட்டது.

முருகக்கடவுளால் வேல்கொண்டு பிளக்கப்பட்டசூர பதுமனது உடம்பின்கூறு இரண்டும் மயில்வடிவமும்கோ ழிவடிவமும்பெற்று அக்கடவுளருளால் அப்பிரானுக்குவா கனமுங் கொடியுமாய் அமைந்தனவென்று அறிக.

வேளாளரியல்பு.

நல்லதே வாலயம் பூசனை நடப்பது
　　நாடோறு மழை பொழிவதும்
　நாடிய தபோதனர்கண் மாதவம் புரிவது
　　நவில்வேத வேதியரெலாஞ்
சொல்லரிய யாகாதி கருமங்கள் செய்வதுந்
　　தொல்புவி செழிக்கு நலமுஞ்
　சுபசோ பனங்களுங் கொற்றவர்கள் செங்கோ
　　றுலங்குமனு நெறி முறைமையும்
வெல்லரிய சுகிர்தமொடு வர்த்தகன் கொள்விலையும்
　　விற்பனையு மதிக புகழும்
　மிக்கவதி காரமுந் தொழிலாளர் சீவனமும்
　　வீரரண சூர வலியும்
வல்லவர்கள் சகலமும் வேளாளர் மேழியின்
　　வாழ்வினுன் விளைவ வன்றே
　மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
　　மலைமேவு குமரேசனே　　　　　　(௫)

(இ-ள்.) நல்லதேவாலயம் பூசனை நடப்பதும் - நன்மை யாகிய தேவாலயங்களில் பூசைகள் நடப்பதும், நாள்தோ றும்-மழைபொழிவதும்-தினந்தோறும் மழைபெய்வதும் நாடிய தபோதநர்கள்-நாடிய தவச்செல்வர்கள், மாதவம் புரிவதும்-பெரிய தவத்தைச்செய்வதும், நவில்-சொல்லப் பட்ட, வேதவேதியர் எல்லாம்-வேதங்களையுடைய அந்த ணரெல்லாரும், சொல்அரிய-சொல்லுதற்கரிதாகிய, யா காதி கருமங்கள்செய்வதும்-யாகமுதலான தொழில்களை ச்செய்தலும், தொல்புவிசெழிக்கும் நலமும்-பழமையா கிய இவ்வுலகம் செழிக்கின்ற நன்மையும், சுபசோபநங்க ளும்-சுபமாகிய சோபநகாரியங்களும், கொற்றவர்கள் செங்கோல்-வேந்தர்களுடைய செங்கோலானது, துலங் கும்-விளங்குகிற, மனுநெறி முறைமையும்-மநுநெறியின் கிரமமும், வெல்அரிய-வெல்லுதற்கரிய, சுகிர்தமொடு-தரு மத்துடனே, வர்த்தகன் கொள்விலையும்-வியாபாரி கொ ள்ளுதற்குரியகிரயமும், விற்பனையும்-விற்கிறதும், அதிக புகழும்-கீர்த்தியும், மிக்க அதிகாரமும்-மேலான அதி காரமும், தொழிலாளர் சீவநமும்-வேலைக்காரருடையசீவ நமும், வீரரணசூரவலியும் - வீரத்தன்மையுள்ள ரணசூர பலமும், வல்லமைகள் சகலமும்(இவைபோன்ற) வல்லமை கள் யாவும், வேளாளர்-வேளாளருடைய, மேழிபின் வா ழ்வினுன்-மேழியின் நிலைபேறுடைமையால், விளைவ துன் றோ-உண்டாவனவன்றோ, மயிலேறி விளையாடுகுகனேபுல் வயல்நீடு மலைமேவுகுமரேசனே. எ-று.

தேவாலயபூசை புரிவார்க்கு எக்காலத்துந் தீமைவிளையாதாதலால் நல்ல தேவாலயம் என்றூர் நாடுதல்-இறைவனை தியானித்தல் சுகிர்தம்-புண்ணியம். மேழி-கலப்பை மேழியின்வாழ்வு-கலப்பையின் சஞ்சாரம் எனினுமாம். கலப்பையின் சஞ்சாரம் ஏருழுதல்.

பிதாக்கள்

தவமதுசெய் தேபெற் றெடுத்தவன் முதற்பிதா
தனைவளர்த தவனொரு பிதா
தயையாக வித்தையைச் சாற்றினவ னொருபிதா
சார்ந்தசற் குருவொரு பிதா
அவமறுத் தாள்கின்ற வரசொரு பிதாநல்ல
வாபத்து வேளை தன்னி
லஞ்சலென் றுற்றதுயர் நீர்த்துளோ னொருபிதா
வன்புளமு ளோனொரு பிதா
கவளமிடு மனைவியைப் பெற்றுளோ னொருபிதா
கலிதவிர்த் தவனொரு பிதா
காசினியி லிவரைநித் தம்பிதா வென்றுளங்
கருதுவது நீதி யாகும்
மவுலிதனின் மதியரவு புனைவிமல ருதவுசிறு
மதலையென வருகுரு பரா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (௯)

(இ-ள்.) (ஒருவனுக்கு) தவமதுசெய்தேபெற்று எடுத்தவன்-நல்வினைசெய்து (அதன் பயனாக அவனை) ஈன்றவன், முதல்பிதா-முதன்மையான தந்தையானவன், தனைவளர்த்தவன்-அவனை வளர்த்தவன், ஒருபிதா-ஒருதந்தையாவன், தயைஆக-அன்போடு, வித்தையைசாற்றினவன்-கல்வியைச்சொல்லிக்கொடுத்த ஆசிரியன், ஒருபிதா - ஒருபிதா, சார்ந்த சத்குரு-அமைந்த நல்ல(ஞானத்தை உபதேசித்த) ஆசிரியன், ஒருபிதா-ஒருபிதா, அவம் அறுத்து ஆள்கின்ற அரசு-தீங்குகளை ஒழித்துப் பாதுகாக்கிற அரசன், ஒருபிதா-ஒருபிதா, நல்ல ஆபத்துவேளைதன்னில்-மிக்க துன்பம் நேர்ந்தசமயத்தில், அஞ்சல் என்று-பயப்படாதேயென்று உறுதிமொழி கூறி, உற்ற துயர் தீர்த்துளோன்-நேர்ந்த அத்துன்பத்தை நீக்கியுதவியவன், ஒருபிதா-ஒருபிதா, அன்பு உளமுனோன்-அன்புள்ள தமையன், ஒருபிதா-ஒருபிதா, கவளம் இடுமனைவியை பெற்றுளோன்-அன்போடு உணவையூட்டுகிறமனையாளைப்பெற்றவனை மாமனார் ஒருபிதா-ஒருபிதா, கலிதவிர்த்தவன் (தனது) வறுமையைத்தீர்த்துப் பொருளுதவியவன், ஒருபிதா ஒருபிதா, காசினியில்-உலகத்தில், இவரை-இவர்களையெல்லாம், நித்தம்-எப்பொழுதும், பிதா என்று உளம்கருதுவது (தனித்தனி) தந்தையென்று மனதில் எண்ணி அதற்கு ஏற்பநடப்பது, நீதிஆகும்-நியாயமாம், மவுலிதனில் திருமுடியிலே, மதி-சந்திரனையும், அரவு-நாகத்தையும், புனை-தரித்த, விமலர்-குற்றமற்ற கடவுளான சிவபிரான்,

உதவு-பெற்ற, சிறு மதலைஎன-இளையகுமாரனைக, வரு-அவதரித்த, குருபரா-சிறந்த ஆசிரியனே! மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே. எ-று.

இங்குக்கூறப்பட்ட ஒன்பதின்மருள் முதலிற் குறிக்கப்பட்டவன், உண்மையான தந்தை; மற்றையோரைத் தந்தையென்றது உபசாரவழக்கு; தந்தைபோலப் பாவிக்கத்தக்கவர் என்றபடி. நல்வினையினாலன்றி மக்கட்பேறு இயலாதாதலின், 'தவமது செய்தே பெற்றெடுத்தவன்.' என்றார் தவம் இங்கே, நல்வினை யென்னு மாத்திரமாய் நின்றது. உபாத்தியாயர்க்கு மாணுக்கரிடம் அருள் இன்றியமையாதாதலின், 'தயையாக வித்தையைச்சாற்றினவன்,' என்றார்.

சற்குரு "ஞானம் அனுட்டானம் இவை நன்றாகவே யுடையவனான" குரு. கு*(அஞ்ஞானமாகிய) இருளை, ரு-ஒழிப்பவன். குடிகளின்சுகதுக்கங்களைக்கருதாதகொடுங் கோலரசனை விலக்குதற்கு 'அவமறுத்து ஆள்கின்ற அரசு என்றார் மன்னுயிரைத் தன்னுயிர்போலக் குறிக்கொண்டு காக்கும் அரசனென்க. நல்ல ஆபத்து கொடிய ஆபத்து; இத்தொடரை 'நல்லபாம்பு' என்றாற்போற்கொள்க. அஞ்சலெனல் அபயம் அளித்தல் முன்னோன் முன்பிறந்தவன். 'தாய்க்குப்பின் தாரம்' என்றபடி குழந்தையினிடத் தேகொண்டு அவனை இனிய உணவுகொளற் போஷித்தல் மனையாளின் கடமையாதலால் 'கவளமிடு மனைவி' என்றார் இத்தகைய மனையாளின் வாய்ப்பே அவளைப்பெற்றவனைப் பிதாவாக மதித்தற்குக் காரணமாம்.

பிரணவப்பொருளறியாததுபற்றிப் பிரமனைக்குமார க்கடவுள் சிறையிட்டகாலத்தில் அவனைவிடுவிக்கவந்த சிவ பிரானது விருப்பத்தின்படி தந்தையாகிய அப்பெருமா னுக்கு மைந்தனாகியதால்பிரணவமகாமந்திரத்தின்பொரு ளை உபதேசித்து 'சுவாமி'என்று ஒருசிறப்புப்பெயர் பெ ற்றமேன்மையையும் தமிழுக்கு முதலாசிரியராகிய அகத் தியனார்க்குத் தமிழையும் தத்துவஞானத்தையும் முருகக் கடவுள் உபதேசித்த தன்மையையும் உட்கொண்டு, குரு பரா எனவிளித்தார். குருபரன் பரமகுரு.

ஒன்றையொன்றுபற்றியிருப்பன.

சத்தியந் தவறு திருப்பவ ரிடத்தினிற்
　　சார்ந்துதிரு மாதிருக் குஞ்
சந்ததந் திருமா திருக்கும் விடந்தனிற்
　　றனது பாக் கியமிருக் கும்
மெய்த்தவரு பாக்கிய மிருக்கும் விடந்தனில்
　　விண்டுவின் கலையிருக் கும்
விண்டுவின் கலைபூண் டிருக்கு மவிடந்தனின்
　　மிக்கான தயையிருக் கும்
பத்தியுட னினியதயை யுள்ளவ ரிடந்தனிற்
　　பகர்தரும மிகவிருக் கும்
பகர்தரும முள்ளவ ரிடந்தனிற் சத்துரு
　　பலாயனத் திறலிருக் கும்

வைத்திசை மிகுந்ததிற லுள்ளவ ரிடத்தில்வெகு
மன்னுயிர் சிறக்கு மன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயலீடு
மலைமேவு குமரேசனே. (எ)

(இ-ள்.) சத்தியம் தவறு திருப்பவரிடத்தினில் - சத்தியம் வழுவாதிருப்பவரிடத்தில், சார்ந்த திருமாது இருக்கும்-பொருந்திய திருமாதிருப்பாள், சந்ததம் எப்போதும் திருமாது இருக்கும் அவிடந்தனில் திருமாதிருக்கிற அவ்விடத்தில், தனது பாக்கியம் இருக்கும்-தனது சம்பத்திருக்கும், மெய்த்துவருபாக்கியம் இருக்கும் அவிடந்தனில்-உண்மையாய் வருகிற பாக்கியமிருக்கிற அவ்விடத்தில், விண்டுவின் கலை இருக்கும்-விஷ்ணுவின் அமிசமிருக்கும், விண்டுவின் கலை பூண்டிருக்கும் அவிடந்தனில்-விஷ்ணுவின் அமிசம்பொருந்தியிருக்கிற அவ்விடத்தில், மிக்கான தயை இருக்கும்-மிகுதியாகிய தயையிருக்கும், பக்தியுடன்-பத்தியோடு, இனியதயை உள்ளவரிடந்தனில்-இனிதாகிய தயையுள்ளவரிடத்தில், பகர்தருமம் மிகஇருக்கும்-சொல்லப்பட்ட தருமமானது மிகுதியாயிருக்கும், பகர்தருமம் உள்ளவரிடந்தனில்-சொல்லப்பட்ட தருமமுள்ளவரிடத்தில், சத்துரு-பகைவன், பரையகம்-புறங்காட்டும்படியான, திறல்இருக்கும்-வெற்றியிருக்கும், வைத்து இசைமிகுந்த திறல் உள்ளவரிடத்தில்-வைக்கப்பட்டு கீர்த்திமிகுந்த வெற்றியுள்ளவரிடத்தில், வெகு மன்உயிர் சிறக்கும் அன்றோ-பலவாகிய நிலைபெற்ற சீவர்கள் சிற

ந்து வாழுமல்லவா, மயிலேறி விளையாடு குகனேபுல் வய னீடு மலைமேவு குமரேசனே. எ-று.

சத்தியம்-உண்மை. திருமாது-திருமகள் (இலக்குமி) களை-கலை, (அமிசம்). பகர்தருமம்-நூல்களாற் சொல்லப் பட்ட தருமம். பலாயநம்-புறங்காட்டுதல், திறல்-வலியெ னினும் பொருந்தும்.

இவர்க்கிவர் தெய்வமெனல்.

ஆதுலர்க் கன்னங் கொடுத்தவர்க ளேதெய்வ
மன்பான மாணுக் கருக்
கரியகுரு வேதெய்வ மஞ்சினோர்க் காபத்
தகற்றினோ னேதெய்வ மாம்
காதலுறு கற்புடைய மங்கையர் தமக்கெலாங்
கணவனே மிக்க தெய்வங்
காசினியின் மன்னுயிர் தமக்கெலாங் குடிமரபு
காக்குமன் னவர்தெய்வ மாம்
ஓதரிய பிள்ளைகட் கன்னைதந் தையர்தெய்வ
முயர்சாதி மாந்தர் யார்க்கு
முறவின்முறை யார்தெய்வம் விசுவாச முள்ளபேர்க்
குற்றசிவ பத்தர் தெய்வம்
மாதயைபி ளுற்குத் திரர்க்குமறை யோர்தெய்வம்
வானவர்க்குத் தெய்வநீ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே (அ)

(இ-ள்) ஆதுலர்க்கு-தரித்திரருக்கு, அன்னம் கொடுத்தவர்களே-சோறுகொடுத்தவர்களே, தெய்வம்-தெய்வமாவார்கள், அன்பான மாணுக்கருக்கு-அன்புள்ளமாணுக்கருக்கு, அரியகுருவே-அருமையாகிய ஆசிரியனே, தெய்வம்-தெய்வமாவான், அஞ்சினோர்க்கு-பயந்தவர்களுக்கு, ஆபத்து அகற்றினோனே (அவர்களுடைய) ஆபத்தைநீக்கினவனே, தெய்வம் ஆம் - தெய்வமாவன், காதல்உறு-ஆசைமிகுந்த, கற்புடைய மங்கையர்தமக்குஎல்லாம்-கற்புள்ள மாதருக்கெல்லாம், கணவரே - (அவர்களுடைய) நாயகர்களே, மிக்கதெய்வம்-மேலானதெய்வமாவர், காசினியில்-உலகத்தில், மன் உயிர்தமக்கு எல்லாம்-நிலைபெற்றவுயிர்களுக்கெல்லாம், குடிமரபுகாக்கும் - குடிமரபுகளைக் காப்பாற்றுகிற, மன்னவர்கள் - அரசர்களே, தெய்வம் - தெய்வமாவர், ஓது அரிய பிள்ளைகட்கு-சொல்லுதற்கரிய குழந்தைகளுக்கு, அன்னைதந்தையர் தெய்வம் - தாய்தந்தையரே தெய்வமாவர், உயர்சாதிமாந்தர் யார்க்கும்-உயர்ந்தசாதியிற் பிறந்த மக்களெல்லார்க்கும், உறவின்முறையார் தெய்வம்-பந்துக்களே தெய்வமாவர், விசுவாசம்உள்ளபேர்க்கு-விசுவாசமுள்ளபேர்களுக்கு, உற்ற-பொருந்திய, சிவபத்தர்-சிவபக்தர்களே, தெய்வம்-தெய்வமாவர், சூத்திரர்க்கு-சூத்திரர்களுக்கு, மாதயையினால் - பெரிய தயையுடைமையால், மறையோர்-வேதியரே, தெய்வம்-தெய்வமாவர், வானவர்க்கு-தேவர்களுக்கு, நீ தெய்வம்-நீயே தெய்வமாவாய், மயிலேறிவிளையாடு குகனேபுல்வயனீடு மலைமேவு குமரேசனே எ-று.

அரிய-கிடைத்தற்கரிய ஆபத்து-அபாயம்(துன்பம்,) கற்பு-பதிவிரதா தருமம், குடி மரபு-குடிகளும்வமிசத்தார்களும்விசுவாசம்-அன்பு,வானவர்-விண்ணுலகத்திலுள்ளவர் இவர்க்கிது நினைவெனல்.

ஞானநெறி யாளர்க்கு மோக்ஷத்தி லேநினைவு
　நல்லறிவு ளோர் தமக்கு
நாடொறுந் தருமத்தி லேநினைவு மன்னர்க்கு
　ராச்சியந் தன்னி னினைவு
ஆனகா முகருக்கு மாதர்மே லேநினைவு
　எஞ்சாத திருடருக் கிங்
கனுதினங் களவிலே நினைவுதன வணிகருக்
　காதாய மீது நினைவு
தானமிகு குடியாள ருக்கெலாம் வேளாண்மை
　தனினினைவு கற்ப வர்க்குத்
தகுகல்வி மேனினைவு வேசியர்க் கினியபொரு
　டருவோர்கண் மீது நினைவு
மானபர னுக்குமரி யாதைமே னினைவெற்கு
　மாறுதுன் மீது நினைவு
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
　மலைமேவு குமரேசனே.　　(கூ)

(இ-ள்.) ஞானநெறியாளர்க்கு - ஞானமார்க்கத்தையுடையவருக்கு, மோக்ஷத்திலே நினைவு-மோக்ஷத்திலேயே நினைவிருக்கும், நல்அறிவு உள்ளோர்தமக்கு-நல்லவிவேகமுள்ளவர்களுக்கு, நாள்தொறும்-தினந்தோறும், தருமத்

திலேநினைவு - தருமத்திலேயே நினைவிருக்கும், மன்னர்க்கு-அரசருக்கு, ராச்சியந்தன்னில்நினைவு-ராஜ்யபாரத்திலேயே நினைவிருக்கும், ஆனகாமுகருக்கு-உண்டாகிய காமுகருக்கு, மாதர்மேலே நினைவு-மாதர்மீதிலேயே நினைவிருக்கும், உள் அஞ்சாத திருடருக்கு-மனமஞ்சாத திருடருக்கு, இங்கு-இவ்விடத்தில், அநுதினம்-தினந்தோறும், களவிலே நினைவு - களவு செய்தலிலேயே நினைவிருக்கும், தனவணிகருக்கு தனத்தையுடைய வணிகர்களுக்கு, ஆதாயமீது நினைவு-லாபத்தின்மேலேயே நினைவிருக்கும், தானம்மிகு-கொடைமிகுந்த, குடியாளருக்கு எல்லாம்-குடியாளர்களுக்கெல்லாம், வேளாண்மைதனில்நினைவு-வேளாண்மை செய்தலிலேயே நினைவிருக்கும், கற்பவர்க்கு - படிப்போர்க்கு, தகு-தகுந்த, கல்விமேல்நினைவு - கல்விமேலேயே நினைவிருக்கும், வேசியர்க்கு-வேசைகளுக்கு, இனிய பொருள் தருவோர்கள்மீது நினைவு-இனிதாகியபொருள் கொடுப்பவர்கள்மேலேயே நினைவிருக்கும், மானபரனுக்கு-மானமுள்ளவனுக்கு, மரியாதைமேல்நினைவு-மரியாதைமேலேயே நினைவிருக்கும், எற்கு-எனக்கு, மாறாது-இடையறாமல், உன்மீதுநினைவு-உன்மேலேயே நினைவிருக்கும், மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே எ-று.

ஞானநெறி-முத்திமார்க்கம். காமுகர்-தூர்த்தர். வணிகர்-வியாபாரிகள் (செட்டிகள்) வேளாண்மை-பயிரிடுதல் உலகவின்பங்களெல்லாவற்றிற்குங் காரணம் பொருளாதலால் அதனை இனியபொருள் என்றார்.

இவர்க்கிது வில்லையெனல்.

வேசைக்கு நிசமில்லை திருடனுக் குறவில்லை
வேந்தர்க்கு நன்றி யில்லை
மிடியற்கு விலைமாதர் மீதுவங் கணமில்லை
மிலேச்சற்கு நிறைய தில்லை
ஆசைக்கு வெட்கமில்லை ஞானியா னவனுக்கு
ளகமில்லை மூர்க்கன் றனக்
கன்பில்லை காமிக்கு முறையில்லை குணமிலோற்
கழகில்லை சித்த சுத்தன்
பூசைக்கு நவிலங்க சுத்தியிலை யாவுமுணர்
புலவனுக் கயலோரிலை
புல்லனுக் கென்று முதி தானுசித மில்லைவரு
புலையர்க் கிரக்க மில்லை
மாசைத் தவிர்த்தமதி முகதெய்வ யானையொடு
வள்ளிக் கிசைந்த வழகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரே சனே.

(இ-ள்.) வேசைக்கு-வேசிக்கு, நிசம் இல்லை - உண்மை யில்லை, திருடனுக்கு-கள்ளனுக்கு, உறவுஇல்லை-உறவினரில்லை, வேந்தர்க்கு நன்றி இல்லை-அரசருக்குஉபகாரமில்லை, மிடியற்கு-தரித்திரனுக்கு, விலைமாதர்மீது-வேசையர்மேல், வங்கணம்இல்லை-சிநேகமில்லை, மிலேச்சற்கு-நீசனுக்கு, நிறையது இல்லை - நிறைகுணமில்லை, ஆசைக்கு வெட்கம் இல்லை-ஆசைக்கு வெட்கமில்லை, ஞானியானவனுக்கு-ஞா

னியாயிருப்பவனுக்கு, உள் அகம் இல்லை-மனத்தில் அகங்காரமில்லை, மூர்க்கன் தனக்கு-மூர்க்கனுக்கு, அன்புஇல்லை-அன்பில்லை, காமிக்கு-காமுகனுக்கு, முறையில்லை-வரிசையில்லை, குணம் இலோர்க்கு-குணமில்லாதவனுக்கு, அழகு இல்லை-அழகில்லை, சித்தசுத்தன் பூசைக்கு - சித்தசுத்தியுடையவன்செய்யும் பூசைக்கு, நவில்-சொல்லப்பட்ட, அங்கசுத்தி இல்லை-சரீரசுத்தியில்லை, யாவும் உணர் புலவனுக்கு-எல்லாமறிந்த புலவனுக்கு, அயலோர் இல்லை-அந்நியரில்லை, புல்லனுக்கு-அற்பனுக்கு, என்றும்-எந்நாளும், உசிதம் அநுசிதம் இல்லை-உசிதாநுசிதங்களில்லை, வருபுலையர்க்கு-வருகின்ற சண்டாளருக்கு, இரக்கம் இல்லை-இரக்கமில்லை, மாசைதவிர்த்த மதிமுகம்-களங்கம்நீங்கின பூர்ணசந்திரன்போலு முகத்தையுடைய, மூதும்பையானையுடனே வள்ளிநாயகிக்கும், இசைந்த - இசைவாகிய, அழகா-அழகனே, மயிலேறிவிளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

உசிதாநுசிதம் தகுதியும் தகுதியின்மையும், அங்கசுத்தி - நீரில்மூழ்குதல் முதலியவற்றா லுண்டாகிற சரீரசுத்தி.

இப்படிப்பட்டவ ரிவரெனல்.

நியாயநெறி தவறும லுலகபரி பாலனை
நடத்துமவ னேயரச னும்
ராசயோ சனைதெரிந் துறுதியா கியசெய்தி
நவிலுமவ னேமந் திரி

நேயமுடனே தன் சரீரத்தை யெண்ணாத
நிர்வாகி யேசூர னும்
நிலைபெறு மிலக்கண மிலக்கிய மறிந்துசொலு
நிபுணகவி யேகவிஞ னும்
ஆயதொரு வாகடந் தாதுவி னிதானமு
மறியுமுதி யோன் வைத்திய
னகமின்றி மெய்யுணர்ந் தைம்புல னொழித்துவிட்
டவனேமெய்ஞ் ஞானி யெனலாம்
மாயவர் சகோதரி மனோன்மணிக் கன்பான
வரபுத்ர வடிவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (கக)

(இ-ள்.) நியாயம்நெறி தவறுமல்-நீதிமுறைமைதப்பாமல், உலகபரிபாலனம் நடத்துமவனே-இராச்சியத்தைநன்றாக ஆளுகைசெலுத்துகின்ற அரசனே, அரசன் ஆம்-அரசனென்று சிறப்பித்துக்கூறப்படுபவனாவன், நிருபர்யோசனைதெரிந்து-அரசர்கட்குரிய ஆலோசனைகளைத்தான் அறிந்து, உறுதி ஆகியசெய்தி|(இராச்சியத்துக்கு)நன்மைவிளைப்பனவாகநிச்சயித்தசெய்கைகளை, நவிலுமவனே-கூறுபவனே, மந்திரி-சரியானமந்திரியாவன்,நேயமுடனே தன் சரீரத்தை எண்ணாத-தனது உடம்பினிடத்தில் அபிமானங்கொண்டு அதன் நன்மையையேகருதாத, நிர்வாகியே-போர்த்தொழிலில் திறமுள்ளவனே, சூரன் ஆம்-சூரனென்றுசொல்லத்தக்கவனும், நிலைபெறும் இலக்கணம் இலக்

கியம் அறிந்து-நிலைபெற்ற இலக்கண நூல்களையும் இலக்கிய நூல்களையும் அறிந்து, சொலும் (அவற்றின் முறைமை தவறாமல்) கவிசொல்லுகிற, நிபுணகவியே-வல்லமையுள்ள பாவலனே, கவிஞன் ஆம்-கவிபாடவல்லவனென்று மதிக்கத்தக்கவனாவன், ஆயது ஒருவாகடம் - தகுதியானதொரு வைத்திய சாஸ்திரத்தையும், தாதுவின் நிதானமும்-நாடியினுடைய நிலையையும், அறியும்-அறிந்த, முதியோன்-அநுபவம்முதிர்ந்தவனே, வைத்தியன்-தக்க வைத்தியனாவன், அகம் இன்றி-அகங்காரமில்லாமல், மெய் உணர்ந்து-தத்துவஞானத்தால் பொருள்களின் நிலைமையை உள்ளபடியறிந்து, ஐம்புலன் ஒழித்துவிட்டவனே-ஐம்புலவாசைகளை அகற்றிவிட்டவனே, மெய்ஞானி எனல்ஆம்-தத்துவஞானியென்றுகொண்டாடத்தக்கவனாவன், மாயவர்சகோதரி-கண்ணபிரானது உடன்பிறந்தவளான, மனோன்மணிக்கு-உமாதேவிக்கு, அன்புஆன வரபுத்ர-அன்புள்ளசிறந்தமகனே, வடிவேலவா - கூர்மையான வேலாயுதத்தையுடையவனே, மயிலேறிவிளையாடு குகனேபுல்வயனீடு மலைமேவு குமரேசனே எ-று.

அஹம்-நான்; தானல்லாத உடம்பை யானென்று கருதி அதனிடத்துப் பற்றுச்செய்தல், அகங்காரமென்னும் அபிமானம் இனி, அகம்-பாவம் என்றுங் கொள்ளலாம். மெய்யுணர்தல்-பிறப்பு முத்திகளையும் அவற்றின் காரணங்களையும் உண்மையாக அறிதல்.

பார்வதியினது அம்சவிசேஷமான துர்க்கை, விஷ்ணு கிருஷ்ணனாய் வசுதேவர் மனைவியானதேவகிவயிற்றில் அவ

தரித்தவுடனே அப்பெருமானது விருப்பத்தின்படிதான் நந்தகோபர்மனைவியான யசோதையின்வயிற்றில்ஒருபெண்குழந்தையாய்ப் பிறந்ததனாலும், கண்ணன் கட்டளைப்படி வசுதேவர் எவருமறியாமல் கண்ணனாகிய ஆண்குழந்தையை யசோதையினிடத்திற்கொண்டுபோய்விட்டு அங்கிருந்த துர்க்கையாகியபெண்குழந்தையை எடுத்துக்கொண்டுவந்து அக்குழந்தையையே தமக்குப் பிறந்ததாகச் சொல்லிக் கம்சனுக்குக்காட்டியதனாலும்,இப்படித் துர்க்கைக்குத்தந்தையான நந்தகோபர் துர்க்கையின்முன்பிறந்தவனான கண்ணபிரானை வளர்த்த தந்தையாகுதலாகும்; பார்வதி திருமாலின் தங்கையெனப்படுவள், அப்பார்வதியின்குமாரனான முருகனை 'திருமாலின்மருமகன்' என்பதும் இவ்வுறவுமுறைபற்றியதே. மனோன்மணி-மனோந்மநீ என்ற விடசொல்லின் விகாரம். (பகைவரது)மனத்தைக் கலக்குதல்பற்றிச் சிவபிரானுக்கு மனோன்மனென்று ஒருபெயராதலால் (இது, மநஸ் உந்மந என்பவைபுணர்ந்தது) மனோன்மநீ என்பது அதன்பெண்பாலாய் அத்தன்மையுடையளான பார்வதியைக் குறிக்கும். வரபுத்ரன் அழகிலும் ஆற்றலிலும் சிறந்த குமாரன். வடித்தல்-நெருப்பிலிட்டுக் காய்ச்சியடித்துக் கூராக்குதல். இனி-வடிவேல்-தேர்ந்தெடுத்தவேல் என்றுமாம்; சிறந்தவேல் என்பது கருத்து. சிவபிரான் குமாரனைப் போருக்கு அனுப்பும்பொழுது ஒப்புயர்வற்றதொரு வேலாயுதத்தைக் கொடுத்தனுப்ப, அதுகொண்டு முருகன் போர்வெல்லுதல்பற்றி, வேலவனென்று அவனுக்கு ஒரு பெயர்.

விரைந்தடக்கத் தருவன விவையெனல்.

அக்கினியை வாய்முந்து தூர்ச்சனரை வஞ்சமனை
யாளைவளர் பயிர்கொள் களையை
யஞ்சா விரோதிகளை யனியாய முடையோரை
யகிர்த்தியப் பெண்களார்ப்பைக்
கைக்கினிய தொழிலாளி யைக்கொண்ட வடிமையைக்
களவு செய்யுந் திருடரைக்
கருதிய விசாரத்தை யடக்கமில் பசிசையைக்
கடிதான கோபந் தனை
மெய்க்கினித லாப்பிணியை யவையுதா சீனத்தை
வினைமூண் டிடுஞ் சண்டையை
விஷமேறு கோரத்தை யன்றடக் குவதலான்
மிஞ்சிவிட லாகாது காண்
மைக்கினிய கன்னிகுற வள்ளிதெய் வானையை
மணஞ்செய்த பேரழகனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (௧௨)

(இ-ள்.) அக்கினியை-நெருப்பையும், வாய்முந்து தூர்ச்சனரை-வாய்முந்திப்பேசுகிற துஷ்டசனங்களையும், வஞ்சம்மனையாளை-கபடத்தையுடையமனையாளையும், வளர்பயிர்கொல்களையை-வளராநின்ற பயிரையழிக்கிறகளையையும், அஞ்சாவிரோதிகளை-அஞ்சாதபகைவரையும், அநியாயம் உடையோரை-அநியாயமுள்ளவர்களையும், அகிர்த்தியப்

பெண்கள்-கெட்டசெய்கையுள்ளபெண்களுடைய ஆரவாரத்தையும், கைக்கு இனியதொழிலாளியை-கைக்கினிதாகிய வேலைக்காரனையும், கொண்ட அடிமையை-கொண்ட அடிமையையும், களவுசெய்யும் திருடரை-திருடுகிற திருடரையும், கருதியவிசாரத்தை-நினைப்பிலுண்டாகிற விசாரத்தையும், அடக்கம் இல் பலிசையை-அடக்கமில்லாத சிறுபெண்ணையும், கடிதானகோபந்தனை-வேகமாகு கோவத்தையும், மெய்க்கு-சரீரத்துக்கு,இனிதுஅல்லாபிணியை இனிதாகாத நோயையும், அவைஉதாசினத்தை-சபையாரது உதாசீநவார்த்தைகளையும், வினைமூண்டிடும் சண்டையை-வினைமூளத்தக்க சண்டையையும், விஷம்ஏறுகோரத்தை-விஷமேறுகிற கொடுமையையும்,அன்று-அப்பொழுதே, அடக்குவது அல்லாமல்-அடக்குவதேயன்றி, மிஞ்சவிடலாகாது-அதிகரிக்கவிடப்படாது,மைக்குஇனியகண்ணி - மையினால் அழகுபெற்ற கண்களையுடையவளாகிய, குறவள்ளி-குறவள்ளியையும்,தெய்வானையை-தெய்வானையையும், மணம்செய்த-மணஞ்செய்துகொண்ட, பேரழகனே-கட்டழகனே, மயிலேறி விளையாடு குகனேபுல்வயனீடு மலைமேவு குமரேசனே. எ-று.

கொல்லுதல்-அழித்தல், கிர்த்தியம்-செய்கை, கொண்டவடிமை-முறியாள், பாலிகை - சிறுபெண், அதுபலிசையெனக் குறுக்கலாயிற்று. உதாசீநம்-வெறுப்பு, வினைதீவினை, (பாவம்) கோரம்-கடுமை (வேகம்.)

இவர்க்கிது துரும்பெனல்.

தாராளமாகக் கொடுக்குந் தியாகிக
டமக்குநற் பொரு டுரும்பு
தன்னுயிரை யெண்ணுத சூரனுக் கெதிராளி
தளமெலா மொரு துரும்பு
பேரான பெரியருக் கற்பரது கையினிற்
பிரயோசனந் துரும்பு
பெரிதான மோக்ஷசிந் தனையுள் ளவர்க்கெலாம்
பெண்போக மொரு துரும்பு
தீராத சகலமும் வெறுத்ததுற விக்குவிறல்
சேர்வேந்த னொரு துரும்பு
செய்யகலை நாமகள் கடாக்ஷமுள் ளோர்க்கெலாம்
செந்தமிழ்க் கவி துரும்பாம்
வாராரு மணிகொண்முலை வள்ளிதெய் வானையை
மணம்புணரும் வடிவேலவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (௧௩)

(இ-ள்.) தாராளமாகக்கொடுக்கும்-மிகுதியாகக்கொடுக்கிற, தியாகிகள் தமக்கு-தியாகிகளுக்கு, நல்பொருள்-துரும்பு-நல்பொருளானது துரும்பாகும், தன் உயிரை எண்ணுத சூரனுக்கு-தன்உயிரை யொருபொருளாய் மதிக்காதசூரனுக்கு, எதிராளி - பகைவனது, தளம்எல்லாம்-சேனைகளெல்லாம், ஒருதுரும்பு-ஒரு துரும்பாகும், பே

ரான பெரியருக்கு-பிரபலரான பெரியோருக்கு, அற்பர் தாகையினில் அற்பருடைய கையினின்றும்பெறுகிற,பிர யோஜனம்-லாபம், துரும்பு-துரும்பாகும், பெரிதான-சிறந்ததாகிய, மோக்ஷசிந்தனையுள்ளவர்க்கு எல்லாம்-முத்திவிருப்பமுள்ளவருக்கெல்லாம், பெண்போகம்-மாதரின்பம், ஒருதுரும்பு-ஒருதுரும்பாகும், தீராதசகலமும்-விட்டுநீங்காத எல்லாப்பற்றுகளையும், வெறுத்த துறவிக்கு-வெறுத்த சந்நியாசிக்கு, விறல்சேர்வேந்தன்-வெற்றிபொருந்திய அரசன், ஒருதுரும்பு-ஒருதுரும்பாவான், செய்ய கலை-செவ்வையாகிய கலைகளையுடைய, நாமகள்-சரஸ்வதியின், கடாக்ஷம் உள்ளோர்க்கு எல்லாம்-கிருபையுள்ளவர்களுக்கெல்லாம், செந்தமிழ்கவி - செந்தமிழ்க்கவிபாடுதல், துரும்பு ஆம்-துரும்பாகும், வார் ஆரும்-கச்சுப்பொருந்திய, மணிகொள்முலை-ரத்நாபரணங்களை யணிந்த தனங்களையுடைய, வள்ளிதெய்வானையை - வள்ளிதெய்வானையென்னு மிருவரையும், மணம்புணரும் - மணம்புணர்ந்த, வடிவேலவா-வடிவேலையுடையவனே, மயிலேறி விளையாடு குகனேபுல்வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

தியாகி-கொடையாளி. சூரன்-வீரன் சகலமும் - அகப்பற்றும் புறப்பற்றும். கடாக்ஷம் - கடைக்கண்பார்வை அணிகொள் முலையெனப்பிரித்து அழகைக்கொண்டமுலையென்றுமுரைக்கலாம் வடிவேல்-வடித்தவேல். (கூரிட்வேல்.)

இதனைவிளக்குவ திதுவெனல்.

பகல்விளக் குவதிரவி நிசிவிளக் குவதுமதி
பார்விளக் குவது மேகம்
பதிவிளக் குவதுபெண் குடிவிளக் குவதரசு
பரிவிளக் குவது வேகம்
இகல்விளக் குவதுவலி நிறைவிளக் குவதுநல
மிசைவிளக் குவது சுதியு
ரிடம்விடக் குவதுகுடி யுடல்விளக் குவதுண்டி
யினியசொல் விளக்குவ தருள்
புகல்விளக் குவதுகொடை தவம்விளக் குவதறிவு
பூவிளக் குவது வாசம்
பொருள்விளக் குவதுதிரு முகம்விளக் குவதறிவு
புத்தியை விளக்குவது நூல்
மகம்விளக் குவதுமறை சொல்விளக் குவதுநிசம்
வாவியை விளக்குவது நீர்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (கச)

(இ-ள்.) பகல்விளக்குவது இரவி-பகற்காலத்தைவிள க்குவது சூரியன், நிசிவிளக்குவதுமதி - இராக்காலத்தை விளக்குவது சந்திரன், பார்விளக்குவதுமேகம் - பூமியை விளக்குவது மேகம், பதிவிளக்குவதுபெண்-வீட்டைவிள க்குவதுபெண், குடிவிளக்குவது அரசு-குடிகளைவிளக்கு வது அரசன், பரிவிளக்குவதுவேகம்-குதிரையைவிளக்கு

வது அதன்வேகம், இகல்விளக்குவது வலி-பகையைவிள க்குவதுபலம், நிறைவிளக்குவது நலம்-நிறையை விளக்கு வது நன்மை, இசைவிளக்குவது சுதி-இராகத்தைவிளக்கு வது சுதி, ஊரிடம்விளக்குவதுகுடி - ஊரிடத்தைவிளக்கு வது குடி, உடல்விளக்குது உண்டி-உடம்பை விளக்குவது உணவு, இனியசொல் விளக்குவது அருள்-இன்சொல்லை விளக்குவது அருள்,புகல்விளக்குவது கொடை-புகலைவிள க்குவது ஈகை, தவம்விளக்குவது அறிவு-தவத்தைவிளக்கு வது அறிவு, பூவிளக்குவதுவாசம்-மலரைவிளக்குவது ம ணம், பொருள்விளக்குவது திரு - பொருளைவிளக்குவது திருமகள், முகம்விளக்குவது நகை-முகத்தைவிளக்குவது சிரிப்பு, புத்தியைவிளக்குவது நூல்-புத்தியைவிளக்குவது சாஸ்திரம், மகம்விளக்குவது மறை- யாகங்களைவிளக்கு வது வேதம், சொல்விளக்குவது நிசம்-சொல்லை விளக்கு வது உண்மை, வாவியை விளக்குவதுநீர்-தடாகத்தைவிள க்குவது நீர், மயிலேறி விளையாடு குகனேபுல்வயலீடு மலை மேவு குமரேசனே.

இரவிமுதலியவற்றோடு ஆகும் என்றொரு சொல்வரு வித்து இறுதியிற் கூட்டியுரைத்துக்கொள்க பதி கணவன் எனினுமமையும். நலம்-நற்குணம் புகல்-அடைக்கலம்புகு ந்தவன்.

பிறப்பிட நன்மையால் நன்மைபெறுமை.

சிங்கார வனமதி லுதிப்பினும் காகமது
  தீஞ்சொலபுகல் குயிலாகுமோ

திரையெறியும் வாவியிற் பூத்தாலு மேகொட்டி
செங்கஞ்ச மலராகுமோ
அங்கான கத்திற் பிறந்தாலு முயலான
தானையின் கன்றாகுமோ
வாண்மையா கியநல்ல குடியிற்பிறந்தாலு
மசடர்பெரி யோராவரோ
சங்காடு பாற்கடல் பிறந்தாலு நத்தைதான்
சாலக்கி ராம மாமோ
தடமேவு கடனீரி லேயுப்பு விளையினுஞ்
சாரசர்க் கரையாகுமோ
மங்காத செந்தமிழ்க் குறுமுனிக் குபதேசம்
வைத்தமெய்ஞ் ஞான குருவே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (௧௫)

(இ-ள்.) சிங்காரவனமதில் - சிங்காரத்தோட்டத்தில், உதிப்பினும்-பிறந்தாலும், காகமது-காகமானது, தீசொல்புகல்-இன்சொற் சொல்லுகிற, குயில் ஆகுமோ-குயிலாகுமா, (ஆகாது,) திரைஎறியும்-அலைவீசுகிற, வாவியில்பூத்தாலும்-தடாகத்தில் மலர்ந்தாலும், கொட்டி-கொட்டிப்பூவானது, செங்கஞ்சமலர் ஆகுமோ-செந்தாமரைப்பூவாகுமா (ஆகாது), அம்கானகத்தில் பிறந்தாலும் - அழகிய காட்டிற் பிறந்தாலும், முயலானது-முசலானது, ஆனையின்கன்று ஆகுமோ-யானைக்கன்றாகுமா (ஆகாது), ஆண்மையாகிய நல்லகுடியிற் பிறந்தாலும்-ஆண்மையுள்ள நற்குடியிற்பிறந்தாலும், அசடர்-மூடர், பெரியோர் ஆவரோ

பெரியோராவரோ (ஆகார்) சங்குஆடு-சங்குகள் விளையாடுகிற, பாற்கடல் பிறந்தாலும்-பாற்கடலிற்பிறந்தாலும், நத்தை-நத்தையானது, சாலக்கிராமம் ஆமோ-சாலக்கிராமம் ஆகுமா (ஆகாது) தடம்மேவு-பெருமைபொருந்திய கடல்நீரிலே-கடனீரில், உப்புவிளையினும்-உப்புவிளைந்தாலும், சாரம்-சாரமுள்ள, சர்க்கரை ஆகுமோ-சர்க்கரையாகுமா (ஆகாது), மங்காத-அழியாத, செந்தமிழ்-செந்தமிழை, குறுமுனிக்கு - அகஸ்தியமுனிவனுக்கு, உபதேசம் வைத்த-உபதேசித்த, மெய்ஞ்ஞானகுருவே-உண்மையான ஞானாசிரியனே, மயிலேறிவிளையாடு குகனேபுல்வயனீடு மலைமேவு குமரேசனே. எ-று.

சிங்காரம்-அலங்காரம், தீ-மதுரம், அம்கானகத்தில் என்றது பெருங்காட்டில் என்றபடி, *அசடர்-குற்றமுடையவர், அசடு-குற்றம், சாரம்-இனிமை.

பலர்க்கும் பயன்படுவன.

கொண்டல்பொழி மாரியு முதாரநற் குணமுடைய
கோவுமுரு ணியினீருங்
கூட்டமிடு மம்பலத் தருதருவி னீழலுங்
குடியாளர் விவசாயமும்
கண்டவர்க ளெல்லாம் வரும்பெருஞ் சந்தியிற்
கனிபல பழுத்த மரமுங்
கருணையுட னேவைத் திடும்தணீர்ப் பந்தலுங்
காவேரி போலாற்று மும்
விண்டலத் துறைசந்தி ராதித்த கிரணமும்
வீசுமா ருத சீதமும்

விவேகியெனு நல்லோ ரிடத்திலுறு செல்வமும்
 வெகுசனர்க் குபகார மாம்
வண்டிமிர் கடப்பமலர் மாலையணி செங்களப
 மார்பனே வடிவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேசனே. (௧௬)

(இ-ள்.) கொண்டல்பொழிமாரியும் - மேகம் பொழிகிறமழையும், உதாரம் - ஔதார்யமென்கிற, சற்குணம் உடைய-நற்குணமுள்ள, கோவும்-அரசனும், ஊருணியின் நீரும்-ஊருணியிலுள்ள நீரும், கூட்டம் இடும்-கூட்டங்கூடுகிற, அம்பலத்துஉறு-அம்பலத்திலுள்ள, தருவின்நீழலும் மரநிழலும், குடியாளர்-குடித்தனக்காரருடைய, விவசாயமும்-பயிர்த்தொழிலும், கண்டவர்கள்எல்லாம்வரும்-கண்டவரெல்லாரும் வருகிற, பெருஞ் சந்தியில்-பெரியசந்தியில், கனிபலபழுத்தமரமும் - பலபழங்களைப் பழுத்தமரமும், கருணையுடனே-அருளோடு, வைத்திடும்-வைக்கப்படுகிற, தணீர்பந்தலும் - தண்ணீர்ப்பந்தலும், காவேரியாற்றை நிகர்க்கிற, ஊற்றமும்-ஊற்றும், விண்தலத்து-ஆகாயத்தினிடத்தில், ஊரை-சஞ்சரிக்கிற, சந்திராதித்த கிரணமும்-சந்திரசூரியர்களுடைய கிரணங்களும், வீசும்-அடிக்கின்ற, மாருதம்-காற்றினது, சீதமும்-குளிர்ச்சியும் விவேகியென்னும் - விவேகியென்கிற, நல்லோனிடத்தில் உறு-நல்லவனிடத்திற் பொருந்திய, செல்வமும் - பொருளும், வெகுசனர்க்கு-அநேக சனங்களுக்கு, உபகாரம் ஆம்-உபகாரமாகும்-வண்டு இமிர்-வண்டுகள் ஒலித்தற்கிடமாகிய, கடப்பமலர்மாலை-கடப்பமலர்மாலையை, அணி-

தரித்த, செங்களபம்-செஞ்சந்தனமணிந்த, மார்பனே-மார்பையுடையவனே, வடிவேலவா-வடிவேலவனே, மயிலேறி விளையாடு குகனே புல்வயலீடு மலைமேவு குமரேசனே. எ-று.

உதாரம்-ஈகைக்குணம், ஊருணி - ஊராரெல்லாராலும் உண்ணப்படுகிற நீரையுடையகுளம். அம்பலம்-பொதுவிடம் சந்தி - நாற்றெருக்கூடுமிடம். சந்திராதித்தகிரணம்-நிலவுவெளியில். விவேகி-அறிவுள்ளவன். இமிர்தல்-ஒலித்தல்.

தாமழியினுங் குணமழியாதவை.

தங்கமா னதுதழலி னின்றுருகி மறுகினுந்
 தன்னொளி மழுங்கிடாது
சந்தனக் குறடுதான் மெலிந்துதேய்ந் தாலுமோ
 தன்மணங் குன்றிடாது
பொங்கமிகு சங்குசெந் தழலில்வெந் தாலுமோ
 பொலிவெண்மை குறைவுறாது
போதவே காய்ந்துநன் பால்குறுகி னாலும்
 பொருந்துசுவை போய்விடாது
துங்கமணி சாணையிற் றேய்ந்துவிட் டாலுந்
 துலங்குகுண மொழியாது பின்
றொன்மைதரு பெரியோர் மடிந்தாலு மவர்களது
 தூயநிறை தவறுகுமோ
மங்களகல் யாணிகுற மங்கைசுர குஞ்சரியை
 மருவுதிண் யுயவாசனே

மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (கஎ)

(இ-ள்.) தங்கமானது - பொன்னானது, தழலில்-நெருப்பில், நின்று உருகிமறுகினும் - நின்றுருகியாடினாலும், தன் ஒளிமழுங்கிடாது-தனது ஒளிகுறையாது, சந்தனக்குறடு-சந்தனக்கட்டையானது, மெலிந்துதேய்ந்தாலும்-மெலிந்து தேய்ந்திட்டாலும், தன் மணம்குன்றிடாது-தனது மணங்குறையாது, பொங்கம்மிகு சங்கு-அழகுமிகுந்த சங்கானது, செந்தழலில் வெந்தாலும்-செந்தீயில்வெந்தாலும், பொலிவெண்மை குறைவுறாது-விளங்குகிற வெண்ணிறமானது குறைவுபடாது, நன்பால்-நல்லபாலானது, போதகாய்ந்து-மிகவுங்காய்ந்து, குறுகினாலும் - அளவிற்குறைந்தாலும், பொருந்துசுவை போய்விடாது, துங்கம் மணி-பரிசுத்தமான ரத்நம், சாணையில் தேய்ந்துவிட்டாலும்-சாணையிலிட்டுத் தேய்ந்துபோனாலும், துலங்கு குணம்-விளங்குகின்ற குணமானது, ஒழியாது-(அதைவிட்டு) நீங்காது, பின்-பிறகு, தொன்மை தரு பெரியோர் - பழமையாகிய பெரியோர்கள், மடிந்தாலும்-மாண்டுபோனாலும், அவர்களது-அவர்களுடைய, தூயநிறை தவறு ஆகுமோ - பரிசுத்தமாகிய நிறைகுணம் தவறிப்போகுமோ, மங்களகல்யாணி-மங்கள கல்யாணியாகிய, குறமங்கை-குறப்பெண்ணாகிய வள்ளிநாயகியையும், சுரகுஞ்சரியை-தெய்வயானையையும், மருவி-கூடுகின்ற, திண்புயவாசனே பரிமளிக்கிற திண்டோளனே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே. எ-று.

தங்கம்-உயர்ந்தபொன், மழுகுதல்-ஆடுதல், குறடு-கட்டை. பொங்கம்-அழகு, குறைவுறு-ஒருசொல், பால் என்றதனுல்சுவை இன்சுவைக்காயிற்று, மணிக்கு ஒளிவிடுங்குணமியற்கையாதலால் தூலங்குகுணம் என்றார். நிறை-இங்குப்புகழையுணர்த்தும், மங்கள கல்யாணி-சுபகரமான கல்யாணகுணமுள்ளவள்.

நரகில்வீழ்வோர்.

மன்னரைச் சமரில்விட் டோடினவர் குருமொழி
மறந்தவர் கொலைப் பாதகர்
மாதா பிதாவைநிந் தித்தவர்கள் பரதார
மருவித் திரிந்தபேர்கள்
அன்னங் கொடுத்தபே ருக்கழிவை யெண்ணினே
ரரசடக் கிய வமைச்ச
ராலய மிகழ்ந்தவர்கள் விசுவாச காதக
ரருந்தவர் தமைப்பழித் தோர்
முன்னுதவி யாய்ச்செய்த நன்றியை மறந்தவர்
முகஸ்துதி வழக் குரைப்போர்
முற்றுசிவ பத்தரை நடுங்கச் சினத்தவர்கள்
முழுதும்பொ யுரைசொல்லு வோர்
மன்னொருவர் வைத்தபொரு ளபகரித்தோ ரிவர்கண்
மாநரகில் வீழ்வ ரன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயலீடு
மலைமேவு குமரேச னே. (கஅ)

(இ-ள்.) மன்னரை-தமது அரசரை, சமரில்விட்டு-போர்க்களத்தில் தனியேவிட்டு, ஓடினவர்-ஓடினவர்களும், குருமொழிமறந்தவர்-குருவாக்கியத்தை மறந்தவர்களும், கொலைப்பாதகர் - கொலைப்பாதகரும், மாதாபிதாவை நிந்தித்தவர்கள்-தாய்தந்தையரை நிந்தனைசெய்தவர்களும், பரதாரம்-பிறர்மனைவியரை, மருவிதிரிந்தபேரும்-கூடித்திரிந்த பேர்களும், அன்னம் கொடுத்தபேருக்கு-சோறிட்டவர்களுக்கு, அழிவைஎண்ணினோர்-கெடுதிநினைத்தவர்களும், அரசு அடக்கிய அமைச்சர்-அரசரையடக்கிய மந்திரிகளும், ஆலயம் இகழ்ந்தவர்கள் - தேவாலயங்களை யவமதித்தவர்களும், விசுவாசகாதகர்-விசுவாசகாதகர்களும், அருந்தவர் தமைப் பழித்தோர்-அரியதவத்தோரைப்பழித்தவர்களும். முன்-முன்னே, உதவியாய்செய்த-உதவியாக ஒருவர்செய்த, நன்றியை மறந்தபேர்-உபகாரத்தை மறந்தபேர்களும், முகஸ்துதிவழக்கு உரைப்போர்-தாக்ஷிண்யத்தின்பொருட்டு வழக்குரைப்பவரும், முற்றுஞ் சிவபக்தரை - முதிர்ந்த சிவ பக்தர்களை, நடுங்கசினத்தவர்கள்-நடுங்கும்படி கோவித்தவர்களும், முழுதும் பொய்உரைசொல்லுவோர்-முழுதும்பொய்யையே பேசுவோரும், மன-மிகுதியாக, ஒருவர் வைத்தபொருள்-ஒருவர்வைத்த பொருளை, அபகரித்தோர்-அபகரித்துக்கொண்டவர்களும் ஆகிய, இவர்கள்-இவர்கள்யாவரும், மாநரகில்-பெரிய நரகத்தில், வீழ்வர் அன்றோ - விழுவார்களல்லவா, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே. எ-று.

கொலைப்பாதகர் கொல்லுந்தொழிலையேசெய்கிறபாவிகள், சம்சாரம்-மனைவி, அரசடக்குதல்-அரசரைத் தம்

வசமாகச்செய்துகொள்ளல், விசுவாசகாதகர்-நம்பிக்கை துரோகஞ்செய்வோர், முகஸ்துதி வழக்குரைப்போர்-தாக்ஷிண்யமுள்ளவர் பட்சமாகவழக்குப்பேசுவோர், ஒருவர் வைத்தபொருளபகரித்தோர்-காப்பாற்றிக்கொடுக்கும்படி ஒருவர்கொண்டுவந்துவைத்தபொருளைக் கவர்ந்துகொண்டு இல்லையென்று சொல்லுவோர்.

சரீரசுகம்.

மாதத் திரண்டுவிசை மாதரைப் புல்குவது
மறுவறுவி ரோசனந் தான்
வருஷத் திரண்டுவிசை தைலந் தலைக்கிடுதல்
வாரத் திரண்டு விசையாம்
சூதறிவி னுடுதனது வயதினுக் கிணையவொரு
மொய்குழ லுடன்சை யோகம்
முற்றுதயிர் காய்ச்சுபா லீர்மோ ருருக்குநெய்
முதிரா வழுக்கை யிளநீர்
சாதத்தி லெவ்வளவா னாலும் புசித்தபின்
சுகந் தனக்கு வாங்கல்
தயையாக வுண்டபி னுலாவலிவை மேலவர்
சரீரசுக மாமென்பர் காண்
மாதவகு மாரிசா ரங்கத் துதித்தகுற
வள்ளிக் குகந்த சரசா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (௧௬)

(இ-ள்.) மாதத்து இரண்டுவிசை-மாதத்திற்கிரண்டுதரம், மாதரைபுல்குவது-மாதரைப்புணர்வது, வருஷத்து இர

ண்டுவிசை-வருஷத்துக்கிரண்டுதரம்,மறு அறுவிரோசநம்-குற்றமறுதற்குரிய விரோசநத்துக்கெடுத்துக்கொள்ளுதல், வாரத்து இரண்டுவிசை-வாரத்துக்கிரண்டுதரம், தலைக்குதைலமிடுதல்-தலைக்கு எண்ணெயிட்டுக்கொள்ளுதல், மூதறிவினொடு-பேரறிவுடன், தனதுவயதினுக்குஇளைய-தன்வயதுக் கிளையவளாகிய, ஒருமொய்குழலுடன்-ஒருபெண்ணோடு, சையோகம்-புணர்ச்சிசெய்தல், முற்றுதயிர்-முதிர்ந்ததயிர், காய்ச்சுபால்-காய்ச்சினபால், நீர்மோர் - நீர்மோர், உருக்குநெய்-உருக்கினநெய், முதிராவழுக்கை இளநீர்-முதிராத வழுக்கையுள்ளஇளநீர், சாதத்தில்-சோற்றில், எவளவாகிலும்-எவ்வளவாயினும், புசித்தபின்-உண்டபிறகு, தாகந்தனக்குவாங்கல்-தாகத்துக்குத்தண்ணீர்பருகுதல், தையயாகவுண்டபின் உலாவல்-அன்போடு உண்டபிறகு உலாவுதல்,(என்னும்) இவை-இவைகளெல்லாம், மேலவர்-மேலோர்கள், சரீரசுகம்ஆம்என்பர்-சரீரசுகத்துக்குக் காரணங்களாகும்என்றுசொல்லுவர், மாதவகுமாரி பெரியதவசியின்மகளாய், சாரங்கத்துஉதித்த-மானினிடத்துப்பிறந்த, குறவள்ளிக்கு-குறவள்ளிநாயகிக்கு, உகந்த சரசா-விருப்பமுள்ள சரசனே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவுகுமரேசனே. எ-று.

புல்குதல்-புணதர். மறு-வயிற்றிலுள்ள கல்மஷங்கள் விரோசநம்-பேதி. மொய்குழல்-வினைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. நீர்மோர்-நீர்விட்டுவிளாவினமோர். உருக்குநெய்-உண்ணும்போதுருக்கிவார்த்துக்கொள்ளுகிற நெய். சாதம்-சோறு.

யார்க்கு மனுபோகம் விடாமை.

தேசுபெறு மேருப்ர தக்ஷிணஞ் செய்துமதி
தேகவடு நீங்க வில்லை
திருமா லுறங்கிடுஞ் சேடனுக் குவணன்
செறும்பகை யொழிந்த தில்லை
ஈசன் கழுத்திலுறு பாம்பினுக் கிரைவே
றிலாமலே வாயு வாகு
மினியகண் ணாகிவரு பரிதியா னவனுக்
கிராகுவோ கனவி ரோதி
ஆசிலாப் பெரியோ ரிடத்தினி லடுக்கினு
மமைத்தபடி யன்றி வருமோ
வவரவர்க ளனுபோக மனுபவித் திடல்வேண்டு
மல்லால் வெறுப்ப தெவரை
வாசவனு மும்பரனை வரும்விசய சயவென்று
வந்துதொழு தேத்து சரணு
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (உ0)

(இ-ள்.) தேசுபெறு-ஒளிபொருந்திய, மேரு-மேருமலையை, பிரதக்ஷிணம்செய்தும்-பிரதக்ஷிணம்பண்ணியும்-மதி சந்திரன், தேகவடுநீங்கவில்லை (தன்சரீரத்திலுள்ள களங்கம்நீங்கவில்லை, திருமால் உறங்கிடும் சேடனுக்கு-திருமால்படுத்துறங்கப்பெற்ற ஆதிசேஷனுக்கு, உவணன்-கருடனது, செறும்பகை-கொல்லும்பகையானது, ஒழிந்ததில்லை

நீங்கினதில்லே, ஈசன்கழுத்தில்உறுபாம்பினுக்கு-சிவபெரு மானது கழுத்திலுள்ள பாம்புக்கு, வேறு இரை இல்லாம லே-வேறு ஆகாரமில்லாமலே, வாயு ஆகும்-வாயுவாயிரு க்கின்றது, இனியகண்ணுகிவரு-இனியகண்ணுய்வந்த, பரி தியானவனுக்கு-சூரியனுனவனுக்கு,இராகுவோ-ராகுவெ ன்னும்பாம்போ, கனவிரோதி-பெரும்பகை,ஆசுஇல்லா- குற்றமில்லாத, பெரியோரிடத்தினில் அடுக்கினும்-பெரி யோரிடத்தில்அடுத்தாலும், அமைத்தபடியன்றிவருமோ அமைத்தபடியேயன்றி வேறுவிதமாயுண்டாகுமோ, அவ ரவர்கள்-அவரவர்களுடைய, அநுபோகம்-அநுபவம், அ நுபவித்திடல்வேண்டும்-அநுபவித்திடவேவேண்டும், அல் லால்-அப்படி செய்யாமல், எவரைவெறுப்பது - எவரை வெறுத்துக்கொள்வது, வாசவனும்-இந்திரனும், உம்பர் அனைவரும்-தேவர்களெல்லாரும், விசயசயவென்று-விசய சயவென்று, வந்துதொழுது-வந்துவணங்கி, ஏத்து-துதிக் கின்ற, சரணு-திருவடியை யுடையவனே, மயிலேறி விளை யாடு குகனேபுல் வயலீடு மலைமேவு குமரேசனே, எ-று.

பிரதக்ஷிணம்செய்தல்-வலம்வருதல். அமைத்தபடி அவரவர்செய்த நல்வினை தீவினைகளுக்கேற்றவாறு இறை வனால் நியமிக்கப்பட்டபடி அநுபவம்-நுகர்ச்சி.

இதுவின்றி யிது சிறவாதெனல்.

குருவிலா வித்தைகூ றறிவிலா வாணிபங்
குணமிலா மனைவி யாசை

குடிநல மிலாநாடு நீதியில் லாவரசு
குஞ்சரமி லாத வெம்போர்
திருவிலா மெய்த்திறமை பொறையிலா மாதவந்
தியானமில் லாத நிஷ்டை
தீபமில் லாதமனை சோதரமி லாதவுடல்
சேகரமி லாத சென்னி
உருவிலா மெய்வளமை பசியிலா வுண்டியுக
ளுண்மையில் லாத வசனம்
யோசனையி லாமந்த்ரி தைரிய மிலாவீர
முதவியில் லாத நட்பு
மருவிலா வண்ணமலர் பெரியோ ரிலாதசபை
வையத் திருந்தென் பயன்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (உக)

(இ-ள்.) குரு இல்லாவித்தை-குருவில்லாத வித்தையும், கூர் அறிவு இல்லாவணிகம்-நுட்பமாகிய அறிவில்லாதவர்த்தகமும், குணம்இல்லா மனைவி-நற்குணமில்லாத மனைவியும், ஆசைகுடிநலம் இல்லாநாடு - அன்புள்ளகுடிகளின் நன்மையில்லா நாடும், நீதியில்லாஅரசு-நீதியற்றஅரசாட்சியும், குஞ்சரம்இல்லாதவெம்போர்-யானையில்லாத கொடியயுத்தமும், திரு இல்லா மெய்த்திறமை - செல்வமில்லாத மெய்வலியும், பொறைஇல்லாமாதவம்-பொறுமையில்லாத பெருந்தவமும், தியாநம்இல்லாதநிஷ்டை - தியாநமில்

லாத நிஷ்டையும், தீபம்இல்லாதமனை-விளக்கில்லாத வீடும்; சோதரம்இல்லாதஉடல்-உடன்பிறப்பில்லாதவுடம்பும் சேகரம் இல்லாத சென்னி-முடியில்லாதசிரசும், உருஇல்லா-அழகில்லாத, மெய்வளம்-சரீரவளமும், பசிஇல்லாஉண்டி-பசியில்லாத வுணவும், புகல்-சொல்லப்பட்ட, உண்மை இல்லாதவசநம்-மெய்யில்லாத சொல்லும், யோசனை இல்லாமந்த்ரி-யோசனையில்லாதமந்திரியும், தைரியம்இல்லாவீரம் - தைரியமில்லாத வீரத்தனமும், உதவியில்லாத நட்பு-உதவியில்லாதசிநேகமும், மருஇல்லா - வாசனையில்லாத, வண்ணமலர்-நிறமுள்ளபூவும், பெரியோர்இல்லாதசபை-பெரியோரில்லாதசபையும், வையத்து இருந்து-உலகத்திலிருந்து, பயன்என்-பயன்யாது, மயிலேறிவிளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

தியாகம்-இறைவன்மேலன்பு. சேகரம்-கிரீடம், வண்ணம்-அழகு எனினும்பொருந்தும். என்பயன் என்றவினு ஒருபயனு மில்லையென்னும் பொருளில் வந்தது.

பகைக்கப்படாதவ ரிவரென்ல்.

அரசர்பகை யுந்தவம் புரிதபோ தனர்பகையு
மரியகரு ணீகர் பகையு
மடுத்துக் கெடுப்போர் கொடும்பகையு முட்பகையு
மருளிலாக் கொலைஞர் பகையும்
விரகுமிகு மூரிலுள் ளோருடன் பகையுமிகு
விகடப்ர சங்கி பகையும்

வெகுசனப் பகையுமந் திரவாதி யின்பகையும்
விழைமருத் துவர்கள் பகையும்
உரமருவு கவிவாணர் பகையுமா சான்பகையு
முறவின்முறை யார்கள் பகையு
முற்றதிர வியமுளார் பகையுமந் திரிபகையு
மொருசிறிது மாகாது காண்
வரநதியின் மதலையென வினியசர வணமிசையில்
வருதருண சிறு குழவியே
பயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (உஉ)

(இ-ள்.) அரசர்பகையும் - அரசர்களுடையபகைமையு
ம், தவம்புரி-தவத்தைச்செய்கிற, தபோதநர்பகையும்-த
வச்செல்வர்களுடைய பகைமையும், அரிய-அருமையாகி
ய, கருணிகர்பகையும் - கணக்கர்களுடையபகைமையும்,
அடுத்துகெடுப்போர் கொடும்பகையும்-சிநேகித்துக்கெடு
ப்போர்களுடைய கொடியபகைமையும், உள்பகையும்-
உட்பகைமையும், அருள்இல்லா-கிருபையில்லாத, கொலை
ஞர்பகையும்-கொலைசெய்வோர்களுடைய பகைமையும்,
விரகுமிகும்-வல்லமைமிகுந்த, ஊரிலுள்ளோருடன்பகை
யும்-ஊரரோடுகொள்ளும்பகைமையும், மிகுவிகடப்ரச
ங்கிபகையும்-மிகுதியாகிய விகடப்ரசங்கியின்பகைமையும்
வெகுசனப்பகையும் - அநேகசனங்களோடுகொள்ளும்ப
கையும், மந்திரவாதியின்பகையும்-மந்திரவாதியின் பகை
மையும், விழைமருத்துவர்கள் பகையும்-விரும்புதற்குரிய

வைத்தியர்களோடுகொள்ளும் பகைமையும், உரம்மருவு கவிவாணர்பகையும்-வலிமைபொருந்திய கவிவாணருடைய பகைமையும், ஆசான் பகையும்-ஆசாரியனுடைய பகைமையும், உறவின்முறையார்கள் பகையும்-பந்துக்களுடைய பகைமையும், உற்ற மிகுந்த, திரவியம்உள்ளார் பகையும்-பொருளுடையோரது பகைமையும், மந்திரி பகையும்-மந்திரியோடுகொள்ளும்பகைமையும், ஒருசிறிதும் ஆகாது-ஒருசிறிதாயினுமிருக்கப்படாது, வரநதியின் மதலையென கங்காபுத்திரனென்று சொல்லும்படி, இனிய-இனிதாகிய சரவணம்பொய்கையில்-சரவணப்பொய்கையில், வரு-அவதரித்த, தருணம் - (என்றும்மாறுத) இளமைப்பருவத்தையுடைய, சிறுகுழவியே-சிறியகுழந்தையே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே எ-று.

அரிய கருணீகர் பகையும் என்றது அவர்கள் பகைகொண்டோர் கெடுவது திண்ணமாதலால் அரியவென்ற அடைமொழிகொடுத்தார். ஆற்றலிற் பெரியராகிய அரசரைப்பகைத்தால் அவரால் உடனேயழிதல் தவறாது, அரசன் அன்றுகொல்லும் என்பது பழமொழி. தவத்தாற் பெரியோராகிய முனிவரைப்பகைத்தால் அவர் தவவல்லமையால் சாபானுக்ரஹசக்தியையுடையவராதலால் கோபங்கொண்டு சபித்து அழித்துவிடுவர். ஊர்க்கணக்கரைப்பகைத்தால் அவரால் பலமாறுபாடுகள் செய்யப்பட்டு நஷ்டத்திற்கும் துன்பத்துக்கும் உள்ளாதல் நாட்டில்பிரசித்தம் ஆதலால் அவரதுகொடுமைதோன்ற 'அரிய கரு

ஸரீகர்பகை' என்றார். அடுத்துக்கெடுத்தல் சந்திவிக்கிரக
ம்என்னும் தந்திரம் உட்பகை புறப்பகைவர்க்கு இடருண்
டாக்கிக்கொடுத்து அவர்வெல்லுமளவும் அவர்க்குத்துணை
யாயிருக்கும் பகைவர். 'ஊருடன்பகைக்கின் வேருடன்
கெடும்' ஆகலால் ஊராரோடு பகைகொள்ளலாகாது. அ
றிவும் தந்திரமும் திறமையும் இல்லாரோடு பகைகொண்
டால் பெருந்தீங்கு உண்டாமாதலால், 'விரகுமிகும் ஊரி
லுள்ளோருடன்பகை ஒருசிறிதும் ஆகாது' என்றார்.விக
டக்காரனைப் பகைத்தால், அவன் பலரும் பரிசிக்கும்படி
விளையாட்டாகவே தூஷித்து இவன் குற்றங்களையெல்லா
ம் வெளித்தூற்றுவான்; வெகுசனவிரோதம் பொல்லாது
என்பது வெளிப்படை. மந்திரவாதியுடன்பகைத்தால் அ
வன் மந்திரசக்தியால் கொல்லுவான், மிகவும்நம்பவேண்
டிய வைத்தியரைப்பகைத்தால் அவர் இவனதுநோயைப்
பரிகரிக்காமையோடு அதனை மிகுவிக்கவும் மருந்தில்நஞ்
சிட்டுக் கொல்லவுங்கூடும், கவிவாணரோடு பகைகொண்
டால் அவர் வாழ்த்தவும் வையவும்வல்ல தமதுவாக்குவல்
லமையால் அரம்பாடி அழிப்பர். ஆசாரியனோடு பகை
கொண்டால், அந்தப்பகைமை இம்மையிலும் மறுமையி
லும் கேட்டைத்தரும். வரநதியின் மதலை. இதுபற்றி முரு
கனுக்கு காங்கேயன் என்றொருபெயர்உண்டு, தபோத
நர், விகடப்ரசங்கி, பஹுஜநம், மந்த்ரவாதி, வரநதி, எ
ன்பன வடசொற்கள். தபோதநர் - தவத்தையே செல்வ
மாகக்கொண்டு அதனைப் பாதுகாப்பவர், மருத்துவர்-ம
ருந்துக்கு உரியவர். கவிவாணர்-கவிபாடி வாழ்பவர். வா

ணர் வாழ்நர் என்பதன் மரூஉ, இவ்வாறன்றிக் கவிவாணர் என்பதற்குக் கொடாதவர்மீது வசைக்கவியாகிய வாணத்தைப் பிரயோகிப்பவர் என்றுரைத்தலும்பொருந்தும். தருணம்-பருவம், சிறுகுழவியென மேலேவருதலால் இளமைப்பருவமென் றுரைக்கப்பட்டது.

பேயெனப்படுவோ ரிவரெனல்.

கடனுதவு பேர்வந்து கேட்கும்வே ளையின்முகங்
 கடுகடுக் கின்ற பேயுங்
 கனமருவு பெரியதனம் வந்தவுட னிறுமாந்து
 கண்விழிக் காத பேயும்
அடைவுடன் சத்துருவின் பேச்சைவிசு வாசித்
 தகப்பட் டுழன்ற பேயும்
 ஆசைமனை யாளுக்கு நேசமா யுண்மைமொழி
 யானதை யுரைத்த பேயும்
இடரிலா நல்லோர்கள் பெரியோர் களைச்சற்
 றெண்ணா துரைத்த பேயும்
 இனியபரி தானத்தி லாசைகொண் டொருவற்
 கிடுக்கண்செய் திட்ட பேயும்
மடமனை யிருக்கப் பரத்தையைப் புணர்பேயும்
 வசைபெற்ற பேய்க ளன்றோ
 மயிலேறி விளையாடு குகனேபுல் வயலீடு
 மலைமேவு குமரேசனே. (உரு)

(இ-ள்.) கடனுதவுபேர்-கடன்கொடுத்தபேர்கள், வந்துகேட்கும்வேளையில்-வந்துகேட்கும் சமயத்தில், முகம்

கடுகடுக்கின்றபேயும்-முகம் கடுகடுத்துப்பேசுகிறபேயும், கனம்மருவு-கனம்பொருந்திய, பெரியதனம் வந்தவுடன்-பெருஞ்செல்வம் வந்தவுடனே, இறுமாந்து - இறுமாப்படைந்து, கண்விழிக்காத பேயும்-கண்திறவாதபேயும், அடைவுடன்-கிரமமாக, சத்துருவின்பேச்சைவிசுவாசித்து பகைவனது பேச்சைநம்பி, அகப்பட்டு - அவனிடத்தில் அகப்பட்டுக்கொண்டு, உழன்றபேயும்-உழலாநின்றபேயும், ஆசைமனையாளுக்கு-ஆசையுள்ள மனைவிக்கு, நேசமாய்-சிநேகமாய், உண்மைமொழியானதை-உண்மைமொழியை, உரைத்தபேயும்-சொன்னபேயும், இடர் இல்லா-துன்பமற்ற, நல்லோர்கள் பெரியோர்களை-நல்லவர்களாகிய பெரியோர்களை, சற்றும்எண்ணாது-சிறிதும் மதிக்காமல் உரைத்தபேயும் - பேசினபேயும், இனிய பரிதானத்தில்-ஆசைகொண்டு, ஒருவற்கு - ஒருவனுக்கு, இடுக்கண்செய்திட்டபேயும்-துன்பஞ்செய்தபேயும், மடமனையிருக்க-இளமையாகிய மனையாளிருக்க, பரத்தையைபுணர்பேயும்-பரத்தையரைப்புணர்கின்றபேயும்,வசைபெற்றபேய்கள் அன்றோ-இகழ்ச்சிபெற்ற பேய்களல்லவா, மயிலேறிவிளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே. எ-று.

கடுகடுத்தல்-வெடுவெடுத்தல். பரிதானம்-லஞ்சம்.

ஆவ்வவவ்வினத்திலுயர்ந்தவை.

தாருவிற் சந்தான நதியினிற் கங்கைவிர
 தத்தினிற் சோம வாரந்
தகைபெறு நிலத்தினிற் காஸ்மீர கண்டந்
 தலத்திற் சிதம்பர தலம்

சிருலவு ரிஷிகளில் வசிட்டர்பசு விற்காம
　　தேனுமுனி வரினா ரதன்
செல்வநவ மணிகளிற் றிகழ்பதும ராகமணி
　　தேமலரி லம்போ ருகம்
பேருலவு கற்பினி லருந்ததி கதித்திடு
　　பெலத்தின் மா ருதம் யானையிற்
பேசிலை ராவதந் தமிழினி லகத்தியம்
　　பிரணவம் மந்தி ரத்தில்
வாரிதியி லேதிருப் பாற்கடல் குவட்டினின்
　　மகாமேரு வாகு மன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
　　மலைமேவு குமரேசனே. (உச)

(இ-ள்.) தாருவில்-தருக்களில், சந்தனம் - சந்தனவிருக்ஷமும், நதியினில்-நதிகளில், கங்கை-கங்காநதியும், விரதத்தினில்-விரதங்களில், சோமவாரம்-சோமவார விரதமும், தகைபெறுநிலத்தினில்-பெருமைபெற்றபூமியில், காஸ்மீரகண்டம்-காஸ்மீரகண்டமும், தலத்தில்-தலங்களில், சிதம்பரதலம்-சிதம்பரதலமும், சீர்உலவு ரிஷிகளில்-சிறப்புப்பொருந்திய ரிஷிகளில், வசிட்டர்-வசிஷ்டரிஷியும், பசுவில்-பசுக்களில், காமதேனு-காமதேனுவும், முனிவரில்-முனிவர்களில், நாரதன்-நாரதமுனிவனும், செல்வம்நவமணிகளில்-செல்வமாகிய நவரத்தினங்களில், திகழ்பதுமராகமணி-விளங்குகிற பதுமராகமணியும், தேமலரில்-வாசனை

யுள்ளமலர்களில், அம்போருகம் - தாமரைமலரும், பேர் உலவுகற்பினில்-பிரபலமானகற்பினர்களில், அருந்ததி-அருந்ததியும், கதித்திடுபெலத்தில்-பெருத்தபலத்தில், மாருதம்-வாயுவும், யானையில்-யானைகளில், பேசில் - எடுத்துப் பேசுமிடத்தில், ஐராவதம்-ஐராவதமும், தமிழினில் - தமிழ்நூல்களில், அகத்தியம்-அகஸ்தியமும், மந்திரத்தில் பிரணவம்-மந்திரங்களில் பிரணவமந்திரமும், வாரிதியிலே-சமுத்திரங்களில், திருப்பாற்கடல்-திருப்பாற்கடலும், குவட்டினில்-மலைகளில், மகாமேரு-மகாமேருமலையும், ஆகுமன்றோ-உயர்ந்தனவாகுமல்லவா, மயிலேறி விளையாடு குகனே புல் வயனீடு மலைமேவு குமரேசனே. எ-று.

நிலம்-கண்டம். தலம்-சிவஸ்தலம். காமதேனு-சுவர்க்கம். இந்திரன துயானை - கீழ்த்திசையானை. அகத்தியம்-அகத்தியமுனிவரால் செய்யப்பட்டதோர் நூல்.

அவரவர்க்கு பெலமாவன.

அந்தணர்க் குயர்வேத மேபெலங் கொற்றவர்க்
கரியசௌ ரியமே பெல
மானவணி கர்க்குநிதி யேபெலஞ் சூத்திரர்க்
காயினே ருழவே பெலம்
மந்திரிக் குச்சது ருபாயமே பெலநீதி
மானுக்கு நடுவே பெலம்
மாதவர்க் குத்தவசு டெலமடவி யர்க்குநிறை
மானமிகு கற்பே பெலம்

தந்திர மிகுந்தகன சேவகர் தமக்கெலாஞ்
சாமிகா ரியமே பெலஞ்
சான்றவர்க் குப்பொறுமை யேபெலம் புலவோர்
தமக்குநிறை கல்வி பெலமாம்
வந்தனை செயும்பூசை செய்பவர்க் கன்புபெலம்
வாவெடி வான வேலா
மயிலேறி விளையாடு குகனே புல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (௨௫)

(இ-ள்.) அந்தணர்க்கு-வேதியருக்கு, உயர்வேதமேபலம்-உயர்ந்தவேதமேபலமாகும், கொற்றவர்க்கு-அரசருக்கு, அரியசௌரியமேபலம்-அரிதாகியசௌரியமேபலமாகும், ஆனவணிகர்க்கு-உண்டாகியவணிகருக்கு, நிதியேபலம்-திரவியமேபலமாகும், சூத்திரர்க்கு ஆயின்-சூத்திரர்க்கென்றால், ஏருழவேபலம்-ஏருழுதலேபலமாகும், மந்திரிக்கு-மந்திரியானவனுக்கு, சதுருபாயமேபலம்-சதுருபாயமேபலமாகும், நீதிமானுக்கு-நீதியுடையவனுக்கு, நடுவேபலம்-நடுவுநிலையேபலமாகும், மாதவர்க்கு-பெரியதவசிகளுக்கு, தவசுபலம் (அவர்கள்செய்யும்)தவசேபலமாகும், மடவியர்க்கு-மாதருக்கு, நிறைமானம் மிகுகற்பேபலம்-நிறையும் மானமும் மிகுந்தகற்புமேபலமாகும், தந்திரம்மிகுந்த-தந்திரமிகுந்த, கனசேவகர் தமக்குஎல்லாம்-பெரியசேவகர்களுக்கெல்லாம், சாமிகாரியமேபலம்-யசமானனுடைய காரியஞ்செய்தலே பலமாகும், சான்றவர்க்கு-பெரியோருக்கு, பொறுமையேபலம் - பொறுமையேபலமாகும், புலவோர்தமக்கு-புலவர்களுக்கு, நிறைகல்விபலம்

ஆ ய்-நிறைந்த கல்வியே பலமாகும், வந்தனைசெயும்பூசை செய்பவர்க்கு-வந்தனைசெய்கிற பூசைசெய்வோர்க்கு, அன்புபலம்-அன்பேபலமாகும்,வானவடிவானவேலா-பாலரூபமான வேலனே, மயிலறிவிளையாடு குகனேபுல் வயனீடு மலேமேவு குமரேசனே. எ-று.

சௌரியம்-சூரத்வம். சதுருபாயம்-நான்குபாயங்கள். அவை சாம பேத தாநதண்டங்கள்-நிறை-நிறைகுணம். மானம்-பெருமை கற்பு-பதிவிரதாதர்மம். தந்திரம்-உபாயம். வந்தனை-வந்தித்தல் (துதித்தல்) வேலன்-வேலாயுதத்தையுடையவன்.

இருந்தும் பயன்படாதவை.

தருணத்தி லுதவிசெய் யாதநட் பாளர்பின்
தந்தென தராம லென்ன
தராதர மறிந்துமுறை செப்யாத மன்னரைச்
சார்ந்தென்ன நீங்கி லென்ன
பெருமையுட னுண்மையில் லாதவொரு பிள்ளையைப்
பெற்றென பெறும லென்ன
பிரியமா யுள்ளன்பி லாதவர்க ணேசம்
பிடித்தென விடுக்கி லென்ன
தெருளாக மானமில் லாதவொரு சீவனஞ்
செய்தென செயாம லென்ன
தேகியென வருபவர்க் கீயாத செல்வஞ்
சிறந்தென முறிந்து மென்ன.

மருவிளமை தன்னி லில்லாதகன் னிகைபின்பு
வந்தென வராமலென்ன
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (௨௯)

(இ-ள்.) தருணத்திலே உதவிசெய்யாதநட்பாளர்-சமய த்தில் உதவிசெய்யாத சிநேகர்கள், பின்-பிறகு, தந்து என்ன தராமலென்ன-தந்தென்ன லாபம் தராமற்போனால் என்னநஷ்டம், தராதரம் அறிந்து-அவரவர்களுடைய தராதரங்களைத் தெரிந்துகொண்டு, முறைசெய்யாத மன்னரை-அவரவர்க்குத்தகுந்த முறைப்படிசெய்யாத அரசரை சார்ந்து என்ன நீங்கிலென்ன-சேர்ந்தாலென்னலாபம் விட்டுநீங்கினாலென்னநஷ்டம், பெருமையுடன் ஆண்மையில்லாத ஒருபிள்ளையை-பெருமையோடு ஆண்மையுமில்லாத ஒருபிள்ளையை, பெற்று என்ன பெறுமல் என்ன-பெற்றாலென்னலாபம் பெறுவிடிலென்னநஷ்டம், பிரியமாய் - இஷ்டமாய், உள்ளன்பு இல்லாதவர்கள் நேசம் - மனத்தன்பில்லாதவர்களுடையநட்பை, பிடித்துஎன்ன விடுக்கில் என்ன-பற்றினாலென்னலாபம் விட்டாலென்னநஷ்டம், தெருள்ஆக மானமில்லாத-தெளிவாக மானமில்லாத,ஒருசீவனம்-ஒருசீவனத்தை, செய்துஎன்ன செய்யாமல் என்ன-செய்தாலென்னலாபம் செய்யாவிடின்என்னநஷ்டம், தேகிஎனவருபவர்க்கு-தேகியென்று வருவோருக்கு, ஈயாத செல்வம் - கொடாதபொருள், சிறந்து என்ன முறிந்தும்

என்ன - உயர்ந்தால் என்னலாபம் தாழ்ந்தாலென்னநஷ்டம், மருவுஇளமைதன்னில் இல்லாதகன்னிகை-பொருந்திய இளமைப்பருவத்தில் இல்லாதபெண், பின்பு-பிறகு, வந்துஎன்ன வராமல்என்ன-வந்தாலென்னலாபம் வராமற்போனால் என்னநஷ்டம், மயிலேறிவிளையாடு குகனேபுல்வயனீடு மலைமேவு குமரேசனே எ-று.

தாரதரம்-பெருமைசிறுமை (தாரதம்பியம்) முறைசெய்தல்-மரியாதைசெய்தல். ஆண்மை - ஆளுந்தன்மை. ஆணுத்தன்மை. சேவகம்-உத்தியோகம்.

## உபகார மில்லாதவை.

கடனீர் மிகுந்தென்ன வொதிதான் பெருத்தென்ன
 காட்டிலவு மலரிலென்ன
கருவேல் பழுத்தென்ன நாய்ப்பால் கரந்தென்ன
 கானின்மழை பெய்துமென்ன
அடர்கழுதை லத்திகில மெல்லாங் குவிந்தென்ன
 வரியகுண மில்லாத பெண்
ணழகா யிருந்தென்ன வாஸ்தான கோழைபல
 வரியநா லோதி லென்ன
திடரினிய பூதம்வெகு பொன்காத் திருந்தென்ன
 திறன்மிகுங் கரடி மயிர்தான்
செறிவாகி நீண்டென்ன வஸ்த்ரபூ ஷணமெலாஞ்
 சித்திரத் துற்றுமென்ன

மடமிகுந் தெவருக்கு முபகார மில்லாத
வம்பர்வாழ் வுக்கு நிகராம்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (௨௭)

(இ-ள்.) கடல்நீர் மிகுந்தாலென்ன - கடல்நீரானது மிகுந் திருந்தாலென்னபயன், ஒதிதான் பெருத்தாலென்ன-ஒதிய மரம் பெருத்திருந்தாலென்னபயன், காட்டு இலவுமலரில் என்ன-காட்டில் இலவமரம்பூத்தாலென்னபயன், கருவேல்பழுத்தாலென்ன - கருவேலமரம்பழுத்தாலென்னபயன், நாய்பால்சுரந்தாலென்ன-நாய்ப்பால்சுரந்தாலென்னபயன், கானில்மழைபெய்தும்என்ன-காட்டில்மழைபெய்தாலும் என்னபயன், அடர்கழுதைலத்தி-நெருங்கின கழுதைலத்தியானது, நிலம்எல்லாம் குவிந்தாலென்ன-பூமியெல்லாம்குவிந்திருந்தாலென்னபயன், அரியகுணம் இல்லாதபெண்- அருமையாகிய நற்குணமில்லாதபெண்ணானவள், அழகாயிருந்தென்ன-அழகாயிருந்தாலென்னபயன், ஆஸ்தானகோழை-ஆஸ்தானகோழையானவன், பலஅரியநூல்-பலவாகிய அரியநூல்களை, ஓதில்என்ன-படித்தாலென்னபயன், திடம்இனிய பூதம்-வலியிற்சிறந்த பூதமானது, வெகுபொன்காத்திருந்தாலென்ன-அதிகதிரவியத்தைக் காத்திருந்தாலென்னபயன், திறல்மிகும்-வலிமிகுந்த, கரடிமயிர்-கரடியின்மயிரானது, செறிவாகிநீண்டுஎன்ன-அடர்ச்சியாய் நீண்டிருந்தாலென்னபயன், வஸ்த்ரபூஷணமெல்லாம்-வஸ்திரபூஷணங்களெல்லாம், சித்திரத்துஉற்றும் என்ன-

சித்திரத்தி லெழுதப்பட்டிருந்தாலு மென்னபயன், மடம் இருக்கு-அறியாமையிருந்து, எவருக்கும் - யாவருக்கும், உபகாரம் இல்லாத-உபகரித்தலில்லாத, வம்பர் - வீணருடைய, வாழ்வுக்குறிகர் ஆம்-செல்வத்துக்குநிகராகும், மயிலேறிவிளையாடுகுகனேபுல்வயனீடுமலைமேவுகுமரேசனே.

காட்டிலவு-முள்முருக்கு. ஆஸ்தானகோழை-சபைக்கோழை. (கோழை-அச்சவியல்புள்ளவன்.)

## பதரெனப்படுவோர்.

தன்பெருமை சொல்லியே தன்னைப் புகழ்ந்தபதர்
சமர்கண் டொளிக்கும் பதர்
தக்கபெரி யோர்புத்தி கேளாத பதர்தோழர்
தம்மொடு சலிக்கும் பதர்
பின்புகா ணுவிடந் தன்னிலே புறணிபல
பேசிக் களிக்கும் பதர்
பெற்றதாய் தந்தைதுயர் படவாழ்ந் திருந்தபதர்
பெண்புத்தி கேட்கும் பதர்
பொன்பண மிருக்கவே போயிரக் கின்றபதர்
பொய்ச்சாட்சி சொல்லும் பதர்
புவியோர் நடத்தையை யிகழ்ந்தபதர் தன்மனைவி
புணர்தல்வெளி யாக்கும் பதர்
மன்புணரும் வேசையுடன் விபசரிக் கின்றபதர்
மனிதரிற் பதரென்பர் காண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (உஅ)

(இ-ள்.) தன்பெருமை-தனது பெருமையை, சொல்லியே-சொல்லிக்கொண்டே, தன்னை புகழ்ந்தபதர்-தன்னைத் தானே புகழ்ந்தபதரும், சமர்கண்டு-யுத்தத்தைக்கண்டு, ஒளிக்கும்பதர்-ஒளிக்கின்றபதரும், தக்கபெரியோர் புத்தி கேளாதபதர்-தகுதியாகியபெரியோர்புத்தியைக்கேட்காதபதரும், தோழர்தம்மொடுசலிக்கும்பதர்-தோழரோடு சலித்துக்கொள்ளுகிறபதரும், பின்பு-ஒருவனுக்குப் பின்னே, காணுவிடந்தன்னிலே-காணுதவிடத்திலே, பலபுறணிபேசி-பல நிந்தனைகளைப்பேசி, களிக்கும்பதர்-களிக்கின்றபதரும், பெற்றதாய்தந்தை - பெற்றதாய்தந்தையர், துயர்பட-துன்பம்அநுபவிக்க, வாழ்ந்திருந்தபதர்-வாழ்ந்திருந்தபதரும், பெண்புத்திகேட்கும்பதர்-பெண்புத்திகேட்கின்றபதரும், பொன்பணம்இருக்க-பொன்னும்பணமும் இருக்கும்போதே, போய்-ஒருவரிடத்திற்போய், இரக்கின்றபதர்-யாசிக்கிறபதரும், பொய்சாட்சிசொல்லும்பதர்-பொய்சாட்சி சொல்லுகின்றபதரும், புவியோர்நடத்தையை-லோகத்தாருடைய நடத்தையை, இகழ்ந்தபதர்-அவமதித்தபதரும், தன்மனைவிபுணர்தல்-தன்மனைவியின் புணர்ச்சியை, வெளியாக்கும்பதர் - வெளிப்படுத்தும்பதரும், மன்புணரும்வேசையுடன் - அரசன்புணர்கின்றவேசையோடு, விபசரிக்கின்றபதர்-விபசரிக்கின்றபதரும்(இவர்களெல்லாம்) மனிதரில்-மனிதர்க்குள்ளே, பதர்என்பர் பதர்களென்றுசொல்லுவர் (பெரியோர்) மயில்மேறி விளையாடு குகனேபுல்வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

புறணி-நிந்தை. பெரியோர்நடத்தை-லோகமரியாதை.
மன்-அரசன். விபசரித்தல்-சஞ்சரித்தல்.

காணாவிடிற் றுயரப்படுமவை.

இரவிகாணா வனச மாரிகாணா தபயி
ரிந்துகாணாத குமுத
மேந்தல்காணா நாடு கரைகள்காணாவோட
மின்போல் காணா விருந்து
சுரபிகாணாதகன் றன்னைகாணா மதலை
சோலைகாணாத வண்டு
தோழர்காணா நேயர் சலைகள்காணாதமான்
ஜோடுகாணாத பேடு
குரவர்காணாதசபை தியாகிகாணா வறிஞர்
கொழுநர்காணாத பெண்கள்
கொண்டல்காணாதமயில் சிறுவர்காணா வாழ்வு
கோடைகாணாத குயில்கள்
வரவுகாணாதசெல விவையெலாம் புவிமீதில்
வாழ்வுகாணா விளமை யாம்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (௨௬)

(இ-ள்.) இரவிகாணா வனசம் சூரியனைக்காணாததாமரையும், மாரிகாணாதபயிர்-மழையைக்காணாதபயிரும் இந்துகாணாதகுமுதம்-சந்திரனைக்காணாத அல்லியும், ஏந்தல்காணாநாடு-அரசனைக்காணாதநாடும், கரைகள்காணாதஓடம்-

கரையைக்காணாதகப்பலும், இன்சொல்காணாவிருந்து-இ னியசொல்லைக்காணாதவிருந்தும், சுரபிகாணாதகன்று-பசு வைக்காணாதகன்றும், அன்னைகாணமதலை-தாயைக்காணா தகுழந்தையும், சோலைகாணாதவண்டு-சோலையைக்காணா தவண்டும், தோழர்காணாநேயர்-சிநேகரைக்காணாத சிநே கரும், கலைகள்காணாதமான்-கலைகளைக்காணாதமான்களும் சோடுகாணாதபேடு-ஜதையைக்காணாதபெட்டையும், குர வர்காணாத சபை-பெரியோரைக்காணாதசபையும், தியாகி காணாதவறிஞர்-கொடையாளியைக்காணாத தரித்திரரும், கொழுநர்காணாத பெண்கள்-கணவரைக்காணாதமாதரும், கொண்டல்காணாதமயில் - மேகத்தைக்காணாதமயிலும், சி றுவர்காணவாழ்வு-புதல்வரைபபெறாதவாழ்வும், கோடை காணாதகுயில்கள்-கோடைக் காலத்தைக் காணாதகுயில்க ளும், வரவுகாணாதசெலவு-வரவில்லாத செலவும், (ஆகிய) இவையெலாம்-இவையாவும், புவிமீதில்-பூமியின்மேல், வா ழ்வுகாணா இளமையாம்-செல்வத்தைக்காணாத இளமைப் பருவம்போலப் பயனற்றவைகளாகும், மயிலேறி விளையா டு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

கலை-ஆண்மான் (கலைமான்) சோடு-சேவல், கோடை வசந்தகாலம்.

வியாதி மூலங்கள்.

கல்லினன் மயிரினன் மீதூண் விரும்பலாற்
கருதிய விசாரத்தி னாற்
கடுவழி நடக்கையான் மலசல மடக்கையாற்
கனிபழங் கறியுண்ண லால்

கல்லினு மயிரினு முண்டபின் மூழ்கலா
  னித்திரைக ளில்லாமை யா
 னீர்ப்பகையி னுற்பனிக் காற்றினுட னோதலா
  னீடுசரு கிலையூற லால்
மெல்லிநல் லார்கலவி யதிகமும் விரும்பலால்
  வீழ்மலஞ் சிக்குகையி னுன்
 மிகுசுமை யெடுத்தலா லிளவெயிற் காய்தலான்
  மெய்வாட வேலை செயலால்
வல்லிரவி லேதயிர்கள் சரகாதி யுண்ணலால்
  வன்பிணிக் கிடமென்பர் காண்
 மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
  மலைமேவு குமரேச னே. (கூ0)

(இ-ள்) கல்லினுல்-கல்லினுலும், மயிரினுல்-மயிரினுலும் மீதூண் விரும்பலால்-அதிகவுணவை விரும்புதலாலும், கருதிய விசாரத்தினுல்-நினைக்கிற விசாரத்தினுலும், கடுவழி நடக்கையால்-கடுவழிநடத்தலாலும், மலசலம் அடக்கையால்-மலசலங்களை யடக்குதலாலும், கனிபழங்கறி உண்ணலால்-முதிர்ந்த பழங்கறியை யுண்ணுதலாலும், நெல்லினுல்-நெல்லினுலும், உமியினுல்-உமியினுலும், உண்டபின் மூழ்கலால்-உண்டபின் தலைமுழுகுதலாலும், நித்திரைகள் இல்லாமையால்-தூங்காமையாலும், நீர்பகையினுல்-நீர்விரோதத்தாலும், பனிகாற்றில்-பனியிலும் காற்றிலும்,உடல்நோதலால்-உடம்புநோதலாலும், நீடுசருகு இலை ஊற

லால்-பழையசருகு இலைகள் இவைமுதலானவற்றைத் தின்றதலாலும், மெல்லி நல்லார்கலவி-மாதருடையபுணர்ச்சியை, அதிகம் - அதிகமாக, உள்விரும்பலால்-மனத்தால் விரும்புதலாலும், வீழ்மலம் சிக்குகையினால்-இறங்குகிற மலம்சிக்கிக்கொள்ளுதலாலும், மிகுசுமை எடுத்தலால்-மிகுந்தசுமையையெடுத்தலாலும், இளவெயில்காய்தலால்-இளவெயில்காய்தலாலும் மெய்வாட வேலைசெயலால்-உடல் வாடும்படிவேலைசெய்தலாலும், வல் இரவிலே-வலிய இராக்காலத்திலே, தயிர்கள் சாகாதி உண்ணலால்-தயிர்களும் சாகாதிகளும் புசித்தலாலும், வன்பிணிக்கு-வலிய நோய்களுக்கு, இடமென்பர்-இடமுண்டாகுமென்று சொல்லுவர் (ஆயுர்வேதியர்), மயிலேறி விளையாடு குகனேபுல்வயல்நீடு மலைமேவுகுமரேசனே, எ-று.

விசாரம்-விசனம். கடுவழி-நெடுந்தூரம். நீர்ப்பகை-ஒருநீர்க்கொருநீர் வேறுபாடு. இளவெயில்-காலைவெயில். பசு எருமை ஆடுமுதலியவற்றி லுண்டாதலால் தயிர்கள் எனப்பன்மையாற் கூறினார். சாகாதி-கீரைமுதலாயின

செத்தும் சாகாதவர்.

அன்னவர்க்குமுபகார மாம்வாவி கூவமுண்
டாக்கினோர் நீதி மன்ன
ரழியாத தேவால யங்கட்டி வைத்தபேரா
ரகாரங்கள் செய்த பெரியோர்
தனையொப்பி லாப்புதல் வனைப்பெற்ற பேர்பொருது
சமர்வென்ற சுத்த வீரர்
தரணிதனி னிலைநிற்க வெந்நாளு மாறாத
தருமங்கள் செய்த பேர்கள்

கனவித்தை கொண்டவர்க ளோயாத கொடையாளர்
காவியஞ் செய்த கவிஞர்
கற்பினின் மிகுந்தவொரு பத்தினி மடந்தையைக்
கடிமணஞ் செய்தோர் களும்
மனிதர்கள் சரீரங்கள் போகினுஞ் சாகாத
மனிதரிவ ராகு மன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயலீடு
மலைமேவு குமரேசனே. (௫௧)

(இ-ள்.) அனைவர்க்கும்-எல்லார்க்கும், உபகாரம் ஆம்-உபகாரமாகிய, வாவிகூவம் உண்டாக்கினோர்-வாவிகூவங்களையுண்டாக்கினவர்கள், நீதிமன்னர்-நீதியையுடைய அரசர்கள், அழியாத-கெடாத, தேவாலம்கட்டிவைத்துளோர்-தேவாலயங்களைக் கட்டிவைத்தவர்கள், அகரங்கள்செய்தபெரியோர்-அகரங்களையுண்டாக்கின பெரியோர்கள், தனையொப்பிலா-தனக்குச்சமானமில்லாத, புதல்வனைப்பெற்றபேர்-புத்திரனைப் பெற்றவர்கள், சமர்-போர்க்களத்தில், பொருது-போர்செய்து, வென்ற-(பகைவரை) வென்ற, சுத்தவீரர்-சுத்தவீரர்கள், தரணிதனில் நிலைநிற்க-பூமியில் நிலைநிற்கும்படி, எந்நாளும்-எக்காலத்தும், மாறாத-அழியாத, தருமங்கள்செய்தபேர்கள்-தருமங்களைச்செய்தபேர்கள், கனவித்தைகொண்டவர்கள்-பெரியவித்தையையுடையவர், ஓயாதகொடையாளர்-நீங்காதகொடையாளர், காவியம்செய்தகவிஞர்-காவியம்பாடின கவிவல்லோர், கற்பினின்மிகுந்த-கற்பிற்சிறந்த, ஒருபத்தினிமடந்தையை-ஒருபத்தினிப்பெண்ணை, கடிமணஞ்செய்தோர்கள்-விவாகம்செ

ய்துகொண்டவர்கள், (ஆகிய,) இம்மனிதர்கள் - இந்தமனிடர், சரீரங்கள்போகினும் - உடம்புகள் அழிந்தாலும், சாகாதமனிதர் - சாகாதமாநுடர், இவர் ஆவர் அன்றோ - இவர்களாவார்களல்லவா, மயிலேறிவிளையாடு குகனேபுல்வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

வாவி - தடாகம். கூவல் - கிணறு. தேவாலயம் - சிவாலய விஷ்ணு ஆலயங்கள், ஆலயம் - கோயில். அகரம் - சிற்றூர். சுத்தவீரர் - மஹாவீரர். கனவித்தைகொண்டோர் - கம்பன் முதலியோர்போன்ற மகாவித்வான்கள், காவியம் - சிந்தாமணிமுதலிய காவியங்கள் ஓயாதகொடையாளர் - தமக்கு வறுமைவந்தகாலத்தும் தம்மைக்குறித்து வந்தவர்க்கு இல்லையென்னாது இயன்றவளவாகக் கொடுப்பவர். கற்பினின்மிகுத்தஒரு பத்தினிமடந்தை - பதிவிரதை, வாவிகூவமுதலியவற்றைச் செய்தவர் உலகத்தில் செத்தும், சாகாதவர் என்பது கருத்து.

சாகாதிருந்துஞ் செத்தவா
மாறுத வறுமையோர் தீராத பிணியாளர்
வருவேட் டகத்தி லுண்போர்
மனைவியை வழங்கியே சீவனஞ் செய்குவோர்
மன்னுமொரு ராச சபையில்
தூறுக நிந்தைசெய் துய்குவோர் சிவிகைசஞ்
சுமந்தே பிழைக்கின்ற பேர்
தொலையா விசாரத் தழுந்துவோர் வார்த்தையிற்
சோர்வுபட வுற்ற பெரியோர்

வீறுக மனையா டனக்கஞ்சி வந்திடு
  விருந்தினை யொழித்து விடுவோர்
வீம்புடன் செல்லாத விவகார மதுகொண்டு
  மிக்கசபை யேறு மசடர்
மாறுக விவரெலா முயிருடன் செத்தசவ
  மாகியொளி மாய்வர் கண்டாய்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
  மலைமேவு குமரேச னே. (௩௨)

(இ-ள்.) மாறுத வறுமையோர்-இடையுறாத தரித்திரத்தையுடையவர்கள், தீராதபிணியாளர்-நீங்காதநோய்கொண்டவர்கள், வரு-வந்த, வேட்டகத்தில் உண்போர்-மாமி வீட்டிலுண்பவர்கள், மனைவியைவழங்கி-மனையாளைப் பிறர்க்குபயோகித்து, சீவநம்செய்குவோர்-உயிர்வாழ்வோர், மன்னும் ஒருராஜசபையில்-நிலைபெற்ற ஒருராஜசபையில், தூறுக நிந்தைசெய்து உய்குவோர்-பழிமொழிகளால் நிந்தித்துப்பிழைப்பவர், சிவிகைகள்சுமந்துபிழைக்கின்றபேர்-பல்லக்குச்சுமந்து பிழைப்பவர், தொலையா விசாரத்து அழுந்துவோர்-தீராத விசநசாகரத்தில்முழுகுவோர், வார்த்தையில்-தமதுவாக்கில், சோர்வுபடல் உற்றபெரியோர்-தவறுண்டாகப்பெற்றபெரியோர், விறுகமனையாள்தனக்குஅஞ்சி-கொடுமையாகியமனையாளுக்குபயந்து, வந்திடு விருந்தினை-வந்தவிருந்தினரை, ஒழித்துவிடுவோர்-நீக்கிவிடுவோர், வீம்புடன்-வீம்புடனே, செல்லாத விவகாரமது கொண்டு-செல்லாத வழக்கைக்கொண்டு, மிக்க சபையே

றும் அசடர்-மேலான சபைக்குப்போகிறதீயோர், மாரு
க-(எல்லார்க்கும்) பகையாக, இவர்எல்லாம்-இவரெல்லா
ரும், உயிருடன்-உயிரோ டிருக்கும்போதே, செத்தசவம்
ஆகி-செத்தபிணத்துக்கு நிகராகி, ஒளிமாய்வர்-புகழ்குன்
றுவர், மயிலேறி விளையாடு குகனேபுல்வயலீடு மலைமேவு
குமரேசனே, எ-று.

மாருத வறுமையோர்-நித்திய தரித்திரர், நீராதபி
ணியாளர்-குட்டநோய் முதலியவற்றால் பீடிக்கப்படுவோ
ர். வேட்டகம்-கலியாணஞ் செய்தவீடு. அழுக்குமேவோர் எ
ன்றமையால் விசாரத்தைக் கடைபோக்கி யுரைக்கலாயிற்று.
வார்த்தையிற் சோர்வுபடலாகாது என்பது "சொற்சோ
ர்வுபடேல்" என்னும் ஒளவையார் வாக்கினாலும்விளங்கு
ம். வீம்பு-பிடிவாதம்.

சிறிதும் பயன்படாதவை.

புகராகி லுங்கன விபூதிவிளை விக்கும்
  பழமைபெறு சுவரா கிலும்
பலருக்கு மறைவாகு மாடுமிஞ் சிடுமலம்
  பன்றிகட் குபயோக மாம்
ககமிகு கடாவெனினு முழுதுபுவி காக்கும்வன்
  கழுதையும் பொதிசு மக்குமே
கல்லெனிற் றேவர்களு மாலயமு மாம்பெருங்
  கான்புற்று மரவ மனையாம்
இதமிலாச் சவமாகி லுஞ்சிலர்க் குதவிசெயு
  மிழிவுறு குரங் காயினும்
இரக்கப் பிடித்தவர்க் குதவிசெயும் வாருகோ
  லேற்ற மாளிகை விளக்கும்

மதமது மிகும்பரம லோபரா லுபகார
மற்றொருவ ருக்கு முண்டோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயலீடு
மலைமேவு குமரேசனே. ([illegible])

(இ-ள்.) பதர் ஆகிலும்-பதராயினும், கனம்விபூதி விளை
விக்கும்-மேலாகிய விபூதியையுண்டாக்கும், பழமைபெறு
சுவர் ஆகிலும்-பழமையான சுவராயினும், பலருக்கும்-பல
பேர்களுக்கும், மறைவு ஆகும்-மறைவிடமாகும், மாடுஉரி
ஞ்சிடும்-மாடுஉரிஞ்சுதற்கும் உபயோகப்படும், மலம்-மல
மும், பன்றிகட்கு உபயோகம் ஆம்-பன்றிகளுக்குணவாயு
பயோகப்படும், கதம்மிகுகடா என்னில்-கோவமிகுந்த க
டாவென்றால், உழுது-ஏருழுது (அவ்வழியால்)புவிகாக்கு
ம்-பூமியிலுள்ள சீவர்களைக் காப்பாற்றும், வன்கழுதையு
ம் பொதிசுமக்கும்-வலியகழுதையும் பொதியைச் சுமக்கு
ம், கல்எனின்-கல்லென்னிலோ, தேவர்களும் ஆலயமுமாம்
தேவர்களும் கோயில்களுமாகும், பெருங்கான் புற்றும்-
பெருங்காட்டிலுள்ள புற்றும், அரவமனையாம்-பாம்புக்கு
வீடாகும், இதம் இல்லா-நன்மையில்லாத, சவம் ஆகிலும்-
பிணமாகிலும், சிலர்க்கு உதவிசெய்யும்-சிலபேருக்குஉதவி
யைச்செய்யும், இழிவுறு குரங்காயினும்-இழிவுள்ள குரங்
காயினும், பிடித்தவர்க்கு-தன்னைப்பிடித்தவர்க்கு, இரக்க
உதவிசெய்யும்-இரத்தற்குஉதவிசெய்யும் வாருகோல்-வா
ருகோலும், ஏற்றம்-மேன்மைபொருந்திய, மாளிகைவிள
க்கும்-மாளிகைகளைவிளக்கும், மதமதுமிகும்-மதமிகுந்த,
பரமலோபரால்-பரமலோபிகளால், ஒருவருக்கும்-ஒருவ

ருக்காயினும், உபகாரம்உண்டோ-உபகாரமுளதோ, மயி லேறிவிளையாடு குகனே புல்வயனீடுமலைமேவுகுமரேசனே.

பதர்-உமி. விபூதி-திருநீறு. உரிஞ்சுதல் - தேய்த்துக் கொள்ளுதல். புவி-இடவாகுபெயர். தேவர்கள்-தெய்வ விக் ரகங்கள். கிலர்க்கு வெட்டியான்முதலியோர்களுக்கு. இர ந்தல்-ஏற்றல். (யாசித்தல்) வாருகோல்-துடைப்பம். பரம லோபர்-மிகுந்தலோபகுணமுள்ளவர். லோபகுணம்-ஈயா க்குணம் (பிசுநத்தனம்.)

உலோத்தரியல்பு.

திரவியங் காக்குமொரு பூதங்கள் போற்பணந்
தேடிப் புதைத்து வைப்பார்
சீலமாகவுங் கட்டார்கணல்லமுது
செய்துண்ண றறமுஞ் செயார்
புரவலர்செய் தண்டந் தனக்கும்வலு வாகப்
புகுந்திருடருக்கு மீவார்
புலவரைக் கண்டவுடனோடிப் பதுங்குவார்
புராணிகர்க் கொன்று முதவார்
விரகறிந் தேபிள்ளை சோறுகறி தினுமளவில்
வெகுபணஞ் செலவாகலால்
விளையாடு கிழவனும் பிள்ளையே பிள்ளையென
மிகுசெட்டி சொன்ன கதைபோல்
வரவுபார்க் கின்றதே யல்லாது லோபியர்கண்
மற்றொருவருக் கீவரோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (௩௯)

(இ-ள்.) நிதியங்காக்கும்-புதையலைக் காத்துக்கொண்டிருக்கிற, ஒரு பூதங்கள்போல்-ஒப்பற்றபூதங்களைப்போல, பணந்தேடி-பணத்தைத் தேடி, புதைத்துவைப்பார்-பூமியிற்புதைத்து வைப்பார்கள், நலமாகவும்-நன்மையாகவும், சேலைகட்டார்கள் - ஆடையுடுக்கமாட்டார்கள், நல்லமுதுசெய்து உண்ணார்-நல்லசோற்றைச் சமைத்து உண்ணமாட்டார்கள், அறமும்செயார்-தர்மமும் செய்யமாட்டார்கள், புரவலர்செய்தண்டந்தனக்கும்-அரசர்செய்கிற தண்டனைக்கும், வலுவாகபுகும் திருடருக்கும்-வலாத்காரமாய்ப்புகுகின்ற திருடர்களுக்கும், ஈவார்-கொடுப்பார்கள், புலவரைக்கண்டவுடன்-வித்வான்களைக்கண்டவுடனே, ஓடிபதுங்குவர்-ஓடி மறைவார்கள், புராணிகர்க்கு-புராணஞ்சொல்வோர்க்கு, ஒன்றும் உதவார்-ஒன்றும்கொடார், விரகு அறிந்து - உபாய மறிந்து, பிள்ளை-பிள்ளையானது, சோறுகறிதின்னுமளவில்-சோறுகறிகளைத் தின்னுங்காலத்தில், வெகுபணம் செலவாதலால்-வெகுபணம்செலவழிபுமாதலால், விளையாடு-விளையாடுதற்குரிய, கிழவனும்பிள்ளையே பிள்ளையென-கிழவனாகிய பிள்ளையே பிள்ளையென்று, மிகுசெட்டிசொன்ன கதைபோல் - மேலானசெட்டியொருவன் சொன்ன கதைபோல, வரவுபார்க்கின்றதே அல்லாது-வரவைப்பார்ப்பதேயன்றி, லோபியர்கள்-லோபகுணமுள்ளவர்கள், மற்றொருவருக்குஈவரோ - வேறொருவருக்குக் கொடுப்பார்களோ, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே. எ-று.

புரவலர்-காத்தற்றொழிலில் வல்லவர். தண்டம்-சிக்ஷை (அபராதம்) புராணிகர் புராணப்ரசங்கம்செய்தே பிழைப்பவர். லோபியர்-உலுத்தர்.

திருவாழிடங்கள்.

கடவா ரணத்திலுங் கங்கா சலத்திலுங்
கமலா சனந் தன்னிலும்
காகுத்தன் மார்பிலுங் கொற்றவ ரிடத்திலுங்
காலியின் கூட்டத்தி லும்
நடமாடு பயிரிலும் பொய்வார்த்தை சொல்லாத
நல்லோ ரிடந் தன்னிலும்
நல்லசுப லக்ஷண பிருந்தமனை தன்னிலும்
ரணசுத்த வீரர் பாலும்
அடர்கே தனத்திலுஞ் சுயம்வரந் தன்னிலு
மருந்துளசி வில்வத் திலு
மலர்தரு கடப்பமலர் தனிலுமிர தத்திலு
மதிகமுண மான ரூப
மடவா ரிடத்திலுங் குடிகொண்டு திருமாது
மாறு திருப்ப ளென்றே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (நடு)

(இ-ள்.) கடம்வாரணத்திலும்-மதயானையினிடத்திலும், கங்காசலத்திலும்-கங்கையாற்றின்நீரிலும், கமலாசனந்தன்னிலும், கமலாசநத்திலும், காகுத்தன் மார்பிலும்-விஷ்ணுவின் மார்பிலும், கொற்றவர் இடத்திலும்-அரசரிடத்தி

லும், காவியின் கூட்டத்திலும்-பசுமங்கையிலும், நடமாடு பயிரிலும்-மநுஷ்யசஞ்சாரமுள்ள பயிரிலும், பொய்வார்த்தைசொல்லாத-பொய்ம்மொழிகள் பேசாத, நல்லோர் இடந்தன்னிலும்-நல்லோர்களிடத்திலும், நல்லசுபலக்ஷண மிகுந்த மனைதன்னிலும்-நல்லசுபலக்ஷணங்கள் மிகுந்திருக்கிற வீடுகளிலும், ரணசுத்தவீரர்பாலும்-போர்க்குரிய சுத்தவீரரிடத்திலும், அடர்கேதநத்திலும்-நெருங்கின துவசத்திலும், சுயம்வரம் தன்னிலும்-சுயம்வரத்திலும், அருதுளசிவில்வத்திலும்-அருமையாகிய துளசியிலும் வில்வத்திலும், அலர்தரு-மலர்ந்த, கடப்பமலர்தனிலும்-கடப்பமலரிலும், இரதத்திலும்-தேரிலும், அதிகருணைமான-மிக்கருணையுள்ள, ரூபம்-சௌந்தரியத்தையுடைய, மடவார் இடத்திலும்-மாதரிடத்திலும், திருமாது-திருமகளானவள், குடிகொண்டு-குடியாகி, மாறாது இருப்பள் அன்றே-நீங்காதிருப்பவளல்லவா, மயிலேறிவிளையாடு குகனேபுல்வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

கடம்-மதம். வாரணம்-யானை, கமலாசநம்-பதுமபீடம், காகுத்தன்-ஸ்ரீராமன், (விஷ்ணு) காவியின் கூட்டம் பசுமந்தை. கேதநம்-வெற்றிக்கொடி. சுயம்வரம் - கல்யாணஞ்செய்யுமிடம்.

மூதேவி வாழிடங்கள்.

சோரமங் கையர்கணிச முறையார்கள் வாயினிற்
 சூதகப் பெண்களிழலில்
சூளையிற் சூழ்தலுறு புகையிற் களேபரஞ்
 சுடுபுகையி னீசர்நிழலில்

காரிரவி லரசுநிழ லிற்கடா நிழலினொடு
கடுஞ்சினத் தோர் சபையினில்
காமுகரி நிஷ்டையில் லாதவர் முகத்திற்
கடுஞ்சினத் தோர் சபையினில்
ஈரமில் லாக்களர் நிலத்தினி லிராத்தயிரி
லிழியுமது பானர் பாலி
லிலைவேல் விளாநிழலி னிதமழக் கடைமனையி
லெனநா யசகரத் தூள்
வாரிய முறத்துள் பெருக்குநாண் மூதேவி
மாறு திருப்ப ளென்பார்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயலீடு
மலைமேவு குமரேச னே. (௩௰)

(இ-ள்.) சோரமங்கையர்கள் நேசம் உரையார்கள்வாயி
ல்-சோரமாதர்களும் மெய்சொல்லாதவர்களுமாகியஇவர்
கள்வாயிலும், சூதகப்பெண்கள்நிழலில் - பூப்புப்பெண்க
ளுடைய நிழலிலும், சூளையில் சூழ்தலுறுபுகையில் - சூளை
யில் சூழ்ந்துகொண்டிருக்கிறபுகையிலும், களேபரம்சுடுபு
கையில்-பிணம்சுடுகிறபுகையிலும், நீசர்நிழலில்-சண்டாள
ரது நிழலிலும், கார்இரவில்-கரியஇராக்காலத்திலும், அர
சுநிழலில்-அரசமரத்தின்நிழலிலும், கடாநிழலினொடு-எரு
மைக்கடாவின்நிழலோடு, கருதியவிளக்குநிழலில் - மதிக்
கப்பட்ட தீபத்தின்நிழலிலும், காமுகரில்-காமுகரிடத்தி
லும், நிஷ்டையில்லாதவர்முகத்தில்-நிஷ்டையில்லாதவரு
டையமுகத்திலும், கடுசினத்தோர்சபையினில் - கொடுங்

கோபமுள் ளவராது சபையிலும்,ஈரம்இல்லாகளர்நிலத்தில்-ஈரமில்லாதகளர்நிலத்திலும், இராத்தயிரில்-இராக்காலத்து உண்ணப்படுகிற தயிரிலும், இழியும்-இழிந்த, மதுபாநர்பாலில்-மதுபாநரிடத்திலும், இலை - இலைகளையுடைய, வேல்விளாநிழலில்-வேலமரநிழலிலும் விளாமரநிழலிலும், நிதம் அழுக்கு அடைமனையில்-நாள்தோறும் அழுக்கடைந்திருக்கிறவீட்டிலும், ஏனம்-பன்றி, நாய்-நாய்,அசம்-ஆடு, சரம்-கழுதை, (இவற்றின்) தூள்-தூளிலும்,வாரியமுறத்தூள்-வாரினமுறத்தூளிலும், பெருக்குதூள்-பெருக்கப்பட்டதூளிலும், மூதேவி - மூதேவியானவள், வாழுதிருப்பள்-நீங்காதிருப்பாள், என்பார்-என்றுசொல்லுவார்(பெரியோர்) மயிலேறிவிளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

சோரமங்கையர்-வியபிசாரிகள், சூதகப்பெண்கள்-தீட்டாயிருக்கிற பெண்கள்முதலாயின. சூளை-செங்கற்சூளை. சினம்-கோவம், களர்நிலம்-உவர்நிலம். மதுபாநர்-கட்குடியர்.

திருத்தினுந் திருந்தாமை.

கட்டியெரு விட்டுச் செழுந்தேனை வார்க்கினுங்
காஞ்சிரங் கைப்பு விடுமோ
கழுதையைக் கட்டிவைத் தோமம் வளர்க்கினுங்
கதிபெறுங் குதிரை யாமோ
குட்டியர வுக்கமு தளித்தே வளர்க்கினுங்
கொடுவிட மலாது தருமோ

குக்கனெடு வாலுக்கு மட்டையைக் கட்டினுங்
கோணமலே நிமிருமோ
ஒட்டியே குறணிமை யிட்டாலு நயமிலா
யோனிகண் ணுகி விடுமோ
மலைகன கர்ப்பூர வாடைபல கூட்டினு
முள்ளியின் குணமாறுமோ
மட்டிகட் காயிரம் புத்திசொன் னலுமதின்
மார்க்கமறி யாதை வருமோ
மயிலேறி விளையாடு குகனே புல் வயலீடு
மலைமேவு குமரேசனே. (கூஎ)

(இ-ள்.) கட்டி-பாத்திகட்டி, எருவிட்டு-எருப்பெய்து, செழுதேனைவார்க்கினும்-செழியதேனைவார்த்தாலும், காஞ்சிரம்-எட்டிக்கனியானது, கைப்புவிடுமோ-(தன்னியற்கையாகிய) கசப்புக்குணத்தைவிடுமோ, கழுதையைக்கட்டிவைத்து - கழுதையைக்கயிற்ருல் தூணில்கட்டிவைத்து, ஓமம்வளர்க்கினும்-ஓமம்வளர்த்தாலும், கதிபெறும்-பலநடைகளைப்பெற்ற, குதிரைஆமோ-குதிரையாகுமா, குட்டிஅரவுக்கு-பாம்புக்குட்டிக்கு, அமுதுஅளித்தேவளர்க்கினும் - பாலூட்டியேவளர்த்தாலும், கொடுவிடம் அலாது தருமோ-கொடியவிஷத்தையன்றி வேறொன்றைத்தருமா குக்கன்-நாயினது, நெடுவாலுக்கு-நீண்டவாலுக்கு, மட்டையைகட்டினும் - மட்டைவைத்துக்கட்டினலும், கோணமல் நிமிருமோ-கோணமல் நிமிர்ந்திருக்குமோ, ஒட்டியே குறணிமையிட்டாலும்-பொருந்தி குறணிமையைப் பூசினலும், நயம்இல்லா-அழகில்லாத, யோனி-யோனியா

னது, கண் ஆகிவிடுமோ-கண்ணாய்விடுமோ, உலை-உலாவு கிற, கன கர்ப்பூரவாடைபலகூட்டினும்-மேலான கர்ப்பூர த்தின் மணம் மிகுதியாய்ச்சேர்த்தாலும், உள்ளியின்குண ம்மாறுமோ-வெங்காயத்தின்குணம்நீங்குமா, மட்டிகட்கு மூடர்கட்கு, ஆயிரம் புத்திசொன்னாலும் - ஆயிரம் புத்தி சொல்லினும், அதின்-அதனால், மார்க்கம் மரியாதையா கிய நெறியுண்டாகுமா, மயிலேறிவிளையாடு குகனேபுல்வி ளையாடு மலைமேவு குமரேசனே.

கதி-நடை. அது மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி, இடபகதியென்பன. கோணுதல்-வளைதல். குறுணி ஒரள வுகருவி. வாடை வாசனை. உள்ளி பூண்டு எனினும்பொரு ந்தும்.

## குறிப்பறிதல்.

மனதிற் கடும்பகை முகத்தினு லறியலா
மாகிலப் பூடுகளெலாம்
மழையினு லறியலா நல்லார்பொ லார்தமை
மக்களா லறிய லாகும்
கனமருவு சூரரைச் சமரினு லறியலாங்
கற்றவொரு வித்து வானைக்
கல்விப்ர சங்கத்தி னுலறிய லாங்குணங்
கனைநடையி னுலறிய லாம்
தனதுசு மடுத்தது பளிங்கினு லறியலாஞ்
சாதிசொல் லாலறிய லாந்
தருநிதி கேள்வியா லறியலாம் பிணிகளைத்
தாதுக்க ளாலறிய லாம்

வனசவிக சிதவான பரிபூர ஞானந்த
வாலவடி வான வேலா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (௩௪)

(இ-ள்.) மனதில் (ஒருவனுடைய) மனத்திலுள்ள, கடும்பகை-கொடும்பகையை, முகத்திலறியலாம் (அவனது) முகக்குறிப்பைக்கொண்டு அவன்சொல்லாமலே யறிந்துகொள்ளலாம், மாநிலம் - பெரியநிலத்திலமுளைத்த, பூடுகள்எல்லாம்-பூண்டுகள்யாவும் செழிக்கும்வகையை, மழையினால் அறியலாம் - (பெய்த) மழையினளவைக்கொண்டே யறிந்துகொள்ளலாம், நல்லார்பொல்லார்தம்மை-நல்லார் பொல்லார் என்பவர்களை, மக்களால்அறியலாம் (அவர்களுடைய) மக்களைக்கொண்டே யறிந்துகொள்ளலாம், கனம்மருவுசூரரை-பெருமையுள்ளசூரர்களின் தன்மையை, சமரினால் அறியலாம் (அவர்களுடைய)போர்த்திறத்தைக்கொண்டு அறிந்துகொள்ளலாம், கற்றஒருவித்துவானை-கல்விகற்ற ஒருபுலவனதுதிறத்தை, கல்விப்ரசங்கத்தினால்அறியலாம் (அவன்செய்யும்) வித்தியா சம்பந்தமான பிரசங்கத்தைக்கொண்டு அறிந்துகொள்ளலாம், குணங்களை - (ஒருவனது) குணங்களை, நடையினால் அறியலாம்-(அவனது) நடத்தையைக்கொண்டு அறிந்துகொள்ளலாம், பளிங்கினால்-கண்ணாடியினால், தனது அகம் அடுத்தது அறியலாம்-(அதனிடத்துச்சார்ந்த) பொருளின் தன்மையை அறியலாம், சாதி-(ஒருவனது) சாதியை, சொல்

லால் அறியலாம்-(அவன்பேசும்) பேச்சைக்கொண்டேயறியலாம், தருநீதி - (நூல்களால்) போதிக்கப்பட்ட நீதிகளை, கேள்வியால் அறியலாம் - (பெரியோர்களிடத்தில்) கேட்கையினாலே யறிந்துகொள்ளலாம், பிணிகளை-வியாதிகளை, தாதுக்களால் அறியலாம்-நாடியோட்டத்தைக்கொண்டே யறிந்துகொள்ளலாம், வனசம்-தாமரைமலர்போல, விகசிதம் மலர்ந்த - வதனமுகத்தையுடையவனே, பரிபூரணாநந்த-நிறைந்த ஆநந்தரூபனே, வாலவடிவு ஆன-இளங்குழந்தையுருவாகிய, வேலாயுதத்தை யுடையவனே, மயிலேறிவிளையாடுகுகனே புல்வயனீடு மலைமேவுகுமரேசனே.

"அடுத்தது காட்டும் பளிங்குபோனெஞ்சங் கடுத்தது காட்டுமுகம்" என மேலோர்கூறுகையால் மனதிற்கடும்பகை முகத்தினாலறியலாம், என்றும் "தக்கார் தகவிலரென்ப தவரவரெச்சத்தாற் காணப்படும்" என்றமேலோர் திருவாக்குக்கிணங்க, 'நல்லோர் பொல்லார் தமை மக்களாலறியலாகும்' என்றும், உயர்ந்த சாதியார் சுத்தமான சொற்களையும், இழிந்தசாதியார் அசுத்தமான சொற்களையும் வழங்குதலால் 'சாதிசொல்லாலறியலாம்' என்றும் கூறினர்.

குணமாறுகை.

குணமிலாத் துஷ்டமிருகங்களையு நயகுணங்
கொண்டுட் படுத்தி விடலாங்
கொடியபல விடநோய்க ளியாவுமௌ ஷதமருந்
கொடுத்துத் திருப்பி விடலாம்

உணர்விலாப் பிரமராட் சசிமுதற் பேய்களை
யுகந்துகூத் தாட்டி விடலா
முபாயத்தி னாற்பெரும் பறவைக்கு நற்புத்தி
யுண்டாக்க லாமுயிர் பெறப்
பிணமதை யெழுப்பலா மக்கினி சுடாமற்
பொருந்துபுன லெனச் செய்யலாம்
பிணியையு மகற்றலாங் காலதூ தவரையும்
பின்புவரு கென்று சொலலாம்
மணலையுங் கயிறாத் திரிக்கலாங் கயவர்குண
மட்டுந் திருப்ப வசமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (௯க)

(இ-ள்.) குணம்இல்லா - குணமில்லாத, துஷ்டமிருகங்களையும்-பொல்லாதமிருகங்களையும், நயகுணம்கொண்டு-நற்குணத்தைக்கொண்டு, உட்படுத்திவிடலாம்-வசப்படுத்திவிடலாம், கொடிய கொடுமையாகிய, பலவிடநோய்கள் யாவும்-பலவகையாகிய விஷநோய்களெல்லாவற்றையும், ஔஷதமதுகொடுத்து-மருந்துகொடுத்து, திருப்பிவிடலாம்-மீட்டுவிடலாம், உணர்வுஇல்லா-அறிவில்லாத, பிரமராக்ஷசிமுதல் பேய்களை-பிரமராக்ஷசி முதலாகிய பேய்களை, உகந்து-களித்து, கூத்தாட்டிவிடலாம்-கூத்தாட்டிவிடலாம், உபாயத்தினால் - தந்திரத்தினால், பெரும்பறவைக்கும்-பெரியபக்ஷிகளுக்கும், நல்லபுத்தி உண்டாக்கலாம்-நல்லபு

த்தி யுண்டாக்கலாம், பிணமதை - பிணத்தை, உயிர்பெற எழுப்பலாம்-உயிர்பெறும்படியெழுப்பலாம், அக்கினி-நெருப்பானது, சுடாமல் - சுடாதிருக்கும்படி, பெரும்புனல் எனசெய்யலாம் மிக்கநீர்போலச்செய்யலாம், பிணியையும் அகற்றலாம்-நோயையும்நீக்கலாம், காலதூதுவரையும்-யமதூதரையும், பின்புவருகென்றுசொல்லலாம்-பின்னேவருகவென்றுசொல்லியனுப்பிவிடலாம், மணலையும்கயிறுதிரிக்கலாம்-மணலையும் கயிறாகத்திரிக்கலாம், கயவர்குணம்மட்டும் திருப்பவசமோ, மயிலேறி விளையாடு குகனேபுல்வயனீடு மலைமேவுகுமரேசனே, எ-று.

துஷ்டமிருகங்கள்முதலான பலவற்றையும் வசப்படுத்துதல்கூடும். கீழ்மக்களைமாத்திரம் வசப்படுத்துதல் கூடாதென்பதாம். நோய்கள் பாம்புமுதலியவைகடித்தலாலுண்டாகும் நோய்கள் பெரும்பறவை கிளிமுதலியன.

இத்தீக்குணத்தோர் இவ்விலங்குபோல்வரெனல்.

தான்பிடித் ததுபிடிப் பென்றுமே லவர்புத்தி
தள்ளிச்செய் வோர் குரங்கு
சபையிற் குறிப்பறிய மாட்டாம னின்றவர்
தாம்பய னிலாத மரமாம்
வீம்பினு லெளியவரை யெதிர்பண்ணி நிற்குமொரு
வெறியர்குரை ஞமலி யாவார்
மிகநாடி வருவோர் முகம்பார்த் திடாலோபர்
மேன்மையில் லாத கழுதை

சோம்பலொடு பெரியோர் சபைக்குட் படுத்திடுந்
தூங்கலே சண்டிக் கடா
சூதுட னடுத்தோர்க் கிடுக்கணே செய்திடுந்
துஷ்டனே கொட்டு தேளாம்
மாம்பழந் தனைவேண்டி யந்நாளி லீசனை
வலமாக வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயலீடு
மலைமேவு குமரேசனே. (௪0)

(இ-ள்.) தான்பிடித்ததுபிடிப்புஎன்று-தான்பிடித்ததே பிடியென்று, மேலவர்புத்தி-மேலோர்களுடையபுத்தியை, தள்ளி-தள்ளிவிட்டு, செய்வோன்-செய்கிறவன், குரங்கு-குரங்குக்குநிகராவன், சபையில்-சபையிலே, குறிப்புஅறியமாட்டாமல்நின்றவன் - குறிப்பறிந்துகொள்ளமாட்டாமல்நின்றவன், பயன் இல்லாத மரம்ஆம்-பயன்கொடாத மரத்துக்குநிகராவன், வீம்பினால்-இறுமாப்பினால், எளியாரை-எளியோரை, எதிர்பண்ணிநிற்கும்-எதிர்செய்துநிற்கிற, ஒருவெறியன்-ஒருவெறியனானவன், இழிஞமலிஆவன்-இழிந்தநாய்க்குச்சமானமாவான், மிகநாடிவருவோர்-மிகவும் நாடிவருவோருடைய, முகம்பார்த்திடா-முகம்பார்க்காத. லோபன் - லோபியானவன், மேன்மையில்லா கழுதை-சிறப்பில்லாத கழுதைக்குநிகராவான், பெரியோர்சபைக்குள்-பெரியோருடைய சபையில், சோம்பலொடு - சோம்பலுடன் படுத்திடும்-படுத்துக்கொள்ளுகிற, தூங்கலே-தூங்கலே, சண்டிகடா-சண்டிக்கடாவுக்குநிகராவான்

சூதுடன்-சூதோடு, அடுத்தோர்க்கு-அண்டினவர்க்கு, இடுக்கணேசெய்திடும்-துன்பத்தையேசெய்கிற, துஷ்டனே-துஷ்டனே, கொட்டுதேள் ஆம்-கொட்டுகிற தேளுக்குநிகராவான், அந்நாளில்-அக்காலத்தில், மாம்பழந்தனைவேண்டி-மாங்கனியைவிரும்பி, ஈசனை-சிவபிரானை, வலமாகவந்த-பிரதக்ஷிணமாகவந்த, முருகா - முருகக்கடவுளே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயலீடு மலைமேவு குமரேசனே, எ-று.

குறிப்பு-சிறுமிட்டு. தாங்கல்-நாங்குரூஞ்சி, சண்டிக்கடா-முறட்டுக்கடா. ஞமலி-நாய்.

அற்பர்வாழ்வால் குணம் வேறுபடுதல்.

அற்பர்க்கு வாழ்வுசற் றதிகமா னல்விழிக்
கியாவருரு வுந்தோன் றிடா
தண்டிநின் றேநல்ல வார்த்தைதக னுரைத்தாலு
மவர்செவிக் கேறி டாது
முற்பக்ஷ மானபேர் வருகிலும் வாருமென
மொழியவும் வாய்வ ராது
மோதியே வாதப் பிடிப்புவந் ததுபோல
முன்காலை யகல வைப்பார்
விற்பன மிகுத்தபெரி யோர்செய்தி சொன்னாலும்
வெடுவெடுத் தேகி நிற்பார்
விருதா மகத்துவப் பேயது சவுக்கடி
விழும்போது தீருமென்பார்

மற்புயந் தனினீப மாலையணி லோலனே
 மார்பனே வடிவே லவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேசனே. (௯௪)

(இ-ள்.) அற்பர்க்கு-அற்பருக்கு, வாழ்வுசற்று அதிகமானால்-செல்வஞ்சிறிது அதிகரித்தால், விழிக்கு-அவரதுகண்களுக்கு, யாவர் உருவும் தோன்றிடாது-ஒருவ ருருவமும் காணப்படாது, அண்டிநின்று நல்லவார்த்தைகள் உரைத்தாலும்-அடுத்துநின்று நல்லசொற்களைச் சொன்னாலும், அவர் செவிக்கு ஏறிடாது-அவர்களுடையகாதுக்கேறாது, பக்ஷமானபேர்-அன்புள்ளபேர், முன்வருகினும்-முன்னே வந்தாலும், வாருமெனமொழியவும்-வாருமென்றுசொல்லவும், வாய்வராது - வாய்வராது, வாதப்பிடிப்புவந்ததுபோல-வாதப்பிடிப்புவந்தாற்போல, முன்காலை-முன்னங்காலை, மோதி அகலவைப்பார்-மோதிவிரியவைப்பார்கள் விற்பனம்மிகுந்த-கல்வியிற்சிறந்த, பெரியோர்செய்திசொன்னாலும்- பெரியோர்களுடைய பெருமையாகிய சங்கதியைச்சொன்னாலும், வெடுவெடுத்து-கடுகடுத்து, ஏசிநிற்பார்-வைதுநிற்பார்கள் (இத்தன்மையோர்க்கு) விருதா-வீணாகிய, மகத்துவப்பேயது-மகத்துவமாகியபேயானது சவுக்குஅடி விழும்போது-சவுக்கடிவிழும்போது, தீருமென்பார்-நீங்குமென்றுசொல்லுவர் (பெரியோர்) மல-மற்போர்க்குரிய, புயந்தனில்-தோளில், நீபமாலை அணி-கடப்பமலர்மாலையையணிந்த, லோலனே-லோலனே, மார்ப

னே-மார்பை யுடையவனே, வடிவேலா-வடிவேலையுடைய வனே, மயிலேறிவிளையாடு குகனேபுல்வயனீடு மலைமேவு குமரேசனே. -எ-று.

வாழ்வு-செல்வம். விற்பனம்-கல்வி. நிவர்த்தல்-நிட் டுதல். மகத்துவம்-பெருமை.

இத்தீங்குயோரிக்கோள்போல்வரெனல்.

அன்னைதந்தையர்புத்தி கேளாத பிள்ளையோ
வஷ்டமச் சனி யாகுவா
னஞ்சாம லெதிர்பேசி நிற்குமனை யாள்வாக்
கங்கார கச் சன்ம மாம்
தன்னையிஞ் சிச்சொன்ன வார்த்தைகே ளாவடிமை
சந்திராஷ் டகமென்ன லாந்
தன்பங்கு தாவென்று சபையேறு தம்பியோ
சார்ந்தசன் மச்சூரி யன்
நன்னய மிலாதவஞ் சனைசெய்த தமையன்மூன்
றாமிடத்தில் வியா ழம்
நாடோறும் விரோதமிடு கொண்டோன் கொடுத்துளோ [ன்
ராகுகே துக்க ளெனலாம்
மன்னயனை யன்றுசிறை தனிலிட்டு நம்பற்கு
மந்திர முரைத்த குருவே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (௪௨)

(இ-ள்.) அன்னைதந்தையர் புத்திகேளாத பிள்ளை-தாய் தந்தையர் புத்தியைக்கேளாதபிள்ளை, அஷ்டமச்சனி ஆ

குவான்-அஷ்டமத்திற்சனியைநிகர்ப்பான், அஞ்சாமல்-பயப்படாமல், எதிர்பேசிநிற்கும்மனையாள் - எதிர்பேசிநிற்கிற மனைவியானவள், வாக்கில் அங்காரகச் சன்மமாம்-வாக்கில் அங்காரகனுள்ள பிறவியாவள், தன்னைமிஞ்சி-தன்னளவுமிஞ்சி, சொன்னவார்த்தைகேளா அடிமை-சொன்னசொல்லைக்கேட்காத அடிமையானவன், சந்திராஷ்டகம் என்னலாம்-சந்திராஷ்டகமென்றுசொல்லப்படுவான் தன்பங்குதாவென்று-தன்பங்குகொடுவென்று, சபையேறுதம்பி-நியாயசபைக்கேறுகிற தம்பியானவன், சார்ந்த சன்மச்சூரியன்-பொருந்திய சென்மத்திற் சூரியன்போல்வான், நல்நயம்இல்லாது-நற்குணமில்லாமல், வஞ்சனைசெய்ததமையன்-வஞ்சனைசெய்த தமையனானவன், மூன்றுமிடத்தில்வியாழம் - மூன்றாமிடத்தில் வியாழம்போல்வான், நாள்தோறும்-தினந்தோறும், விரோதமிடு-கலகஞ்செய்கிற, கொண்டோன் கொடுத்தோன் - கொண்டவனும் கொடுத்தவனும், ராகுகேதுக்கள்எனலாம்-ராகுகேதுக்களாவார்களென்று சொல்லலாம், மன் - நிலைபெற்ற, அயனை-பிரமனை, அன்று-அக்காலத்தில், சிறைதனில்இட்டு-சிறையில்வைத்து, நம்பற்கு - சிவபெருமானுக்கு, மந்திரம் உரைத்தகுருவே-மந்திரோபதேசம்செய்த ஆசாரியனே, மயிலேறிவிளையாடு குகனே புல்வயலீடு மலைமேவு குமரேசனே, எ-று.

மந்திரம் என்றது பிரணவமந்திரத்தை.

நல்வினைஞ் சேர்பயன்.

சந்தனவிருக்ஷத்தை யண்டிநிற் கின்றபல
தருவுமவ் வாசனை தருந்

தங்கமக மேருவை யடுத்திடுங் காக்கையுஞ்
சாயல்பொன் மயமே தரும்
பந்தமிகு பாலுடன் விளாவிய தண்ணீரெலாம்
பால்போ னிறங் கொடுக்கும்
படிகமணி கட்குளே நிற்கின்ற வடமுமப்
படியே குணங் கொடுக்கும்
அந்தமிகு மாகதக் கல்லைத் தரித்திடி
லடுத்ததும் பசுமை யாகு
மானபெரி யோர்களொடு சகவாச மதுசெயி
லவர்கள்குணம் வருமென்பர் காண்
மந்தர நெடுங்கிரியின் முன்கடல் கடைந்தவரி
மருகமெய்ஞ் ஞான முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (சுஅ.)

(இ-ள்.) சந்தனவிருக்ஷத்தை - சந்தநமரத்தை, அண்டி நிற்கின்ற-அடுத்து நிற்கிற, பலதருவும்-பலவகைமரங்களும், அவ்வாசனை தரும்-அந்தவாசனையையேவீசும், தங்கம்மகமேருவை-பொன்மயமாகியமகமேருமலையை, அடுத்திடும்காக்கையும்-அடுத்திருக்கிறகாகமும், சாயல்-நிறத்தால், பொன்மயமேதரும்-பொன்மயமாகவேயிருக்கும், பந்தம் மிகுபாலுடன்-விருப்பமிகுதியைக்கொடுக்கிற பாலோடு, விளாவிய-கலந்த, தண்ணீர்எல்லாம்-தண்ணீர்முழுதும்,பால்போல் நிறம்கொடுக்கும்-பால்போல நிறத்தைத் தரும், படிகமணிகட்கு உள்ளேநிற்கின்றவடமும்-படிகமணிகளு

க்குள்ளேயிருக்கிறகயிறும், அப்படியேகுணம்கொடுக்கும் அப்படியேகுணத்தைத்தரும், அந்தம்மிகு-அழகுமிகுந்த மரகதக்கல்லை தரித்திடின்-மரகதக்கல்லைத்தரித்தால், அடுத்ததும்-அதனையடுத்திருப்பதும், பசுமைஆகும்-பச்சைநிறமாயிருக்கும், ஆன-நன்மையாகிய, பெரியோர்களொடு சகவாசமதுசெயில்-பெரியோர்களுடன் சிநேகஞ்செய்தால், அவர்கள் குணம்வரும்-அவர்களுடைய குணமே யுண்டாகும், என்பர்-என்றுசொல்லுவர் (அறிஞர்) மந்தரநெடுங்கிரியின்-மந்தரமென்கிற பெரியமலையினால், முன்-முற்காலத்தில், கடல்கடைந்த-பாற்கடலைக் கடைந்த, அரிமருக-திருமால்மருகனே, மெய்ஞ்ஞானம் முருகா-மெய்ஞ்ஞானத்தைத்தருகிற முருகக்கடவுளே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயலீடு மலைமேவு குமரேசனே, எ-று.

பந்தம்-விருப்பம். படிகமணி-பளிங்குமணி. வடம்-கயிறு. மரகதம்-பச்சைரத்நம். சகவாசம்-கூடிவாழ்தல்.

வலியோரையுழ்விடாமை.

அன்றுமுடிசூடுவ திருக்கரகு ராமன்மு
னருங்கா டுறைந்ததென்ன
வண்டரெல் லாமமிர்த முண்டிடப் பரமனுக்
காலம் லபித்ததென்ன
வென்றிவரு தேவர்சிறை மீட்டநீ களவில்வே
டிச்சியைச் சேர்ந்ததென்ன
மேதினி படைக்குமய னுக்கொரு சிரம்போகி
வெஞ்சிறையி லுற்றதென்ன

என்றுமொரு பொய்சொலா மன்னவன் விலைபோன
 தென்னகாண் வல்ல மையினு
லெண்ணத்தி னுலொன்றும் வாராது பரமசிவ
 னெத்தனப் படிமுடியு மாம்
மன்றுதனி னடனமிடு கங்காதரன் பெற்ற
 வரபுத்ர வடி வேலவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேச னே. (௪௪)

(இ-ள்.) அன்று-அக்காலத்தில், முடிசூடுவது இருக்க-மகுடந்தரிப்பதாயிருக்க, ரகுராமன்-இரகுராமனனவன், முன்-முன்னுளில், அருங்காடு உறைந்ததுஎன்ன-அருமையாகியகாட்டில் வசித்ததற்குக்காரணம்யாது, அண்டர்எல்லாம்-தேவர்கள்எல்லாரும், அமிர்தம்உண்டிட - அமுதத்தையுண்ணுநிற்க, பரமனுக்கு-சிவபெருமானுக்கு, ஆலம்லயித்ததுஎன்ன - விஷம்கிடைத்தற்குக்காரணம்யாது, வென்றிவருதேவர் சிறைமீட்டசீ-வெற்றியையுடைய தேவர்சிறையைமீட்டசீ, களவில்-திருட்டுத்தனமாக, வேடிச்சியைசேர்ந்ததுஎன்ன-குறத்தியைப் புணர்ந்ததற்குக் காரணம்யாது. மேதினிபடைக்கும்-உலகத்தைப்படைக்கின்ற, அயனுக்கு-பிரமனுக்கு, ஒருசிரம்போகி - ஒரு தலையிழந்து, வெம்சிறையில் உற்றதுஎன்ன-கொடிய சிறையில் இருந்ததற்குக்காரணம்யாது, என்றும்-எக்காலத்தும், ஒரு பொய்சொலாமன்னவன்-ஒருபொய்யைச்சொல்லாத மன்னவனுகிய அரிச்சந்திரன், விலைபோனதுஎன்ன-விலைபட்டதற்

குக்காரணம்யாது, வல்லமையினல்-சொந்த சக்தியினலும், எண்ணத்தினல்-ஆலோசனையினலும்,ஒன்றும்வாராது ஒருபொருளும்லபிக்காது, பரமசிவன்-பரமசிவனது, எத்தனப்படி-திருவுளப்படியாகவே,முடியும் (எல்லாக்காரியங்களும்) முடிவுபெறும், மன்றுதனில்-கனகசபையில், நடனமிடு-நடனஞ்செய்கின்ற, கங்காதரன் - சிவபெருமான், பெற்ற-ஈன்றருளிய, வரபுத்ர-மேன்மையானபுதல்வனே, வடிவேலவா-வடிவேலையுடையவனே, மயிலேறிவிளையாடு குகனேபுல்வயனீடு மலைமேவுகுமரேசனே, எ-று.

அருங்காடுறைந்தது-வனவாசஞ் செய்தது. புலிமுதலிய மிருகங்கள் நெருங்கி யிருத்தலால் அவ்விடத்து வேறொருவர் சஞ்சரித்தற்கு இயலாதென்பதுதோன்ற அருங்காடென்றார். வேடிச்சி - வள்ளிநாயகி. விலைபோனது அடிமைப்பட்டது.

பெரியோர்வாக்ய பரிபாலனஞ் செய்தது.

தந்தைதாய் வாக்யபரி பாலனஞ் செய்தவன்
தசரத குமார ராமன்
றமையனருள் வாக்யபரி பாலனஞ் செய்தோர்
தருமனுக் கிளைய நால்வர்
சிந்தையி லுணர்ந்தகுரு வாக்யபரி பாலனஞ்
செய்தவ னரிச் சந்திரன்
தேகியென் றோர்க்கிலை யெனுவாக்ய பாலனஞ்
செய்தவன் றூன கன்னன்
சிந்தைதவிர் வாக்யபரி பாலனஞ் செய்தவ
னீள்பெல மிகுத்த வருமா

ணிறையுடன் பத்தாவின் வாக்யபரி பாலனை
நிலத்தினி னளாயினி செய்தாள்
மாந்தைவழி கோயில்குல மூங்குலவு தம்பிமுகன்
மகிழ்சர வுகந்த துணைவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (சஎ)

(இ-ள்.) நிலத்தினில்-இந்தபூலோகத்திலே, தசரதகுமா ரராமன்-தசரதசக்ரவர்த்தியுடைய திருமகனு யவதரித்த ஸ்ரீராமன், தந்தைதாய்வாக்ய பரிபாலநம்செய்தவன்-மா தாபிதாக்களுக்கு இளையநால்வர்-தருமபுத்திரற்கு இளைய வர்களாகிய வீமன் அர்ச்சுனன் நகுலன் சகாதேவன் என் னும்நால்வரும், தமையன்அருள் வாக்யபரிபாலநம்செய் தோர்கள்-தமையனுக்கறிய வாய்மொழியை நன்றாகப் பாதுகாத்தவர்கள், அரிச்சந்திரன்-அரிச்சந்திரனைவன், சிந்தையில்உணர்ந்து குருவாக்ய பரிபாலநஞ்செய்தவன்-மனத்திலறிந்துகொண்டு தனது ஆசாரியன் சொன்ன வார்த்தையை நன்றாகப்பாதுகாத்தவன், தானம் கன்ன ன்-ஈகையிற்சிறந்தகர்ணன்,தேகியென்றோர்க்குஇல்லையெ னு வாக்யபரிபாலநம் செய்தவன்-கொடுஎன்று சொல்லி யிறந்தவர்க்கு இல்லையென்று சொல்லாமையாகிய மொழி யை (தன்னிடம்விட்டுநீங்காதபடி) பாதுகாத்தவன், மீன் பெலம்மிகுந்த அநுமான், மிகுதியானபலம் அதிகமாகப் பெற்ற அநுமான், நிந்தைதவிர்வாக்யபரிபாலநம்செய்த வன்-பழிப்பற்ற (பெரியோர்)சொல்லை நன்றாகப்பாதுகா

த்தவன், நளாயினி-நளாயினியானவள், நிறைவுடன்-கற்பு நிலேயுடனே, பத்தாவின் வாக்ய பரிபாலநம்செய்தாள்-தன்கணவனது சொல்லே நன்றாகப்பாதுகாத்தாள், மந்தை-ந்தைவெளியிலும், வழி-வழியிலும், கோயில்-கோயிலிலும், குளமும்-குளக்கரையிலும், குலவு-எழுந்தருளியிருக்கிற, தும்பிமுகன்-யானைமுகத்தையுடையவனுகிய விநாயகக்கடவுள், மகிழ்தர-மகிழ்ச்சியடைய, உகந்த (அவனுடன்) விரும்பி விளையாடுகின்ற, துணைவா (அவனது) தம்பியே, மயிலேறிவிளையாடு குகனே புல்வயனீடுமலேமேவுகுமரேசனே. எ-று.

ஸ்ரீ ராமபிரான், தன்தந்தையாகிய தசரதன் தன்சிறியதாயாகிய கைகேசிக்குக் கொடுத்திருந்தவரங்களைநிறைவேற்றும்பொருட்டு, அவள் கட்டளைப்படி பரதனுக்கு நாடுகொடுத்துத் தான் காடுபுகுந்தது ஸ்ரீராமாயணத்தால் விசதம். பாண்டவரைவருள் வீமன்முதலிய தம்பிமார் நால்வரும் தமையனை தருமபுத்திரனது கட்டளையை ஒருபொழுதுங்கடவாதல் அதற்கிணங்கி நடந்துவந்தமை மஹாபாரதத்தால் பிரசித்தம்.

அரிச்சந்திரன் சூரியகுலத்தில் திரிசங்குமகாராஜனது குமாரன். தேவேந்திரன் ஒருநாள் தன்சபையில் வந்திருந்த முனிவர்களைநோக்கி, பூலோகத்தரசர்களில் சத்தியம்முதலியவற்றிற்சிறந்தவர் யாரென்றுகேட்க, சூரியவமிசகுருவாகிய வசிஷ்டர், அரிச்சந்திரன் சிறந்தவனென்று சொல்ல, விசுவாமித்திரர் அதனைமறுத்து, அந்த அரிச்சந்திரன் எவ்வகையிலும் மிகத்தாழ்ந்தவன் என்றுசொல்லி

ச்சாதிக்கையில், அரிச்சந்திரன் சத்தியமுதலியவற்றில் தவறினால், நான் தவஞ்செய்வதைவிட்டு தலையோட்டில் கள்ளையேந்திக்கொண்டு தெற்கே போவேனென்று வசிஷ்டரும், அவன் தவறாதிருந்தால் என் தவத்தில் பாதிகொடுப்பேனென்று விசுவாமித்திரரும் இந்திரன் முன்னிலையில் சபதஞ்செய்துகொண்டார்கள். பிறகு விசுவாமித்திரர் பலவகையாகிய பெருந்தீங்குகளைச்செய்ய, அத் தீங்குகளுக்கு அரிச்சந்திரன் மனங்கலங்காமல் நாடுவிட்டுக் காடுபுகுந்து காசியையடைந்து, தன் மனைவியைவிற்றுத் தன்னையும்விற்றுப் புலையனுக்கு அடிமையாகிப் பலபெருந் துன்பங்களையனுபவித்து, சத்தியமுதலியநல்லொழுக்கங்களில் சிறிதும்தவறாமல் சத்திய அரிச்சந்திரனென்று பேர்பெற்று இவ்வாறு குருவாக்கிய பரிபாலனஞ்செய்து, முடிவில் சுகமடைந்தானென்பது புராணப்பிரசித்தம்.

குந்திதேவி கன்னிகையாயிருந்தபோது சூரியனனுக்கிரகத்தால் அவளிடம் கவசகுண்டலங்களுடன் பிறந்தவனும் பஞ்சபாண்டவர்க்குத் தமையனுமான கர்ணன் எவர்க்கும் வேண்டிய பொருள்களையெல்லாம் இல்லையென்னாமல் அளிக்கும்வண்மையில் சிறந்தவனாய், அந்தணவடிவங்கொண்டு தன்னிடம்வந்து இரந்த இந்திரனுக்குத் தனது கவசகுண்டலங்களை அறுத்துக்கொடுத்ததல்லாமல், போரில் தான் இறக்கும்பொழுது, அந்தண வடிவங்கொண்டுவந்து இரந்த கண்ணபிரானுக்குத் தன் புண்ணியமனைத்தையும் ஈந்து தான் கர்ணனென்று புகழ்பெற்றமை, மகா பாரதத்தில் பிரசித்தம்.

அனுமான், இராமபிரானது வார்த்தையின்படி சுக்ரீபன்கூறிய கட்டளைதவறாமல் சீதையைத்தேடுதற்குப் புறப்பட்டுச் செல்லும்வழியில் சம்பாதிசொன்னசொல்லைத் தழுவிக்கடல்கடக்கவேண்டியபொழுது ஜாம்பவான்சொன்ன வாக்கியத்தைமேற்கொண்டு கடல்கடந்து இலங்கை சேர்ந்து அசோகவனத்தில் பிராட்டியைக் கண்டு பெருமாள்சொன்ன செய்திகளையெல்லாம் அவளிடம்சொல்லி அவள்சொன்ன சொற்களைச் சிரமேற்கொண்டு மீண்டு இராமபிரானிடம்வந்து செய்திகூறி அதன்பின்பு கடலிலணைகட்டுதல், அரக்கரோடு போர்செய்தல், இருமுறை சஞ்சீவிமலைகொணர்தல்முதலிய அரிய பெரிய காரியங்களெல்லாம் இராமன் சுக்ரீவன் ஜாம்பவான்முதலிய பெரியோர்சொன்ன சொற்களின்படியே செய்து இராமதாசனாய் ஒழுகியமை இராமாயணப்பிரசித்தம். அனுமான் துணிந்து முயன்று கடல்கடந்திராவிட்டால் வானரதூதரனைவரும் சுக்கிரீவாஞ்ஞையைப் பரிபாலனஞ்செய்து பழிக்குப் பாத்திரமாதலுங் காண்க.

நளாயனி என்பவள், திரௌபதியின் முதற்பிறப்பு; அவள்கணவனை மௌற்கலியன் அவளுடைய கற்பினுறுதியையும் அன்புநிலையையுஞ் சோதிக்கக்கருதி பெருங்குஷ்டநோயும் அதனாற் சிதைந்தவடிவமும் அதிககிழத்தனமும் எப்பொழுதும் பெருங்கோபமும் உடம்பில் துர்க்கந்தமுமுடையவனாய்த் தன்னைக்காட்ட, அப்பொழுதும் அவள் அவன்பக்கல் அன்புசிறிதுங்குறையாமல் அவனுக்குப் பலவகையுபசாரங்களையும் வழுவாது நன்மனத்தோடு

புரிந்து முறைப்படி அவனுண்டு மிகுந்த எச்சிலைத் தானு ண்டு வாழ்ந்திருக்கையில், ஒருநாள் அவனுண்ட மிச்சிலில் அவனுடைய கைவிரலொன்று அற்று வீழ்ந்து கிடக்கக்க ண்டும் சிறிதும் அருவருப்புக்கொள்ளாமல் அதனை எடுத் துவைத்துவிட்டு அவ்வுணவை அன்போடு உண்ண அங்ஙு னம் அவள் நிலைகுலையாது வழிபட்டுவந்ததை அவன்பார் த்து மிகுந்த திருப்திகொண்டு தனது நோய்வடிவத்தை யொழித்துத் தவமகிமையால் காமனிலும் அழகிய வடிவ ங்கொண்டு அவளைநோக்கி 'நினக்குவேண்டும்வரம் வேண் டுவாய்' என்ன, அவள் வேறொருவரத்தையுங் கேளாமல் உன் அன்பு எப்பொழுதும் என்னிடம் நீங்காதாகுகஎன் றுசொல்ல, அங்ஙனமே அவன் உடன்பட்டு ஐந்து வடிவ ங்கொண்டு இவளோடு கூடிவாழ, இவ்விருவரும் இங்ஙன ம் நெடுங்காலங்கழித்தபின், நளாயினி விதிவசத்தால் இற ந்து மறுபிறப்பில் இந்திரசேனையென்னும் பெயருடைய வளாய் அவனிடம்வர, அப்பொழுது அவன் தவஞ்செய் புங் கருத்துடையவனாய் அவளுக்கு இடங்கொடாது விட் டுச் செல்லும்பொழுது அவள் அவனை நோக்கி 'யான் இ னியென்செய்வது?' என்று வினவி அவன் கட்டளையிட்ட படி அர்த்தநாரீசுவரமூர்த்தியை நோக்கித் தவஞ்செய்து வரம்பெற்று அடுத்த ஜன்மத்தில் திரௌபதியாய்த் தோ ன்றிப் பஞ்சபாண்டவரை மணஞ்செய்து வாழ்ந்தனளெ ன்பது பாரதப்பிரசித்தம்.

முயற்சியின்மிக்க தூறெனல்.

வங்காள மேறுகினும் வாருகோ லொருகாசு
மட்டன்றி யதிக மாமோ

வானேறி யுயரப் பறந்தாலு மூர்க்குருவி
வண்ணப் பருந் தாகுமோ
கங்கா சலந்தன்னின் மூழ்கினும் பேய்ச்சுரைக்
காய்நல்ல சுரை யாகுமோ
கடலுக்கு ணாழியை யமுக்கியே மொண்டிடிற்
காணுமோ நாழி காண்
ஐங்காத மோடினுந் தன்வினைக டன்னோடே
யடையாம னீங்கி விடுமோ
வாரிடஞ் சென்றாலும் வெகுதொலைகள் சுற்றினு
மமைத்தபடி யன்றி வருமோ
மங்காத செந்தமிழ்க் கொண்டுநக் கீரர்க்கு
வந்ததுயர் தீர்த்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (௯௬)

(இ-ள்.) வங்காளம் ஏறுகினும்-வங்காளத்துக்குக் கப்பலேறிப்போனாலும், வாருகோல்-துடைப்பம், ஒருகாசுமட்டு அன்றி-ஒருகாசளவேயன்றி, அதிகம்ஆமோ - அதிகமாகுமோ, வான்ஏறி-ஆகாயத்திலெழும்பி, உயரப் பறந்தாலும்-உயர்வாகப்பறந்தாலும், ஊர்க்குருவி-ஊர்க்குருவியானது, வண்ணப்பருந்துஆகுமோ - அழகை யுடைய பருந்தாகுமோ, கங்காசலந்தன்னில் மூழ்கினும் - கங்கையாற்றின்நீரில்முழுகினாலும், பேய்ச்சுரைக்காய்-பேய்ச்சுரைக்காயானது, நல்ல சுரையாகுமோ - நல்லசுரைக்காயாகுமோ, கடலுக்குள்-கடலில், நாழியை-ஒருநாழியை, அமு

க்கியே மொள்ளினும்-அமுக்கியே மொண்டாலும், நாழி காணுமோ - நாழி நீரைக்கொள்ளுமோ, ஐங்காதம் ஓடினும்-ஐந்துகாததூரம் ஓடினாலும், தன் வினைகள் (ஒருவனது) வினைகள், தன்னோடே அடையாமல் - அவனோடு கூடாமல், நீங்கிவிடுமோ-ஒழிந்துவிடுமோ, ஆரிடஞ்சென்றாலும்-யாரிடத்திற்போனாலும், வெகுதொலைகள்சுற்றினும்-வெகுதூரஞ்சுற்றினாலும், அமைத்தபடி அன்றிவருமோ-(அவரவர்க்குக் கடவுளால்) அமைக்கப்பட்டபடியேயன்றி உண்டாகுமோ, மங்காத - அழியாத, செந்தமிழ்கொண்டு-செந்தமிழ்ப்பாடலை யேற்றிக்கொண்டு, நக்கீரர்க்கு வந்ததுயர்-நக்கீரர்க்குவந்த துன்பத்தை, தீர்த்தமுருகா-நீக்கியருளின முருகக்கடவுளே, மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு மலைமேவு குமரேசனே; எ-று.

வங்காளம்-ஐம்பத்தாறு தேசங்களுள் ஒன்று. வாருகோல்-துடைப்பம். நாழி-படி. அமுக்குதல்-அழுத்துதல்.

இடும்பாலழிவு.

சூரபத்மன் பெருமிதமிராவணன் றிறமுந்
　　துடுக்கான கஞ்சன் வலியுந்
துடியான விரணியன் வரப்ரசாதங்களுந்
　　தொலையாத வாலி திடமும்
பாரமிகு துரியோதனாதிநூற் றுவரது
　　பராக்ரமமு மது கைடவர்
பாரிப்பு மாபெலிதனுண்மையுஞ் சோமுகன்
　　பாங்கிலுறு வல்லமைகளும்

ஏரணவு கீசகன் கனதையுந் திரிபுர
　　ரெண்ணமுந் தக்க னெழிலு
　மிவர்களது சம்பத்து நின்றவோ வவரவ
　　ரிடும்பா லழிந்த வன்றோ
மாரனைக் கண்ணுதலெரித்தருள் சிவன்றந்த
　　வரபுத்ர வடிவேலவா
　மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
　　மலைமேவு குமரேசனே. (௪௭)

(இ-ள்.) சூரபத்மன்-சூரபதுமனுடைய, பெலமும்-வலிமையும், இராவணன்-இராவணனுடைய, தீரமும் தைரியமும், துடுக்குஆன-தீக்குணமுள்ள, கஞ்சன்-கம்சனுடைய, வலியும்-பலமும், துடிஆன-மேன்மைகொண்ட, இரணியன்-இரணியன்பெற்ற, வரப்ரசாதங்களும்-வரஅனுக்கிரகங்களும், தொலையாத-அழியாத, வாலிதிடமும்-வாலியினதுவலிமையும், பாரம்மிகு-(பூமிக்கு) பாரமாக மிகுந்த, துரியோதன ஆதி நூற்றுவரது-துரியோதனன்முதலிய நூறுபேர்களுடைய, பராக்ரமமும்-பகைவெல்லும் வல்லமையும், மதுகைடவர்-மதுகைடவன் என்னும் அசுரர்களுடைய, பாரிப்பும்-பெருமையும், மாபலிதன்-மகாபலிச் சக்ரவர்த்தியினுடைய, ஆண்மையும்-பௌருஷமும், சோமுகன்பாங்கில் உறு-சோமுகாசுரனிடத்திற்பொருந்திய, வல்லமைகளும்-திறமைகளும், ஏர் அணவு-வளர்ச்சி பொருந்திய, கீசகன்-கீசகனுடைய, கனதையும்-பெருந்தன்மையும், திரிபுரர்-திரிபுரத்து அசுரர்களுடைய, எழிலும்-செருக்கும், இவர்களது சம்பத்தும்-இவர்களுடையஐசுவரியங்

களும், நின்றவோ-நிலை நின்றனவோ (இல்லையே) அவரவ ர் இடும்பால் அழிந்த அன்றோ - அவரவர்கள்செய்த தீச் செயல்களினால் அழிந்துவிட்டன அன்றோ, மாரனை-மன் மதனை, கண்ணால்-நெற்றிக்கண்ணைக்கொண்டு, எரித்து-எ ரித்து, அருள் (பின்பு அவனுக்கு) அருள்செய்த, சிவன்- சிவபிரான், தந்த-பெற்ற, வரபுத்ர-சிறந்தகுமாரனே-வடி வேலவா-வடிவேலையுடையவனே, மயிலேறிவிளையாடு குக னேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

காசிபமுனிவர்க்கு மாயாதேவியினிடந் தோன்றிய சூரபதுமன், தனதுதம்பியரான சிங்கமுகன், தாருகனெ ன்றவர்களுடனே வளர்ந்து சிவபிரானைக்குறித்துத் தவஞ் செய்துவரம்பெற்றுச் செருக்கிப்பொருதுதேவர்களைவெ ன்று தென்கடலிடையில் மகேந்திரநகரத்திலிருந்து கொ டுங்கோல்செலுத்தி ஆயிரத்தெட்டண்டங்களை அரசாண் டு தேவர்க்கும்முனிவர்க்கும் யாவர்க்கும் பலபெருந்தீங்கு கள் செய்துவருகையில், தேவர்கள் வேண்டுகோளின்படி சிவபிரானால் உண்டாக்கப்பட்ட முருகக்கடவுள் சென்று போர்செய்து அவர்களையெல்லாம் அழித்திட்டார்.

பலவகைவலிமைகளையும் மிகுதியாகப்படைத்தஇரா வணன், இராமபிரானால் அழிவடைந்தான் காலநேமியெ ன்னும் அசுரனது அம்சமான கம்சன் மற்றும்பல அசுரர் களின் அம்சமான அரசர்களுடன்கூடி உலகத்திற் பலபெ ருந்தீங்குகளைச்செய்துவர, அவனுக்கு மருமகனாய்அவத ரித்த கண்ணபிரான் அவனைக் கூட்டத்தோடு அழித்திட்

டான். இரணியன்பெற்ற வரபலமுழுதும் நரசிங்கமூர்த்தியினுல் நிலைகுலைந்தது தன்னுடன் எதிர்த்தார்வலிமையிற்பாதி தன்வலிமையில்வந்துகூடும்படி வரம்பெற்றவாலி, சுக்ரீவனோடு பொருகையில் அவ்வாலியை இராமபிரான் மறைவிலிருந்து அம்புஎய்து கொன்றுவிழுத்தியதனுல் அவ்வலிமை பயனிலதாயிற்று. துரியோதனுதியர் நூற்றுவரையும் மகாபாரதயுத்தத்தில் வீமன்கொன்றுன். மதுகைடவரென்பவர், ஆதிசிருஷ்டிகாலத்தில் தோன்றினவர். மகாபலசாலிகளான இவ்வசுரர் இருவரும் செருக்கிக்கடலில் இழிந்து திருமாலை யெதிர்த்து நெடுங்காலம் போர்புரிய, இவர்களை அப்பெருமான் துடையாலிடுக்கிக் கீழேதள்ளிக் கால்களால்மிதித்துத் துவைத்துவதைத்தான். மகாபலியென்னும் அசுரராசன் தன்வல்லமையால் இந்திரனையும் வென்று மூவுலகையும் அரசாண்டபொழுது, அரசிழந்த தேவர்களின் வேண்டுகோளால் திருமாலுக்குள்ளவடிவான வாமநாவதாரஞ்செய்து அந்தப்பலியினிடஞ்சென்று தன் காலடியினுல் மூவடிமண்வேண்டி அதுகொடுத்ததற்கு அவன் இசைந்தவுடனே திரிவிக்கிரமனுக ஆகாயத்தையளாவி வளர்ந்து ஓரடியால்பூலோகத்தையும், ஓரடியால்மேலுலகத்தையும் அளந்து மற்றோரடிக்காக அவன் முடியிற் கால்வைத்து அவனைப் பாதாளத்திலழுத்தி அடக்கினன். முன்ஒருகாலத்தில் பிரமதேவன் கண்துயில்கையில் சோமுகன்என்னுமசுரன் வேதங்களையெல்லாம் கவர்ந்துகொண்டு கடலினுள் மறைந்துசெல்ல, பிரமன்முதலிய தேவர்களின்வேண்டுகோளால் திருமால் ஒருபெரியமீனுசுத்திருவவதரித்துக் கடலினுட்புக்கி அவ்வசுரனைத் தேடிப்பிடித்

துக்கொன்று, அவன்கவர்ந்துசென்ற வேதங்களைமீட்டுக் கொணர்ந்து அன்னவடிவமாய் அவற்றைப் பிரமனுக்கு உபதேசித்தருளினன். விராடராசனது மைத்துனனும்சேனைத்தலைவனும் மகாபலசாலியுமாகிய கீசகன் அஞ்ஞாதவாசகாலத்தில் வண்ணமகளாய் உருக்கரந்திருந்த திரௌபதியைப்பார்த்து மோகங்கொண்டு பலாத்காரம்செய்ய, அதையறிந்த வீமசேனன் ஒருநாள் நடுராத்திரியில் அக்கீசகனைக்கொன்று உடனே அவன்தம்பிமார்நூற்றுவரையும்வதைசெய்தான். தாரகாசுரனது புத்திரர்களாகிய வித்யுந்மாலி தாரகாக்ஷன் கமலாக்ஷன்என்னும்மூவரும் தவஞ்செய்து பிரமனிடம்வரம்பெற்று வானத்திற்பறந்துசெல்லும் மூன்றுபட்டணங்களையடைந்து மற்றும்பல அசுரர்களோடு அந்நகரங்களுடன் தாம்நினைத்தயிடங்களிற் பறந்துசென்று பலஇடங்களையும் பாழாக்கிவருகையில் அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாத தேவர்முனிவர்முதலியோரதுவேண்டுகோளினால் சிவபெருமான் பூமியைத்தேராகவும் சந்திரசூரியரைத் தேர்ச்சக்கரங்களாகவும், நான்குவேதங்களை நான்குகுதிரைகளாகவும் பிரமனைச் சாரதியாகவும், மகாமேருவைவில்லாகவும், ஆதிசேஷனைநாணாகவும், விஷ்ணுவை அம்பாகவும் அமைத்துக்கொண்டுபோர்க்குச்சென்று அவ்வசுரர்களைச் சிரித்து அப்பட்டணங்களுடனே எரித்திட்டனன். பிரமனதுகுமாரனை தக்ஷமுனிவன் தனது மகளாய்த்தோன்றிய சதியென்று பெயர்கொண்ட உமாதேவியைச் சிவபிரானுக்கு மணஞ்செய்துகொடுத்தபின்பு அச்சிவபிரானோடுமாறுபட்டு அம்மகளையும் மருமகனையும் வரவழையாமல் சிவபிரானுக்கு அவிர்

ப்பாசமும் கொடாமல் அவமதித்துப் பெரியதொரு யாகஞ்செய்கையில், உமாதேவி தான்மாத்திரம் வேள்விக்குச்சென்று அங்கு அம்முனிவன் தன்னை அலட்சியஞ்செய்து தன்கணவனையும் பழித்ததனால் அக்கினிப் பிரவேசஞ்செய்து தக்ஷபுத்திரியான உருவத்தை யொழித்துப் பர்வதராசனை இமவானிலே மகளாய்த்தோன்றிநிற்க, அதனையறிந்து கோபங்கொண்டசிவபிரான் வீரபத்திரக்கடவுளையுண்டாக்கித் தக்ஷனைத் தண்டிக்கும்படியனுப்ப அக்கடவுள்சென்று அந்தயாகத்தைச் சின்னபின்னப்படுத்தி அம்முனிவனையும் தலைதுணித்து மீண்டனன் என்பதாம்.

முன் ஒருகாலத்தில் கைலாசகிரியில் சிவபிரான் சநகர்முதலியநால்வர்க்கு யோகநிலையை உணர்த்துதற்பொருட்டுத் தான் யோகஞ்செய்துகொண்டிருக்கையில் பிரமனேவலால் மலரம்புகளையெய்து தனது தவத்தைகெடுக்கத்தொடங்கிய மன்மதனைச்சினந்து நெற்றிக்கண்ணை விழித்து அதன்நெருப்புக்கு இரையாய் உடம்புஎரிந்து சாம்பலாய்ப்போம்படிசெய்தனன். அப்பொழுது மன்மதன்மனைவியான ரதிதேவி தன்கணவன்தகிக்கப்பட்டதனால் சிவபிரானைச் சரணமடைந்துபிரார்த்திக்க, அவன் அவளுக்குமாத்திரம் ரூபமுடையவனாகவும், மற்றையோர்க்கு ரூபமில்லாதவனாகவும் இருக்கும்படி அருள்செய்தனன்.

நட்புநிலை.

மாமதியின் முயலான ததுதேய் வுழித்தேய்ந்து
வளருமப் போது வளரும்

வாவிதனி லாம்பல்கொட் டிகளதனி னீர்வற்றின்
வற்றிடும் பெருகி லுயரும்
பூமருவு புதல்வீடு கோடையிற் றீந்திடும்
பொங்குகா லந் தழைக்கும்
புண்டரிக மிரவிபோ மளவிற் குவிந்திடும்
போதுதய மாகின் மலரும்
தேமுட விளக்கிலுயி ரூடவு மிளக்குமது
தேறிலுயி ருஞ்சிறக் கும்
சேர்ந்தோர்க் கிடுக்கணது வந்தாலு நல்லோர்
சினேகமப் படி யாகுமே
வாமன சொரூபமத யானைமுக னுக்கிளைய
வாலகுரு பர வேலவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (சஅ)

(இ-ள்.) மா-பெரிய, மதியின்-சந்திரனிடத்துள்ள, முயலானது-முயல்வடிவமானது, அதுதேய்வுழிதேய்ந்து-அச்சந்திரனதுவடிவம் குறையும்போது தானுங்குறைந்து, வளரும் அப்போது வளரும்- அவ்வடிவம் வளரும்போது தானும்வளரும், வாவிதனில்-குளத்திலுள்ள, ஆம்பல்கொட்டிகள்-ஆம்பற்கொடிகளும் கொட்டியென்னும் பூண்டுகளும், அதனில்நீர்வற்றின்-அக்குளத்திலுள்ளநீர்வறண்டால், வற்றிடும்-தாமுமுலரும், பெருகில்(அக்குளத்தில்நீர்) மிகுந்தால், உயரும்-தாமும்செழித்துவளரும், பூமருவுபுத

ல்பூடு-நிலத்திற்பொருந்திய புற்களும் பூண்டுகளும், கோடையில்தீந்திடும்-கடுவெயிற்காலத்தில் (அந்நிலம் உலரும்போதுதாம்) கருகிப்போம், பொங்குகாலம் (அந்நிலம் மழைவளத்தாற்) செழிக்கும்போது, தழைக்கும்-தாம்செழித்துவளரும், புண்டரீகம்-தாமரை, இரவிபோம்அளவில்-சூரியன் அஸ்தமிக்கும்பொழுது, குவிந்திடும்-தான் குவியும், உதயம்ஆகில் - (பின்பு அச்சூரியன்) உதயமாகும்போது-அப்போது, மலரும்-தான்மலரும், தேகம்-உடல், இளைக்கில் (தனக்கு) இடமான உடல்இளைத்தால்,உயிரும் கூட இளைக்கும்-உயிருடம்கூடவேமெலியும், அதுதேறில்-அவ்வுடம்பு புஷ்டியடைந்தால், உயிரும் சிறக்கும்-உயிரும்வலிமைபெறும், சேர்ந்தார்க்கு இடுக்கணது வந்தால்-தம்மால் அடுக்கப்பட்டவர்களுக்குத் துன்பம் நேர்ந்தால், நல்லோர்சிநேகமும் அப்படியாகுமே-நற்குணநற்செய்கையுடையவர்களது சிநேகமும் அவ்வாறே யாகும் (அவர்கள் இன்பமடையத் தாமும் இன்பமடைந்து அவர்கள் துன்பமடையத் தாமும் துன்பமடைவர் என்பதாம்)வாமனசொரூபம்-குட்டையானவடிவத்தையுடைய, மதயானைமுகனுக்கு-மதம்பிடித்த யானையின்முகம்போன்ற முகமுள்ள விநாயகனுக்கு, இளைய-தம்பியே, வால-இளமைப்பருவமுடையவனே, குருபர-சிறந்தகுருவே, வேலவா-வேலாயுதத்தையுடையவனே, மயிலேறி விளையாடு குகனேபுல்வயனீடு மலைமேவுகுமரேசனே. எ-று.

சந்திரனிடத்துக் காணப்படுகிற களங்கத்தை முயலென்றல்மரபு. ஆம்பல்-ஒருநீர்ப்பூங்கொடி கொட்டி ஒருகிழ

ங்கு நீர்ப்பூண்டு, புதல்-புதருமாம், கோடை-முதுவேனி ற்பருவம், ஆனி-ஆடி மாதங்கள், உயிர் இளைத்தல்என்றது உடம்போடுகூடிய உயிருக்கு உரியகுணம் செயல்கள் குறைவுபடுதலையே கைகால்கள் குறுகிய பூதவடிவம் விநாய கருக்கு உள்ளதனால் "வாமனசொரூபம்" என்ற அடை மொழி கொடுக்கப்பட்டது.

கைப்பலனுமவை.

பருவத்தி லேபெற்ற சேயும் புரட்டாசி
　　பாதிசம் பாநடு கையும்
　பலமினிய வாடிதனி லானைவால் போலவே
　　பயிர்கொண்டு வரு கரும்பும்
கருணையொடு மிக்கநா ணயமுளோர் கையினிற்
　　கடனிட்டு வைத்த முதலுங்
　காலமது நேரிற் றனக்குறுதி யாகமுன்
　　கற்றுணர்ந் திடு கல்வியும்
விருதரச ரைக்கண்டு பழகிய சினேகமும்
　　விவேகிகட் குபகார மாம்
　வீணல்ல விவையெலாங் கைப்பலன தாகவபி
　　விர்த்தியாய் வருமென் பர்காண்
மருவுலா வியநீப மாலையுந் தண்டரள
　　மாலையும் புனைமார் பனே
　மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
　　மலைமேவு குமரேசனே.　　　　(சக)

(இ-ள்.) பருவத்திலேபெற்ற சேயும்-பருவத்திலேபெற்றபிள்ளையும், புரட்டாசிபாதி-புரட்டாசிமாதம் பாதியில், சம்பாநடுகையும்-சம்பாநடவும், பலம்இனிய ஆடிதனில்-பலந்தருதலிற்சிறந்தஆடிமாசத்தில், ஆனைவால்போலவே பயிர்கொண்டு வருகரும்பும்-விளைந்துவருகின்ற கரும்பும், கருணையொடு மிக்கநாணயமுள்ளோர்-கிருபையோடு மிகுந்தநாணயமும் உள்ளவர்களது, கையினில்-கையிலே, கடனிட்டுவைத்தமுதலும்-கடனாகக்கொடுத்துவைத்தபொருளும், காலமதுநேரில்-காலம் வாய்த்தால், தனக்கு உறுதியாக-தனக்கு உறுதிப்பொருளாக, முன்-முன்னமே, கற்றுணர்ந்திடு கல்வியும்-கற்றறிந்த வித்தையும், விருது அரசரைக்கண்டு-விருதுகளையுடைய வேந்தர்களைக்கண்டு, பழகியசிநேகமும்-பழகியநட்பும், விவேகிகட்கு-அறிவுடையார்க்கு, உபகாரம்ஆம் - உபகாரமாகும், வீண் அல்ல-வீணாய்ப்போவனஅல்ல, இவையெலாம்-இவையாவும், கைப்பலனதாக-கைப்பலனாக, அபிவிர்த்தியாய் வரும்-வளர்ந்துகொண்டேவரும், என்பர் - என்று சொல்லுவர், (மேலோர்) மருஉலாவிய-மணம்வீசுகின்ற, நீபமாலையும்-கடப்பமலர்மாலையையும், தண் தரளமாலையும்-குளிர்ந்தமுத்துமாலையையும், புனை-அணிந்த, மார்பனே-மார்பையுடையவனே, மயிலேறிவிளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே. எ-று.

பருவம்-இளமைப்பருவம். சம்பா-சம்பாநெல். நடுகை நடுதல். ஆனைவால்போல-யானைவால்போலப்பருத்து,பயி

ர்கொண்டுவருதல் - விளைந்துவருதல். விருது-கொடி. குடை முதலியன, மரு-வாசனை, நீபம்-கடப்பமலர், தாளம் முத்து.

சமயத்துக் குதவாதவை.

கல்லாது புத்தகந் தனிலெழுதி வீட்டினிற்
கட்டிவைத் திடுவித் தையுங்
காலங்க ளுக்குதவ வேண்டுமென் றன்னியன்
கையிற் கொடுத்த பொருளும்
இல்லாளை நீங்கியே பிறர்பாரி சதமென்
றிருக்கின்ற குடிவாழ்க் கையு
மேறுமா றுகவே தேசாந் தரம்போ
யிருக்கின்ற பிள்ளை வாழ்வும்
சொல்லான தொன்றுமவர் மனமான தொன்றுமாச்
சொல்லும்வஞ் சகர் நேசமுஞ்
சுகியமா யுண்டென் றிருப்பதெல் லாந்தருண
துரிதத்தி லுதவா துகாண்
வல்லான கொங்கைமட மாதுதெய் வானைகுற
வள்ளிபங் காள நேயா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (ரு௦)

(இ-ள்.) கல்லாது-கற்காமல், புத்தகந்தனில்-புத்தகத்தில், எழுதி-எழுதி, வீட்டினில் கட்டிவைத்திடு - வீட்டிற் கட்டிவைத்திருக்கின்ற, வித்தையும்-கல்வியும், காலங்களுக்கு-ஆபத்காலங்களுக்கு, உதவவேண்டுமென்று-உதவியா

கவேண்டுமென்று, அந்நியன்கையில்கொடுத்த பொருளு ம்-பிறன்கையில்கொடுத்துவைத்தபொருளும்,இல்லாளை நீ ங்கி-தன் மனைவியைவிட்டு, பிறன்பாரி-பிறன் மனைவி, சத மென்றுஇருக்கின்ற-துணையென்றுஇருக்கின்ற, குடிவாழ் க்கையும்-குடும்பவாழ்வும், ஏறுமாறுகவே-தாறுமாறுக, தேசாந்தரம்போய் இருக்கின்ற-தேசாந்தரமாகப்போயி ருக்கின்ற, பிள்ளைவாழ்வும்-பிள்ளையின் உயிர்வாழ்க்கையு ம், சொல்லானது ஒன்றும்-சொல்லொன்றும், அவர் மன மானது ஒன்றுமா - அவர்களுடைய மனம் ஒன்றுமாக, சொல்லும்-பேசுகின்ற, வஞ்சகர்நேசமும்-வஞ்சகரதுநட் பும், சுகியமாய்-சுகத்துக்கு உதவியாக,உண்டுஎன்று-இரு க்கின்றதென்று, இருப்பதெல்லாம்-இருக்கிறதெல்லாம், தருணதுரிதத்தில்-அவசரசமயத்தில், உதவாது-உதவியா காது, வல்ஆனகொங்கை-சொக்கட்டான்கருவியையொத் த தனத்தையுடைய, மடமாது-இளம்பெண்ணாகிய, தெய் வானை-தெய்வானையையும், குறவள்ளி - குறவள்ளிநாயகி யையும், பங்காளா - இருபுறத்திலுமுடையவனே, நேயா- அவர்களுக்குப் பிரியனே, மயிலேறிவிளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

பாரி-மனைவி. சதம்-உறுதி. தேசாந்த்ரம்-வேறு தே சம். வஞ்சகர்-கபடிகள். சுகியம்-சுகமனுபவித்தற்குரியன துரிதம்-அவசரம். வல்-சூதாடுகருவி.

திரும்பமாட்டாதவை.

ஆடரவின்வாயினி லகப்பட்ட தவளையு
மாலைவா யிற்க ரும்பு

மரிதான கப்பலிற் பாய்மரக் காற்றினி
லகப்பட்டு மெலிகாக் கையும்
நாடறிய வேதாரை வார்த்துக் கொடுத்தது
நமன்கைக்கு ளான வுயிரும்
நலமாக வேயணை கடந்திட்ட வெள்ளமு
நாய்வேட்டை பட்ட முசலும்
தேடியுண் பார்கைக்கு ளானபல வுடைமையுந்
தீவாதை யான மனையுந்
திரள்கொடுங் கோலரசர் கைக்கேறு பொருளுந்
திரும்பிவா ராவென் பர்காண்
மாடமிசை யன்னக் கொடித்திரள்கொள் சோணாடு
வாழவந் திடுமு தல்வனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (ருக)

(இ-ள்.) ஆடு அரவின்வாயினில்-படமெடுத்து ஆடுகின்ற பாம்பின்வாயிலே, அகப்பட்டதவளையும்-சிக்கிக்கொண்டதவளையும், ஆலைவாயில் கரும்பும்-ஆலையிலகப்பட்ட கரும்பும், அரிதானகப்பலில்-முரிதாகியகப்பலிலே, பாய்மரக் காற்றினில்-பாய்மரத்தின்காற்றில், அகப்பட்டு மெலிகாக் கையும்-அகப்பட்டு மெலிகின்றகாகமும், நாடு அறிய-உலகமறியும்படி, தாரைவார்த்துகொடுத்ததும்-ஒருவர்க்குத் தாரைவார்த்துக்கொடுத்தபொருளும், நமன்கைக்குள் ஆன உயிரும் - யமன்கையிற்சிக்கின பிராணனும், நலமாக-நன்றாக-அணைகடந்திட்ட வெள்ளமும்-அணைகடந்த நீர்ப்

பெருக்கும், நாய்வேட்டைபட்டமுசலும் - நாய்வேட்டையில் அகப்பட்ட முசலும், தேடி உண்பார்கைக்குள் ஆன-தேடியுண்பவரது கையிலகப்பட்ட, பலவுடைமையும்-பலவுடைமைகளும், தீவாதையான மனையும்-நெருப்புக்கிரையானவீடும், திரள்கொடுங்கோல் அரசர்-திரளாகியகொடுங்கோலையுடைய அரசரது, கைக்குஏறுபொருள்-கையில் ஏறின திரவியமும், திரும்பிவாரா என்பர்-மீண்டுவரமாட்டா என்று சொல்லுவர் பெரியோர், மாடமிசை-மாடங்களின்மேல், அன்னக்கொடித்திரள்கொள்-அன்னக்கொடியின் கூட்டத்தைக்கொண்ட, சோணாடுவாழ-சோழநாடு வாழும்படி, வந்திடும்-அவதரித்த, முதல்வனே-முதலோனே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயலீடு மலைமேவு குமரேசனே, எ-று.

அன்னக்கொடி-யாசகர்க்கு அன்னம்போடுமிடமென்று அடையாளமாகக்கட்டின கொடி.

இதினுமிது நன்றென்பவை.

கடுகடுத் தாயிரஞ் செய்குவதி லின்சொலால்
  களிகொண் டழைத்த னன்று
கனவேள்வி யாயிரஞ் செய்வதிற் பொய்யுரை
  கருத்தொடு சொலாமை நன்று
வெடுவெடுக் கின்றதோ ரவிவேகி யுறவினில்
  விவேகியொடு பகைமை நன்று
வெகுமதிக ளாயிரஞ் செய்வதி னரைக்காசு
  வேளைகண் டுதவ னன்று

சடுதியிற் பக்குவஞ் சொல்லுங் கொடைக்கிங்கு
சற்றுமிலை யென்ன னன்று
சம்பத் துடன்பிணியின் மெலிகுவதி னேயற்ற
தாரித்தி ரியநன் றுகாண்
மடுவினிற் கரியோல மென்னவந் தருள்செய்த
மான்மருக னை முதல்வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (௬௨)

(இ-ள்.) கடுகடுத்து-கடுகடுத்துக்கொண்டே, ஆயிரஞ்செய்குவதில்-ஆயிரம் நன்மைகளைச் செய்வதிலும், களிகொண்டு-மனமகிழ்ந்து, இன்சொலால் அழைத்தல் - இனிய சொல்லைக்கொண்டழைத்தல், நன்கு-நன்மையாகும், கனம்-மேலான, ஆயிரம் வேள்விசெய்வதின்-ஆயிரம் யாகங்களைச் செய்வதைப்பார்க்கிலும், கருத்தொடு-மனத்தொடு, பொய்யுரைசொல்லாமை-பொய்மொழிபேசாமை,நன்று நன்மையாகும், வெடுவெடுக்கின்ற - வெடுவெடுக்கிற, ஓர் அவிவேகி உறவினின் - ஒரு அவிவேகியின் உறவினும், விவேகியொடு-விவேகியுடனே, பகைமை-பகைகொண்டிருத்தல், நன்று-நன்மையாகும், ஆயிரம்வெகுமதிகள்செய்வதின்-ஆயிரம் வெகுமாநங்கள்செய்வதிலும், வேளைகண்டு-சமயம்பார்த்து, அரைக்காசு உதவல்நன்று-அரைக்காசு உதவுதல் நன்மையாகும், சடுதியிக்-விரைவாக, பக்குவம் சொல்லும் கொடைக்கு - கெடுவுசொல்லுகிற கொடையினும், இங்கு-இவ்விடத்தில், சற்றும் இல்லையென்னல்-சிறி

துமில்லையென்று சொல்லுதல், நன்று-நன்மையாகும்,சம்பத்துடன்-செல்வத்தோடு, பிணியின் மெலிகுவதின்-நோயினால் மெலிகுவதைப்பார்க்கிலும், நோய்அற்ற-பிணியில்லாத, தாரித்திரியம்-வறுமை, நன்று-நன்மையாகும்,மடுவினில்-மடுவிலே. கரி-யானையானது, ஓலம்என்ன-ஓலமென்றலற, வந்து (அதற்குமுன்னே) எழுந்தருளி, அருள்செய்த-அருள் புரிந்த, மால்மருகன் ஆன-திருமாலுக்கு மருமகனாகிய, முதல்வா-முதல்வனே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

கடுகடுத்தல்-வெடுவெடுத்தல். பக்குவம்-செடுவு. கரி-கஜேந்திரன். ஓலமெனல்-முறையிடல்.

பலகூடினு மொன்றற்கீடாகாதவை.

தாரகைகளொருகோடி வானத் திருக்கினுஞ்
சந்திரற் கீடாகுமோ
தாருவிற் கொடிதொனிகள் பலகூடி னுமொரு
தம்பட்ட வோசை யாமோ
கோரமிகு பன்றியின் குட்டிபல கூடினொரு
குஞ்சரக் கன்றாகுமோ
கொட்டிமலர் வாவியிற் பலகூடி னுமொரு
கோகனக மலரா குமோ
பாரமிகு மாமலைகள் பலகூடி னுமொரு
பைம்பொன் மக மேருவாமோ
பலனிலாப் பிள்ளைக ளனேகம் பிறந்தும்விற்
பனனொருவ னுக்கு நிகரோ

வாரணக் கொடியொரு கரத்திற் பிடித்தொன்றில்
வடிவே லணிந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (நிஈ)

(இ-ள்.) ஒருகோடி தாரகைகள்-ஒருகோடி விண்மீன்கள், வானத்து இருக்கினும்-ஆகாயத்திலிருந்தாலும், சந்திரற்கு-ஒருசந்திரனுக்கு, ஈடு ஆகுமோ - சமானமாகுமோ, தாருவில்கொடிதொனிகள்-கோலிற்றொடுத்தகொடித்திரளின்ஓசைகள், பலகூடினும்-பலசேர்ந்தாலும், ஒருதம்பட்ட ஓசை ஆமோ-ஒருதம்பட்டவொலியாகுமோ, கோரம்மிகு பன்றியின்குட்டி பலகூடின்-கோரரூபம்மிகுந்த பன்றிகுட்டிகள் பலகூடினும், ஒரு குஞ்சரக்கன்று ஆகுமோ-ஒரு யானைக்கன்றாகுமோ, வாவியில் - தடாகத்தில், கொட்டிமலர் பலகூடினும்-கொட்டிமலர்கள் பலசேர்ந்தாலும், ஒருகோகனகமலர் ஆகுமோ-ஒரு தாமரைமலராகுமோ, பாரம்மிகு மாமலைகள் பலகூடினும்-பளுவுமிகுந்த பெரியமலைகள் பலசேர்ந்தாலும், ஒருபைம்பொன்மகமேரு ஆமோ-ஒருபசும்பொன்னாலியன்ற மகாமேருமலையாகுமோ, பயன்இல்லா பிள்ளைகள்-பிரயோசனமில்லாத பிள்ளைகள், அநேகம்பிறந்தும்-அநேகம்பிறந்தாலும், விற்பனன்-விற்பன்னனாகிய, ஒருவனுக்கு நிகரோ-ஒருபிள்ளைக்கு நிகராவரோ, ஒருகரத்தில்-ஒருகையில், வாரணக்கொடிபிடித்து-கோழிக்கொடியைப்பிடித்து, ஒன்றில்-மற்றொருகையில், வடிவேல் அணிந்த முருகா-வடிவேலைத்தரித்த

முருகனே, மயிலேறிவிளையாடு குகனேபுல் வயனீடு மலை மேவு குமரேசனே. எ-று.

தம்பட்டம்-பேரி. கோகனகம்-தாமரை. விற்பந்நன் கல்வியறிவுள்ளவன். வாரணம்-கோழி. தாரகைகள் ஒரு கோடி என்றதனால் சந்திரன் என்பதற்கு ஒரு சந்திரன் என்றுரைக்கப்பட்டது.

அருமையறிதல்.

மணமாலை யருமையைப் புனைபவர்க ளேயறிவர்
மட்டிக் குரங் கறியுமோ
மக்களுடை யருமையைப் பெற்றவர்க ளேயறிவர்
மலடிதா னறிவ துண்டோ
கணவனுடை யருமையைக் கற்பான மாதறிவள்
கணிகையா னவ ளறிவளோ
கருதுமொரு சந்தியின் பாண்டமென் பதைவருங்
களவான நாய றியுமோ
குணமான வெளியருமை தனைவளர்த் தவரறிவர்
கொடியபூ னையும றியுமோ
குலவுபெரி யோரருமை நல்லோர்க ளேயறிவர்
கொடுமூடர் தாமறி வரோ
மணவாள னீயென்று குறவள்ளி பின்றொடர
வனமூடு தழுவு மழகா
மயிலேறி விளையாடு குகனே புல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (நச)

(இ-ள்.) மணம்மாலை-வாசனையுள்ள பூமாலையின், அருமையை-அருமையை, புனைபவர்களே அறிவர்-தரிப்பவரே

யறிவார், மட்டிகுரங்கு அறியுமோ-மூரட்டுக்குரங்கு அறியுமோ, மக்களுடை அருமையை-பிள்ளைகளின் அருமையை, பெற்றவர்களே அறிவர்-பெற்றவர்களே யறிவார்கள், மலடிதான் அறிவது உண்டோ - மலடியானவள் அறிவாளோ, கணவனுடை அருமையை-கணவனது அருமையை, கற்பான மாதுஅறிவள்-கற்புள்ளபெண்அறிவள், கணிகையானவள் அறிவளோ - வேசையானவள் அறிவாளோ. கருதும்-நினைக்கத்தகுந்த, ஒருசந்தியின் பாண்டம் என்பதை-ஒருசந்திப்பாண்டமென்பதை, வரும்-வருகிற, களவான்நாய் அறியுமோ-திருட்டுநாயறியுமோ, குணமான கிளியருமைதனை-குணமுள்ள கிளியினதருமையை, வளர்த்தவர்அறிவர்-வளர்த்தவர்கள்அறிவார்கள், கொடிய பூனையும் அறியுமோ-கொடிதாகிய பூனையும் அறிவதுண்டோ, குலவு-விளங்குகிற, பெரியோர்அருமை-பெரியோரது அருமையை, நல்லோர்களே அறிவர்-நல்லோர்களே யறிவார்கள், கொடுமூடர்தாம் அறிவரோ-கொடியமூடர்கள் அறிவார்களோ, மணவாளன் நீயென்று - கணவன் நீயேயென்று, குறவள்ளி பின்தொடர-குறவள்ளியானவள் பின்தொடர்தலும், (அவளை) வனமூடு-வனத்தில், தழுவும்-தழுவின, அழகா-அழகனே, மயிலேறிவிளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

புனைபவர்கள்-தரிப்பவர்களாகிய நாகரிக மனிதர்கள்-சந்திப்பாண்டம் விரதத்துக்குரிய மட்கலங்கள். நல்லோர்கள்-அறிவுடையோர். கற்பு-பதிவிரதாதருமம்.

தீச்சார்பாற் பயன்படாதவை.

மடுவினிற் கஞ்சமல ருண்டொருவ ரணுகாமல்
வன்முதலை யங்கி ருக்கும்
மலையினிற் றேனுண்டு சென்றொருவர் கிட்டாமன்
மருவியதில் வண்டி ருக்கும்
நெடுமைதிகழ் தாழைமல ருண்டொருவ ரணுகாம
னீங்கார்த முள்ளி ருக்கும்
நீடுபல சந்தன விருக்ஷமுண் டணுகாது
நீளரவு சூழ்ந்தி ருக்கும்
குடிமல்கி வாழ்கின்ற வீட்டினிற் செல்லாது
குரைநாய்க ளங்கி ருக்கும்
கொடுக்குந் தியாகியுண் டிடையூறு பேசுங்
கொடும்பாவி யுண்டு கண்டாய்
வடுவையுங் கடுவையும் பொருவுமிரு கண்ணிகுற
வள்ளிக் குகந்த கணவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (௫௫)

(இ-ள்.) மடுவினில்-மடுவிலே, கஞ்சமலர் உண்டு - தாமரைமலருண்டு, ஒருவர் அணுகாமல் - (அதனிடத்து) ஒருவர்சேராமல், வன்முதலை-வலியமுதலையானது, அங்குஇருக்கும்-அவ்விடத்திலிருக்கும், மலையினில்தேன்உண்டு-மலையின்மீது தேனிருக்கும், சென்று ஒருவர்கிட்டாமல் (அதனிடத்து)சென்று ஒருவர்நெருங்காமல்; மருவி - பொரு

ந்தி, அதில் வண்டு இருக்கும்-அதில் வண்டிருக்கும், நெடு மைதிகழ் தாமைமலர் உண்டு-நீட்சிபொருந்திய தாமரைமல ருண்டு, ஒருவர் அணுகாமல் (அதனிடத்து ஒருவர்கிட்டா மல், நீங்காத முள் இருக்கும்-இடையறாத முட்களிருக்கும் நீடு-நீண்ட, பலசந்தந விருக்ஷமுண்டு - பலசந்தநமரங்களு ண்டு, அணுகாது - (அதனிடத்து) ஒருவர் சேராமல், நீள் அரவுசூழ்ந்திருக்கும் - நீண்ட பாம்புகள் சூழ்ந்திருக்கும், குடிமல்கிவாழ்கின்ற வீட்டினில்-குடிகள்நிறைந்து வாழ்கி ன்றவீட்டில், செல்லாது (ஒருவர்) போகவொட்டாமல், குரைநாய்கள் அங்கு இருக்கும்-குலைக்கின்றநாய்கள் அவ் விடத்திலிருக்கும், கொடுக்குந்தியாகிஉண்டு-கொடுக்கின் ற தியாகியுண்டு (அவனிடத்தில்) இடையூறுபேசும்-தடை சொல்லுகிற, கொடும்பாவிஉண்டு-கொடும்பாவியும் உண் டு, வடுவையும் - மாவடுவையும், கடுவையும்-நஞ்சையும், பொருவும்-நிகர்க்கின்ற, இருகண்ணி-இரண்டு கண்களையு டையவளாகிய, குறவள்ளிக்கு-குறவள்ளிநாயகிக்கு, உகந் தகணவா-விருப்பமுள்ள கணவனே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

தியாகி-கொடையாளி. இடையூறு தடை வடுவென் பது வடுவின் பிளவை கஞ்சமலர்முதலானஇடங்களில் மு தலைமுதலானவைகளிருந்து அவற்றின் பயனைப் பிற ரநு பவிக்கவொட்டாமற் செய்வதுபோல தியாகியினிடத்தில் ஒருகொடும்பாவி அடுத்திருந்து அவனது பயனைப் பிறர் அநுபவிக்கவொட்டாமற் செய்வனென்பது இச்செய்யுட் கருத்து.

கணிகையரியல்பு.

தேவதா சிகள்வீடு சந்தைப் பெரும்பேட்டை
சேர்ந்திடு படுக்கை வீடு
தெருவாசல் கட்டில்பொது வம்பல முடுத்ததுகில்
செய்யசூ தாடு சாலை
மேவலா கியகொங்கை கையாடு திரள்பந்து
விழிமனங் கவர்தூண் டிலாம்
மிக்கமொழி நீர்மே லெழுத்ததிக மோகமொரு
மின்னலிரு தொடை சர்ப்பமாம்
ஆவலா கியவல்கு லோதண்டம் வாங்குமிட
மதிகபட மாபா னதுகல்
லமிர்தவா யிதழ்சித்ர சாலையெச் சிற்குழி
யவர்க்காசை வைக்க லாமோ
மாவடிவு கொண்டே யொளித்தவொரு சூரனை
வதைத்தவடி வேலா யுதா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (ருகூ)

(இ-ள்.) தேவதாசிகள்வீடு - வேசைகளுடையவீடு, சந்தை-சந்தைகூடுகிற, பெரும்பேட்டை - பெரியபேட்டையாகும், சேர்ந்திடுபடுக்கைவீடு - பொருந்திய படுக்கைவீடானது, தெருவாசல்-தெருவாசலாகும், கட்டில்-கட்டிலானது, பொதுஅம்பலம்-பொதுவாகிய அம்பலமாகும், உடுத்ததுகில்-உடுத்த ஆடையானது, செய்யசூதாடுசாலை-செவ்விய சூதாடுசாலையாகும், மேவலாகியகொங்கை-தழு

வுதற்குரிய தனங்கள், கையாடுதிரள்பந்து-கையாடுகிறதி ரண்டபந்தமாகும், விழி-கண்கள், மனம்கவர்-மனமாகிய மீனைப்பிடிக்கிற, தூண்டில்ஆம்-தூண்டிலாகும்,மிக்கமொழி (அவரது) மிகுந்தசொற்கள், நீர்மேல் எழுத்து-நீர்மேலெழுத்தாகும், அதிகமோகம்-அவரிடத்திலொருவன்மீதுண்டாகிற மிகுந்தமோகமானது, ஒருமின்னல்-ஒருமின்னல்போல உடனேயழிவதாகும்,இருதொடை-இரண்டுதொடைகள், சர்ப்பம்ஆம்-பாம்புகளாகும், ஆவலாகியஅல்குலோ - (ஆடவர்க்கு) விருப்பத்தையுண்டாக்குகிற அல்குலென்றுலோ, தண்டம்வாங்கும்இடம்-தண்டம்வாங்குகிற இடமாகும், அதிகபடமாம் - அதிககபடமாகிய, மனது-மனமானது, கல்-கல்லாகும், அமிர்தவாய் இதழ்-அமிர்தவாயுடன்கூடிய இதழானது, சித்ரசாலை எச்சிற்குழி-சித்திரசாலையும் எச்சிற்குழியுமாகும், (ஆதலால் இத்தன்மையான இழிவுள்ள) அவர்க்கு-அந்த வேசையர்மீது, ஆசைவைக்கலாகுமோ, மாவடிவுகொண்டுஒளித்த-மாமரவுருவங்கொண்டொளித்திருந்த, ஒருசூரனை - ஒப்பற்ற சூரபன்மனை, வதைத்த-கொன்ற, வடிவேலாயுதா-வடித்த வேற்படையையுடையவனே, மயிலேறி விளையாடு குகனேபுல்வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

தேவதாசிகள் வீடுமுதலியவை சந்தை பெரும்பேட்டை முதலியவைபோல இழிந்தன வாதலால் அறிவுடையார் அவர்கள்மேல் விருப்பம்வைக்கலாகாதுஎன்பது இச்செய்யுட் கருத்து.

கலிகாலக்கொடுமை.

தாய்புத்தி சொன்னன் மறுத்திடுங் காலமுயர்
தந்தையைச் சீறு காலஞ்
சற்குருவை நிந்தைசெய் காலமெய்க் கடவுளைச்
சற்றுமெண் ணாத காலம்
பேய்தெய்வ மென்றுப சரித்திடுங் காலம்
புரட்டருக் கேற்ற காலம்
பெண்டாட்டி வையினுங் கேட்கின்ற காலநற்
பெரியர்சொல் கொளாத காலம்
தேய்வுடன் பெரியவன் சிறுமையுறு காலமிகு
சிறியவன் பெருகு காலஞ்
செருவில்விட் டோடினோர் வரிசைபெரு காலம்வசை
செப்புவோர்க் குதவு காலம்
வாய்மதம் பேசிவிடு மனியாய காரர்க்கு
வாய்த்தகலி கால மையா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (௯எ)

(இ-ள்.) தாய்புத்திசொன்னல் - தாயானவள் புத்திசொன்னல், மறுத்திடும்காலம்-மறுக்கின்றகாலம், உயர்-உயர்ந்த, தந்தையை - தகப்பனை, சீறுகாலம் - சீறுகிறகாலம், சற்குருவை நிந்தைசெய்காலம்-சற்குருவை நிந்திக்கிறகாலம், மெய்கடவுளை-உண்மையாகியகடவுளை, சற்றும்எண்ணாதகாலம்-சிறிதும்எண்ணாதகாலம், பேய்-பேயை, தெய்

வம்என்று உபசரித்திடும்காலம்-தெய்வமென் றுபசரிக்கிறகாலம், புரட்டருக்கு ஏற்றகாலம்-புரட்டருக்குத்தகுந்தகாலம், பெண்டாட்டி வைவதினும்-மனைவியானவள் வைதாலும், கேட்கின்றகாலம் - கேட்கிறகாலம், நல்பெரியவர்சொல் கொளாதகாலம்-நல்ல பெரியோருடையசொல்லையேற்றுக்கொள்ளாதகாலம்,தேய்வுடன்-மெலிவோடு, பெரியவன்-பெரியவனானவன்,சிறுமையுறுகாலம்-தாழ்வடையுங்காலம், மிகுசிறியவன்-மிகவுஞ் சிறியவன், பெருகுகாலம்-பெருகுகிறகாலம், செருவில்-யுத்தகளத்தில், விட்டு-தமது (அரசனைவிட்டு) ஓடினோர்-ஓடிப்போனவர்கள், வரிசைபெறுகாலம்-வரிசைபெறுதற்குரியகாலம்,வசைசெப்புவோர்க்கு உதவுகாலம்-நிந்தைசொல்லுவோர்க்கு உதவுகிறகாலம், வாய்மதப்பேசிவிடும்-வாய்மதம்பேசுகிற, அநியாயகாரர்க்கு-அநியாயகாரருக்கு, வாய்த்தகலிகாலம்-பொருத்தமான கலிகாலம், ஐயா-ஐயனே, மயிலேறிவிளையாடு குகனேபுல்வயனீடு மலைமேவு குமரேசனே. எ-று.

தாய் புத்திசொன்னால் மறுத்தல்முதலிய குணங்கள் இந்தக்கலிகாலத்துக் கேற்றனவாமென்பது இச்செய்யுட்கருத்து.

அவரவர்க்குரியவை.

கல்வியொடு கனமுறச் சபையின்மேல் வட்டமாக்
　　காணவைப் போன் பிதாவாங்
கற்றுணர்ந் தேதனது புகழாற் பிதாவைப்ர
　　காசஞ்செய் வோன் புத்திரன்

செல்வமிகு கணவனே தெய்வமென் றநுதினஞ்
 சிந்தைசெய் பவண்மனைவியாஞ்
 சிநேகிதன் போலவே யன்புவைத் துண்மைமொழி
 செப்புமவ னேசோ தரன்
தொல்வள மிருந்தநூற் கரைதெரிந் துறுதிமொழி
 சொல்லுமவ னேகுர வனாஞ்
 சொன்னநெறி தவறாமல் வழிபாடு செய்துவரு
 துய்யனே யினிய சீஷன்
வல்விரக மிஞ்சுசுர குஞ்சரி யுடன்குறவர்
 வஞ்சியை மணந்த கணவா
 மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேசனே. (ருஅ)

(இ-ள்.) கல்வியொடு கனம்உற-கல்வியுடனேமேன்மையும்பொருந்தும்படி, சபையின்-சபையின்கண், மேல்வட்டமாக ஆணவைப்போன்-மேல்வட்டமாகத் தோன்றும்படி தன்பிள்ளையைவைப்பவன், பிதா ஆம்-தந்தையானவன் கற்று-கல்விகற்று, உணர்ந்து-அவற்றின்பொருள்களைநன்றாயறிந்து, தனதுபுகழால்- தன்புகழினால், பிதாவை-தந்தையை, பிரகாசம்செய்வோன்-பிரகாசப்படுத்துவோன் புத்திரன்-புதல்வனவன், செல்வமிகுகணவனே, தெய்வம் என்று-செல்வமிகுந்த கணவனே தெய்வமென்று, அநுதினம்-நாள்தோறும், சிந்தைசெய்பவள்-நினைப்பவள், மனைவியும்-மனைவியாவாள், சிநேகிதன் போலவே - நண்பன் போலவே, அன்புவைத்து-அன்பு வைத்து, உண்மைமொ

றிசெப்புமவனே - மெய்ச்சொல்லைச் சொல்லுகிறவனே, சோதரன்-சகோதரனுவான், தொல்வளம்மிகுந்த-பழமையாகிய வளமிகுந்த, நூல்களைதெரிந்து-நூல்வரம்பு தெரிந்து, உறுதிமொழிசொல்லுமவனே - உறுதிமொழிசொல்லுவோனே, குரவன்ஆம்-சற்குருவாவான், சொன்னமொழிதவறுமல்-சொன்னசொல்தவறுமல், வழிபாடுசெய்துவரு-வழிபாடுசெய்துவருகிற, தய்யனே-பரிசுத்தனே, இனியசிஷன்-இனிதானசிஷனுவான், வல்விரகம்மிஞ்சு-வலியவிரகமிஞ்சின, சுரகுஞ்சரியுடன்-தெய்வயானையுடனே, குறவர்வஞ்சியை-குறவர்பெண்ணையும், மணந்த கணவா-மணஞ்செய்துகொண்ட கணவனே, மயிலேறி விளையாடு குகனேபுல் மலைமேவு குமரேசனே. எ-று.

மேல்வட்டம்-மேலான அந்தஸ்து. பிரகாசஞ்செய்தல்-விளங்கச்செய்தல். சோதரன்-சகோதரன். (ஒரு தாய் வயிற்றில்பிறந்தவன். உறுதிமொழி-நன்மையைத்தருகிற சொல். வழிபாடுசெய்தல்-தொண்டுசெய்தல்.

சிறுமையிற் பெருமை.

சேற்றிற் பிறந்திடுங் கமலமலர் கடவுளது
திருமுடியின் மேலிருக்குந்
திகழ்சிப்பி யுடலிற் சனித்தமுத் தரசரது
தேகத்தின் மேலிருக்கும்
போற்றியிடு பூச்சியின் வாயினால் பட்டென்று
பூசைக்கு நேச மாகும்
புகலரிய வண்டெச்சி லானதேன் தேவர்கொள்
புனிதவபி டேக மாகும்

சாற்றிய புலாலொடு பிறந்தகோ ரோசனை
சவாதுபுழு கனைவர்க் குமாஞ்
சாதியி னத்திற் பிறக்கினுங் கற்றோர்கள்
சபையின்மேல் வட்ட மன்றோ
மாற்றிச் சுரத்தினை விபூதியா லுடல்குளிர
வைத்தமெய்ஞ் ஞான முதலே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (நு௬)

(இ-ள்.) சேற்றில்பிறந்திடும்-சேற்றிலுண்டாகுகிற, கமலமலர்-தாமரைமலர், கடவுளது-இறைவனது, திருமுடியின்மேல் இருக்கும்-திருமுடிமீதிருக்கும், திகழ்-விளங்குகிற, சிப்பிஉடலில் சனித்தமுத்து-இப்பியினுடம்பிலுண்டானமுத்து, அரசரது தேகத்தின்மேல் இருக்கும்-வேந்தருடைய சரீரத்தின்மேலிருக்கும், போற்றியிடு-காட்டுகிற, பூச்சியின் வாயிநூல் - பூச்சியின்வாய்நூல், பட்டென்று-பட்டென்று சொல்லப்பட்டு, பூசைக்குநேசம் ஆகும்-பூசைக்குவிரும்பப்படுவதாகும், புகல் அரிய வண்டு எச்சில்ஆன தேன்-சொல்லுதற்கரிய வண்டின்எச்சிலாகிய தேனானது, தேவர்கொள்-தேவர்கள் ஏற்றுக்கொள்ளுகிற, புனிதம்-பரிசுத்தமாகிய, அபிடேகம்ஆகும்-அபிஷேகத்திரவியமாகும், சாற்றிய-சொல்லப்பட்ட, புலாலொடு பிறந்த-மாமிசத்தோடுபிறந்த, கோரோசனைசவாதுபுழுகு-கோரோசனை சவாது புழுகு என்பவைகள், அனைவர்க்கும் ஆம்-எல்லார்க்கும் உபயோகமாகும், (ஆதலால்) சாதி சனத்தில்

பிறக்கினும்-ஈனசாதியிற்பிறந்தாலும், கற்றோர்கள்-கல்வி கற்றோர்கள், சபையின் மேல்வட்டம் அன்றோ-சபையின் மேல்வட்டமல்லவா, விபூதியால்-திருநீற்றில்,சுரத்தினைமா ற்றி-சுரத்தைநீக்கி, உடல்குளிரவைத்த-உடம்பு குளிரவை த்த, மெய்ஞ்ஞானமுதலே-மெய்ஞ்ஞானத்தையுடையமுத ல்வனே, மயிலேறி விளையாடு குகனேபுல்வயனீடு மலைமே வுகுமரேசனே, எ-று.

சிப்பி முத்துச்சிப்பி. புலால்-மாமிசம். விபூதியாலுட ல் குளிரவைத்தது. திருஞானசம்பந்தராயவதரித்தபோ து பாண்டியனை விபூதியினலர்சுரநீக்கி உடல் குளிரச்செ ய்தது.

செயத்தகாதவை.

தானொசரித்துவரு தெய்வமிது வென்றுபொய்ச்
சத்தியஞ் செயல்விடாது
தன்வீட்டி லேற்றிய விளக்கென்று முத்தந்
தனைக்கொடுத் தாலது சுடும்
ஆனாலு மேலவர்கண் மெத்தவுந் தனதென்
றடாதுசெய் யிற் கெடுதியாம்
யானைதான் மெத்தப் பழக்கமா னாலுஞ்செ
யாதுசெய் தாற்கொன் றிடும்
தீனை தினிதென்று மீதூண் விரும்பினாற்
றேகபீ டைகளே தருஞ்
செகராசர் சனுவென்ன வேலாத காரியஞ்
செய்தான் மனம்பொ றார்காண்

வாளுடு புகழுமொரு சோணாடு தழையவிவண்
வந்தவ தரித்த முதலே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (௬௦)

(இ-ள்.) தான் ஆசரித்துவருதெய்வம் இதுவென்று-தான்வழிபட்டுவருகிற தெய்வமிதுவென்று, பொய்சத்தியம் செயில்விடாது - பொய்சத்தியஞ்செய்தால் அதுவிடாது, தன்வீட்டில் ஏற்றியவிளக்கு என்று - தன்வீட்டிலேற்றிய தீபமென்று, முத்தம்கொடுத்தால்-முத்தந்தந்தால், அது சுடும்-அத்தீபஞ்சுடும், ஆனாலும் - ஆயினும், மேலவர்கள்-மேலோர்கள், மெத்தவுந் தனதுஎன்று-மிகவுந் தனதென்று, அடாதுசெய்யின்-அடாதகாரியத்தைச்செய்தால்,கெடுதிஆம்-கெடுதியுண்டாகும், ஆனைதான் மெத்த பழக்கம் ஆனாலும்-ஆனையானது மிகுபழக்கமானாலும், செய்யாது செய்தால்-செய்யாதகாரியத்தைச்செய்தால், கொன்றிடும்-கொன்றுவிடும், தீனைது-உணவானது, இனிதுஎன்று இனிதாயிருக்கிறதென்று, மீதூண்விரும்பினால் - அதிகவுணவை விரும்பினால், தேகபீடைகளேதரும் - சரீரபீடைகளையே யுண்டாக்கும், ஜெகராசர் தனுவென்ன-பூலோகத்தரசர் தனதாயிருக்கிறார்களென்று, ஏலாதகாரியம் செய்தால்-தகாதகாரியஞ்செய்தால்,மனம்பொறார்-மனம்பொறுக்கமாட்டார்கள், வாளுடுபுகழும்-சுவர்க்கலோகத்தாரால் புகழப்படுகிற, ஒருசோணாடுதழைய - ஒப்பற்ற சோழநாடு தழையும்படி, இவண்-இவ்விடத்தில், வந்து அவதரி

த்த முதலே - வந்து அவதாரஞ்செய்த முதல்வனே, மயி லேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேச னே எ-று.

ஆசரித்துவருதல்-வழிபட்டுவருதல். தனது என்று- வேண்டியவர்களென்று. சனுவென்ன-தனதென்று விடா து அழிக்கும்-அடாதுசெய்தல்-தகாதகாரியத்தைச்செய் தல். பீடை-துன்பம். (வியாதி.)

நடுவுநிலைமை.

வந்தவிவ காரத்தி லினியபரி தானங்கள்
வருமென்று நேச ரென்றும்
வன்பகைஞ ரென்றுமய லோரென்று மிக்கதன
வானென்று மேழை யென்றும்
இந்தவகை யைக்குறித் தொருபக்ஷ பாதமோ
ரெள்ளள வுரைத்தி டாம
லெண்ணமுட னெலிகித புத்தியொடு சாக்ஷிக்கு
மேற்கச்ச பாச மதமாம்
முந்தவிரு தலையுஞ் சமன்செய்த கோல்போன்
மொழிந்திடிற் றர்ம மதுகாண்
முனைவீம னுடல்பாதி மிருகந் தனக்கென்று
முன்றருமர் சொன்ன தலைவோ
மைந்தனென வன்றுமை முலைப்பால் கொடுத்திட
வளர்ந்தருள் குழந்தை வடிவே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (௬௧)

(இ-ள்.) (நியாயசபையில் நியாயாதிபதியாய்-வீற்றிருப்பவன்) வந்தவிவகாரத்தில் - (தன்னிடம்) வந்த விவகாரத்திலே இனிய பரிதானங்கள்வருமென்றும்-விரும்பத்தக்க லஞ்சப்பொருள்கள் (வாதிப்பிரதிவாதிகளுள் ஒருசாராயுடமிருந்து தனக்குக்) கிடைக்குமென்றும்,நேசரென்றும் (அவர்களில் ஒருசாரார் தனக்குச்) சிநேகிதரென்றும், வல்பகைஞர்என்றும்-கொடிய பகைவரென்றும், அயலோர் என்றும்-(சிநேகிதரும்பகைவருமாகாது) நொதுமலராயிருப்பவரென்றும், மிக்கதனவான்என்றும்-மிகுந்தசெல்வமுடையோரென்றும், ஏழை என்றும்-வறியவனென்றும், இந்தவகையைக்குறித்து-இவ்விதமானகாரணங்களை உத்தேசித்து, ஒரு பக்ஷபாதம் ஓர் எள் அளவு உரைத்திடாமல்-(ஒருசாராரிடத்து) ஒருசிறிதும் பக்ஷபாதமாகத் தீர்ப்புச்சொல்லாமல், எண்ணமுடனே (அவரவருடைய) மனத்தின்நினைப்புக்கும், லிகிதபுத்தியொடு - எழுத்துமூலமான ஆதாரங்களால் அறியப்படுகிறவிஷயத்துக்கும், சாட்சிக்கும்-சாட்சிகள்சொன்னவாக்குமூலத்துக்கும், ஏற்க-தகுதியாகவும், சபாசமதம் (தான்இருக்கிற) நியாயசபையில் உள்ளோர் எல்லோர்க்கும் சம்மதமாயிருக்கும்படியும், முந்த இருதலையும் சமன்செய்த கோல்போல் - முன்னே (தான் ஒருபக்கத்திலும்சாயாமல்) சமமாய் நடுநின்ற துலாக்கோல் (பின்பு தன்னிடம் வைக்கப்பட்ட பாரத்தை உள்ளபடி உணர்த்துதல்) போல, மொழிந்திடின்-(தான் சமமாய்நின்று) தீர்ப்புக்கூறினால், தர்மம்அது காண்-அது வேதருமமாகும், முன்-முன்பு, தருமர்-தருமபுத்திரரால்.

முனைவீமன் உடல்பாதி-வலிமையையுடைய வீமசேனனது உடம்பில் ஒருபாதி, மிருகந்தனக்குளென்றுசொன்னது அலவோ-மிருகத்துக்குஉரியதென்று சொல்லப்பட்டதன்றோ, அன்று-அக்காலத்தில், உமை-உமாதேவி, மைந்தனென-பிள்ளையாகக்கொண்டு, முலைபால்கொடுத்திட-(தனது) முலைப்பாலைக்கொடுக்க, வளர்ந்தருள்-வளர்ந்தருளின குழந்தைவடிவே-குழந்தைவடிவமானவனே, மயிலேறி விளையாடு குகனே புல்வயலீடுமலைமேவுகுமரேசனே, எ-று.

பரிதானம் - வழக்கில் தன்பக்கம் தீர்ப்புப்பெற்றுக்கொள்ளுதற்குக் கைம்மாறாகக்கொடுக்கும்பொருள். எள்ளளவு-இது, மிகச்சிறுமையைக்குறித்தற்கு எடுத்துக்காட்டப்படும் அளவு. வாதிப்பிரதிவாதிகளுடையசொற்செயல்களைக்கொண்டேயன்றி, வியாச்சியமூலம் நிகழுங்காலத்தில் அவர்களுக்கு இருந்த எண்ணத்தையும் ஆராய்ந்தறிந்து அதற்கும் ஏற்ப முடிவுசெய்யவேண்டுமென்பது நீதிநூற்கொள்கையாதலால், "எண்ணமுடனே" என்றார் வழக்கில் உண்மை நிச்சயித்தற்கு வேண்டுவனவான அநுபவம், லிகிதம், சாக்ஷி என்ற மூன்றனுள் லிகிதாதாரமாகிய சீட்டுப்பத்திரங்களினால் அறியப்படுகிற விஷயம், இங்கு "லிகிதபுத்தி" எனப்பட்டது இனி, "லிகிதபுத்தியொடு" என்பதற்கு விவகாரங்களுக்காக எழுதப்பட்ட நீதி நூல்களில் தேர்ந்த அறிவோடுகூடியென்றும் பொருள்கொள்ளலாம், லிகிதம் எழுதப்பட்டது. "அரசனால் ஏற்படுத்தப்பட்ட நியாயாதிபதி சில சபிகர்களுடன் இருந்து வழக்கைவிசாரித்து அவர்கள் கொள்கையையுந் தழுவி முடிவு

சொல்லவேண்டும்'' என்றதருமசாஸ்திரக்கொள்கைபற்றி "சபாசமதமா'' என்றார். சபிகராவார்-நியாயாதிபதியுடன் சபையில் இருந்து வழக்காளிகளின் நியாய அநியாயங்களை அறிதற்காக நியமிக்கப்பட்டவர்கள். ஆகவே சபா என்பது சபிகர்க்கு இடவாகுபெயராம்.

புருஷ மிருகமென்பது - முகத்தில் மனிதவடிவமும் உடம்பில் மிருகவடிவமும் கொண்டதொரு விலங்கு; இது தானுலாவும் இடங்களையெல்லாம் தன்மேற்பட்ட காற்றுவீசியமாத்திரத்தாற் பரிசுத்தமாக்குந்தெய்வத்தன்மை வாய்ந்தது. தன்முன்னிலையில் எதிர்ப்பட்டவரைக் கொல்லாதுவிடாது தருமபுத்திரர் அசுவமேதயாகஞ் செய்கின்றபொழுது லக்ஷக்கணக்கான பிராமணர்கள் போஜனஞ் செய்கிற இடங்களையெல்லாம் உடனுக்குடனே பரிசுத்தமாக்கவேண்டி புருஷமிருகத்தை யழைத்து வரும்பொருட்டுக் கண்ணபிரான் கட்டளைப்படி புறப்பட்ட வீமசேனன் வடதிசையில் நெடுந்தூரஞ் சென்று இமயமலையில் கதலிவனத்தில் அநுமானைக்கண்டு செய்திகூறி "புருஷமிருகத்தை அத்தினபுரிக்கு நான் அழைத்துச்செல்லும் உபாயம் கூறியருளவேண்டும்'' என்று வேண்டினன். அதற்கு அவ்வநுமான் அது உன்னைக் கண்டவுடன் கொல்லுதற்கு ஓடிவரும்; நீ அதன்முன்னே ஓடிச்செல்லவேண்டும்; அது உன்னை துரத்திக்கொண்டேவரும், அப்போது நீ அதன்கைக்கு அகப்படாது முற்பட்டு குறித்த இடஞ் சேர்வையாயின், அது உன்னைக்கொல்லுதல் தவறாது; நீ ஓடித்தப்ப முடியாதபடி எங்கெங்கு அது உன்னை நெருங்குகிறதோ, அங்கங்கு இந்த என் மயிர்ஒவ்வொன்றைக்கீழே எறிவையாயின், அங்கு ஒரு சிவலிங்கமுண்டாம், அதனை

அம்மிருகம் தன்வழக்கப்படி பூசித்துவருவதற்குள் நீ நெடுந்தூரஞ்செல்லலாம், என்றுசொல்லி, தனதுமயிர்களுள் எழுகொடுக்க, அவைபெற்ற வீமன் நிர்மநுஷ்யமானவனத்திற்சென்று அதனைக்கண்டு அதன்முன்நின்றளவில் புருஷமிருகம் துரத்திக்கொண்டுவர, வெகுவேகமாய் ஓடி அநுமான் சொன்னபடியெல்லாம்செய்து முன்வந்து அத்திருபுரிசேர்ந்த வீமன் யாகசாலையின்உள்ளே ஒருகாலைவைத்து நுழையுமளவில், வெளியேநின்றகாலைப் புருஷமிருகம் பிடித்துக்கொள்ள வீமன் உரிய இடத்திற் சேர்ந்துவிட்டபின்பு என்னை நீபிடித்தல் தகுதியன்று, என்று வாதிக்கவே, அவ்விலங்கு உனது ஒருகால்வெளியே நின்றதனுல், நான்பிடித்தல் தகுதியே எனக்கு நீ உரியவனுகின்றாய் என்று எதிர்வாதஞ் கூறியதனுல் இருவரும் மாறுபட்டுத் தம்தம்வழக்கைத் தாங்கள் முன்புகொண்டகோட்பாட்டுடனே தருமபுத்திரரிடத்தில் எடுத்துச்சொல்ல, தருமநெறிதவறுத அத்தருமராசர் சிறிதும் நீதிநெறிதப்பாமல் வீமனுடலிற்பாதி அம்மிருகத்திற்கு உரியதே என்று வரையறுத்துக்கூறினர், தனது தம்பியென்ற காரணத்தால் வீமனிடத்துச் சிறிதேனும் பக்ஷபாதமாகக்கூருத அந்தத் தருமபுத்திரருடைய நடுவுநிலைமையைக்கண்ட அத்தெய்வவிலங்கு அதற்கு மிகவுஞ்சந்தோஷித்து அதற்கு ஈடாக வீமனுடம்பின்பகுதியை விட்டுவிட்டது என்பது இந்தக் குறித்த வரலாறு.

சரவணப்பொய்கையில் குமாரக்கடவுள் அவதரித்து ஆறுவடிவத்தோடுஇருக்கையில் சிவபிரான் பார்வதிதேவி

யுடனே சரவணத்தையடைய அங்குச் சிவபிரான் கட்டளைப்படி பார்வதாதேவி அம்மைந்தனது ஆறுவடிவங்களையும் ஒன்றுசேர்த்து எடுத்து ஒரு குழந்தையாக்கி உச்சிமோந்து மார்பில் அணைத்து முலைப்பாலூட்டி பரமன் கையிற்கொடுத்தனளென்பது ஈற்றடியிற் குறித்தகதை.

பக்ஷபாதம்.

ஓரவிவ காரமா வந்தவர் முகம்பார்த்
துரைப்போர் மலைக்கு ரங்கா
முயர்வெள் ளெருக்குடன் முளைத்துவிடு மவரில்ல
முறையுமூர் பாழ்நத் தமாம்
காரணியி லவர்கள்கிளை நெல்லியிலை போலுகுஞ்
சமானமா வெழுபி றப்புஞ்
சந்ததியி லாதுழல்வ ரவர்முகத் தினின்மூத்த
தையலே குடியி ருப்பாள்
பாரமிவ ரென்றுபுவி மங்கையு நடுங்குவாள்
பழித்ததூர் மரண மாவார்
பகர்முடிவி லேரவுர வாதிநர கத்தனு
பவிப்பரெப் போது மென்பார்
வாரமுட னருணகிரி நாதருக் கனுபூதி
வைத்தெழுதி யருள்கு ருபரா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (சஉ)

(இ-ள்.) ஓரவிவகாரமாய்-ஓரவிவகாரமாக,வந்தவர்முகம்பார்த்து உரைப்போன்-வந்தவருடைய முகத்தைப்பார்

த்துச்சொல்லுவோன், மலைக்குரங்கு ஆம்-மலைக்குரங்கா வான், அவன் இல்லம்-அவன்வீட்டில், உடன்-உடனே, உயர்வெள்ளெருக்குமுளைத்துவிடும்-உயர்ந்தவெள்ளெருக்கஞ்செடிமுளைத்துவிடும், உறையும்ஊர்-அவன்வாழுமூரும், பாழ்நத்தம்ஆம்-பாழ்நத்தமாய்விடும், தாரணியில்-உலகத்தில், இவர்கள்கிளை-இவர்களுடையசுற்றம். நெல்லியிலை போல்உகும்-நெல்லியிலைபோலுதிர்ந்துவிடும், சமாநமா-சமாநமாக, எழுபிறப்பும்-எழுபிறப்பிலும், சந்ததியில்லாது உழல்வார்-சந்ததியில்லாமல் அலைவார்கள், அவர்முகத்தினில்-அவருடைய முகத்தில், மூத்ததையலே குடியிருப்பாள்-மூதேவியேகுடியிருப்பாள், இவர்பாரமென்று-இவர்கள் நமக்குப்பளுவாயிருக்கிறார்களென்று, புவிமங்கையும்நடுங்குவாள்-பூமிதேவியும் நடுங்குவாள், பழித்த-உலகத்தாரால் பழிக்கப்பட்ட, துர்மரண மாவார்-துர்மரணத்தையடைவார்கள், பகர்-சொல்லப்பட்ட,முடிவிலே-முடிவில், எப்போதும்-சதாகாலமும், ரவுரவாதிநரகத்து அனுபவிப்பர்-ரவுரவாதிநரகத்தில்வீழ்ந்து அத்துன்பத்தையநுபவிப்பார்கள், என்பார்-என்றுசொல்லுவர்(பெரியோர்) வாரமுடன்-அன்புடனே, அருணகிரிநாதருக்கு-அருணகிரிநாதருக்கு, அநுபூதிவைத்து எழுதியருள்-அநுபூதிவைத்துஎழுதியருளின, குருபரா-குருபரனே, மயிலேறிவிளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

ஓரவிவகாரம்-பக்ஷபாதமான வழக்கு. சமாநமா-ஒரே நிகராக. சந்ததி-சந்தானம். (பிள்ளை) ரவுரவம்-ஒருநரகம்.

ஒன்றிலாமையாற் சிறவாதவை.

கொங்கையில் லாதவட் கெத்தனைப் பணியுடைமை
கூடினும் பெண்மை யில்லை
கூறுநிறை கல்வியில் லாமலெத் தனைகவிதை
கூறினும் புலமை யில்லை
சங்கையில் லாதவர்க் கெத்தனை விவேகந்
தரிக்கினுங் கனதை யில்லை
சட்சுவை பதார்த்தவகை யுற்றாலு நெய்யிலாச்
சாதமுந் த்ருப்தியில்லை
பங்கச மிலாமலெத் தனைமலர்கள் வாவியிற்
பரித்து மேன்மை யில்லை
பத்தியில் லாமல்வெகு நியமமா யர்ச்சனைகள்
பண்ணினும் பூசை யில்லை
மங்கைய ரிலாமனைக் கெத்தனை யருஞ்செல்வம்
வரினுமில் வாழ்க்கை யில்லை
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (சுரு)

(இ-ள்.) கொங்கை இல்லாதவட்கு-ஸ்தநங்களில்லாதவளுக்கு, எத்தனை பணியுடைமைகூடினும் - எத்தனை ஆபரணங்களிருந்தாலும், பெண்மையில்லை-பெண்தன்மையில்லை, கூறும்-சொல்லப்பட்ட, நிறைகல்வியில்லாமல்-நிறைந்த கல்வியில்லாமல், எத்தனைகவிதை கூறினும்-எத்தனைகவிகள்சொன்னாலும், புலமையில்லை-பாண்டித்தியமில்லை, சங்

கையில்லாதவர்க்கு-சங்கையில்லாதவர்களுக்கு, எத்தனை வி வேகம் தரிக்கினும்-எத்தனையறிவுபுகட்டினாலும், களதை யில்லை-மேன்மையில்லை, சட்சுவை பதார்த்தவகை உற்றா லும்-அறுசுவைபதார்த்தவகையிருந்தாலும், நெய்இல்லா-நெய்யில்லாத, சாதமும்-சோறும், த்ருப்தியில்லை-த்ருப்தி யடைவதில்லை, பங்கயம் இல்லாமல் - தாமரையில்லாமல், வாவியில்-தடாகத்தில், எத்தனை மலர்கள் பாரித்தும்-எத்த னை மலர்கள் பூத்திருந்தாலும், மேன்மையில்லை-பெருமை யில்லை, பத்தியில்லாமல்-பக்தியில்லாமல், வெகுநியமமாய் மிகுந்தநியமமாக, அர்ச்சனைகள்பண்ணினும்-அர்ச்சனைக ள்செய்தாலும், பூசையில்லை-பூசையின் பயனில்லை, மங்கை யர் இல்லாமனைக்கு-மாதரில்லாதவீட்டுக்கு, எத்தனை அரு ஞ்செல்வம்வரினும்-எத்தனை அருமையாகிய செல்வங்கள் வந்தாலும், இல்வாழ்க்கைஇல்லை-இல்வாழ்க்கை யில்லையா கும், மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

கொங்கை-முலை. பணி-ஆபரணம். அறுசுவை-கைப் பு, புளிப்பு, துவர்ப்பு, இனிப்பு, கார்ப்பு, உப்பு, என்பன பதார்த்தவகை-கறிவகை. நியமம்-ஏற்பாடு.

அளவுபடாதவை.

வாரியா ழத்தையும் புனலெறியு மலைகளையு
　　மானிடர்கள் சனனத் தையும்
மன்னவர்க ளினைவையும் புருஷர்யோ கங்களையும்
　　வானினுயர் நீளத் தையும்

பாரிலெழு மணலையும் பலபிரா ணிகளையும்
படியாண்ட மன்ன வரையும்
பருப்பதத் தின்னிறையு மீசுரச் செயலையும்
பனிமாரி பொழிது ளியையும்
சீரிய தமிழ்ப்புலவர் வாக்கிலெழு கவியையுஞ்
சித்தர்தம துள்ளத் தையுந்
தெரிவையர்கள் சிந்தையையு மிவ்வள வெனும்படி
தெரிந்தள விடக்கூடுமோ
வாரிச மடந்தைகுடி கொண்டநெடு மாலுக்கு
மருகனென வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (கசச)

(இ-ள்.) வாரி ஆழத்தையும் - கடலினது ஆழத்தையும், புனல்எறியும் மலைகளையும்-நீரைவீசுகிற மலைகளையும், மானிடர்கள் சனனத்தையும்-மானிடர்களுடையபிறவியையும், மன்னவர்கள் நினைவையும்-அரசருடையநினைப்பையும் புருஷர்யோகங்களையும்-புருஷருடைய யோகங்களையும், வானின்உயர்நீளத்தையும்-ஆகாயத்தினது உயர்ந்தநீளத்தையும், பாரில்எழுமணலையும்-பூமியிலுண்டான மணலையும், பலபிராணிகளையும் - பலசீவராசிகளையும், படியாண்ட மன்னவரையும்-பூமியையாண்டஅரசர்களையும், பருப்பதத்தின் நிறையும்-மலையினதுஎடையையும், ஈசுரச்செயலையும்-ஈசுரச்செயலையும், பனிமாரிபொழிதுளியையும்-குளிர்ந்தமழைபொழிகிற துளிகளையும், சீரியதமிழ்ப்புலவர்வா

க்கில் எழுகவியையும்-சிறந்ததமிழ்ப்புலவர்களுடையவாக்கிலுண்டாகிய கவிகளையும், சித்தர்தமதுஉள்ளத்தையும்-சித்தர்களுடையமனத்தையும்,தெரிவையர்கள்சிந்தையையும்-மாதர்களுடையமனத்தையும்,இவ்வளவு எனும்படி-இவ்வளவென்று சொல்லும்படி; தெரிந்து அளவிடக்கூடுமோ-தெரிந்து அளவுபடுத்தவொண்ணுமோ, வாரிசமடந்தை-திருமகள், குடிகொண்டு - வாழ்தற்கிடமாயிருக்கிற, நெடுமாலுக்கு-திருமாலுக்கு, மருகன்என-மருகனென்று சொல்லும்படி, வந்தமுருகா-அவதரித்தமுருகக்கடவுளே மயிலேறி விளையாடு குகனேபுல் வயலீடு மலைமேவு குமரேசனே, எ-று.

புனல்-நீரருவி, திரை-எடை, வாரிசமடந்தை-தாமரைமலரில் வாழ்கின்றமாது,தெரிவையர்கள்சிந்தை அளவிடப்படாமையாற் சிறந்ததென்பதுதோன்ற இறுதியிற் கூறினர்.

பிறர்மனைநயத்தல்.

தந்தார மன்றியே பரதார மேனினைவு<br>
  தனைவைத்த காமுகர்க்குத்<br>
 தயையில்லை நிசமில்லை வெட்கமிலை சமரினிற்<br>
  றைரியஞ் சற்று மில்லை<br>
அந்தார மில்லைதொடர் முறையில்லை நிலையில்லை<br>
  யறிவில்லை மரபு மில்லை<br>
 யறமில்லை நிதியில்லை யிரவினிற் றனிவழிக்<br>
  கச்சமோ மனதி லில்லை

நந்தாத சனமில்லை யினமில்லை யெவருக்கு
நட்பில்லை கனதை யில்லை
நயமில்லை யிளமைதனில் வலிமையிலை முத்திபெறு
ஞானமிலை யென்பர் கண்டாய்
மந்தார பரிமள சுகந்தாதி புனையுமணி
மார்பனே யருளாளனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயலீடு
மலைமேவு குமரேசனே. (சுரு)

(இ-ள்.) தம்தாரம் அன்றியே - தமதுமனைவிமீதல்லாமலே, பரதாரம்மேல் நினைவுதனைவைத்தகாமுகர்க்கு - பிறன் மனைவியின்மேல் விருப்பம்வைத்தகாமுகருக்கு, தயையில்லை-கிருபையில்லை, நிசம் இல்லை-மெய்யில்லை, வெட்கம் இல்லை-நாணமில்லை, சமரினில்-போரில், தைரியம் சிறிதும் இல்லை - தைரியமென்பது சற்றுமில்லை, அம்தாரம்இல்லை-அழகியதன்மனைவியில்லை, தொடர்முறையில்லை-தொடர்ந்தமுறையில்லை, நிலையில்லை-நிலைமையில்லை, அறிவுஇல்லை-விவேகமில்லை, மரபும்இல்லை-மரபுமில்லை, அறம்இல்லை-தருமமில்லை, நிதியில்லை-பொருளில்லை, இரவினில்-இராக்காலத்தில், தனிவழிக்கு-தனியேசெல்லும்வழிக்கு, மனதில்அச்சம்இல்லை-மனதில்பயமில்லை, நந்தாசனம் இல்லை-கெடாத சனங்களில்லை, இனம்இல்லை-உறவில்லை, எவருக்கும் நட்பு இல்லை-ஒருவருக்கும்சிநேகமில்லை, கனதைஇல்லை - மேன்மையில்லை, நயம்இல்லை-நன்மையில்லை, இளமைதனில் வலிமையில்லை-இளமைப்பருவத்திலேயேபலமில்லை, முத்திபெ

றும்-மோக்ஷமடைதற்குறிய, ஞானம்இல்லை-ஞானமுமில்லை, என்பர்-என்றுசொல்லுவர் (பெரியோர்) மந்தாரபரிமளம்-மந்தாரமலரின் பரிமளத்தோடு, சுகந்தாதிபுனையும் சுகந்தவர்க்கத்தையும் தரிக்கின்ற, மணிமார்பனே-அழகிய மார்பையுடையவனே, அருளாளனே - கிருபாளுவே, மயிலேறிவிளையாடு குகனேபுல்வயனீடு மலைமேவு குமரேசனே. எ-று.

தாரம்-மனைவி, காமுகர்-விடர். மரபு-சந்ததி. மந்தாரம்-தேவலோகத்துப் பஞ்சதருக்களிலொன்று. சுகந்தம் நறுநாற்றம்.

மானம்விடாமை.

கனபாரமேறிற் பிளந்திடுவ தன்றியே
  கற்றூண் வளைந்திடாது
கருதலர்க ளாலுடைந் தாலுமுயி ரளவிலே
  கனசூர னமரின் முறியான்
தினமோ ரிடுக்கண்வந் துற்றாலும் வேங்கைதோல்
  சீவனள விற்கொ டாது
திரமான பெரியோர் சரீரங்கள் போகினுஞ்
  செப்புமுறை தவறி டார்கள்
வனமேறு கவரிமா னுயிர்போகு மளவுந்தன்
  மயிரினொன் றுங்கொ டாது
வாராத வாபத்து வருகினுங் கற்புடைய
  மாதுநிறை தவறி நடவாள்
மனதார வுனதடைக் கலமென்ற கீரற்கு
  வன்சிறை தவிர்த்த முருகா

மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (கா)

(இ-ள்.) கல்தூண்-கல்லினாலாகிய தூண், கனபாரம் ஏறின்-அதிகபாரம்தன்மேலேற்றப்பட்டால், பிளந்துஇறுவதுஅன்றியே-பிளவுபட்டு ஒடிவதேயல்லாமல்,வளைந்திடாது-வளையாது, கனசூரன்-மிக்க சூரனானவன், கருதலர்களால் உடைந்தாலும்-பகைவர்களால் தனக்கு அழிவுநேர்ந்தாலும், உயிர் அளவிலே-தனக்கு உயிருள்ளவரையிலும், அமரில்முரியான்-போர்செய்தலில்பின்னிடான், வேங்கை வேங்கைப்புலியானது, தினம்ஓர் இடுக்கண்வந்துஉற்றாலும்-நாள்தோறும் ஒருதுன்பம் (தனக்கு) வந்துநேர்ந்தாலும், சீவன் அளவில்-தனக்கு உயிரிருக்குமளவும், தோல்விகொடாது-தோற்றுப்பின்னிடாது, திரம்ஆன பெரியோர்-ஒழுக்கங்களில் உறுதியுள்ள பெரியோர்கள், சரீரங்கள் போகினும்-தங்களுடம்பு அழிவதானாலும் செப்பும்உரை தவறிடார்கள்-சொன்னசொல்தவறமாட்டார்கள், வனம் ஏறு கவரிமான்-அழகுமிக்க கவரியென்னும் மானானது, உயிர்போகும்அளவும்-தனது உயிர்நீங்கும்வரையிலும், தன்மயிரில் ஒன்றும்கொடாது-தனது மயிரில் ஒன்றையும் (பிறர்க்குக்) கொடாது, கற்புஉடையமாது-பதிவிரதாதருமத்தையுடைய பெண்ணானவள், வாராதஆபத்துவருகினும்-வரவொண்ணாத தீங்குவந்தாலும், நிறைதவறிநடவாள்-அக்கற்புநிலைமைதப்பி நடக்கமாட்டாள், மனதுஆர-மனப்பூர்வகமாக, உனது அடைக்கலம்என்ற-உனது அ

டைக்கலப் பொருளாவேன் யான் என்று கூறிச் சரணம டைந்த, கீரற்கு-நக்கீரன் என்னும்புலவனுக்கு, வல்சிறை தவிர்த்த-கொடிய சிறையிருப்பை ஒழித்தருளிய,முருகா முருகக்கடவுளே, மயிலேறிவிளையாடு குகனே புல்வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

"உற்றவிடத்தி லுயிர்வழங்குந்தன் மையோர், பற்றல ரைக்கண்டால் பணிவரோ-கற்றாண், பிளந்திடுவதல்லால் பெரும்பாரந் தாங்கின், தளர்ந்து வளையுமோதான்." "மயிர்நீப்பின்வாழாக் கவரிமாவன்னார், உயிர்நீப்பர்மா னம்வரின்" என்பன காண்க. கவரிமான் தனதுமயிர்த்தி ரளில் ஒருமயிர் நீங்கினும் உயிர்நீங்கும் இயல்பினது, கருதலர்-ஒருபொருளாக எண்ணாதவர், கற்பு-கணவனைத் தெய்வமென்றுகொண்டு அதற்கேற்ப ஒழுகும் ஒழுக்கம், இவ்வொழுக்கம் தாய்தந்தையராலும் கணவன் மாமன் மாமி முதலியோராலும் கற்பிக்கப்பட்டு நிலைபெறுவது.

திருவருட் சிறப்பு.

திருமகள் கடாக்ஷமுண் டானவர்க்குஞ்
  சிறப்புண்டு கனதை யுண்டு
 சென்றவழி யெல்லாம் பெரும்பாதை யாய்விடும்
  செல்லாத வார்த்தை செல்லும்
பொருளொரு துரும்புமரி யாதையாஞ் செல்வமோ
  புகல்பெருக் காறு போலாம்
 புவியின்முன் கண்டுமதி யாதபேர் பழகினவர்
  போலவே நேச மாவார்

பெருமையொடு சாதியி லுயர்ச்சிதரு மனுதினம்
　　பேரும்ப்ர திஷ்டை யுண்டாம்
பிரியமொடு பகையாளி கூடவுற வாகுவான்
　　பேச்சினிற் பிழைவ ராது
வருமென நினைத்தபொருள் கைகூடி வருமதிக
　　வல்லமைகண் மிகவு முண்டாம்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
　　மலைமேவு குமரேசனே. (சுள)

(இ-ள்) திருமகள் கடாக்ஷம் உண்டானல்-திருமகளது கடாக்ஷமுண்டானல், எவர்க்கும்-எல்லாருக்கும், சிறப்பு உண்டு-மேன்மையுண்டு, கனதை உண்டு-பெருமையுண்டு, சென்றவழியெல்லாம் - போனவழியெல்லாம், பெரும்பாதைஆய்விடும்-பெரியவழியாகிவிடும், செல்லாதவார்த்தை செல்லும்-செல்லாத சொல்லும் செல்லும், பொருள்-பொருளானது, ஒருதுரும்பு மரியாதைஆம் - ஒருதுரும்புக்கு நிகராகும், செல்வமோ-பாக்கியமோ, புகல் - சொல்லப்பட்ட, பெருக்காறுபோல்ஆம் - பெருக்காறுபோலாகும், புவியில்-பூமியில், முன்-முன்னே, கண்டு மதியாதபேர்-பார்த்து மதிக்காதபேர்கள், பழகினவர்போலவே நேசமாவார் - பழகினவர் போலவே நட்பாவார்கள், பெருமையொடு-பெருமையுடனே, சாதியில் உயர்ச்சிதரும் - சாதியில் உயர்வையுங்கொடுக்கும், அனுதினம்-நாள்தோறும், பேரும்ப்ரதிஷ்டை உண்டாம் - பேரும்பிரதிஷ்டையும் உண்டாகும், பகையாளிகூட-விரோதியுங்கூட, பிரியமொடு

அன்போடு, உறவுஆகுவான்-உறவினனுவான், பேச்சினில் பிழைவராது-சொல்லில் பிழையுண்டாகாது, வரும் என நினைத்தபொருள்-வருமென்றெண்ணினபொருள், கைகூடி வரும்-கைகூடிவரும், அதிகவல்லமைகள் மிகவும் உண்டாம்-அதிகசமர்த்தும் மிகுதியாயுண்டாகும், மயிலேறிவிளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

கடாட்சம்-அருள், பேச்சினில் பிழைவராது-சொல்லில் பிசகுநேரிடாது, கைகூடிவருதல்.

நட்புநிலை.

கதிரவ னுதிப்பதெங் கேநளின மெங்கே
களித்துள மலர்ந்த தென்ன
கார்மேக மெங்கே பசுந்தோகை யெங்கே
கருத்தினட் பான தென்ன
மதியமெங் கேபெருங் குமுதமெங் கேமுக
மலர்ந்துமகிழ் கொண்ட தென்ன
வல்லிரவு விடிவதெங் கேகோழி யெங்கே
மகிழ்ந்துகூ விடுத லென்ன
நிதியரச ரெங்கே யிருந்தாலு மவர்களொடு
நேசமொன் றுயி ருக்கு
நீதிமிகு நல்லோர்க ளெங்கிருந் தாலுமவர்
நிறை பட்ச மறவார் கள்காண்
மதிலுடன் கோபுரமும் வாவியும் புடைசூழ
மருவுசோ ணாட்ட திபனே

மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (கூஅ)

(இ-ள்.) கதிரவன் உதிப்பது-சூரியன் தோன்றுவது, எங்கே-எவ்விடத்திலே, நளினம்-தாமரையிருப்பது, எங்கே எவ்விடத்திலே, (ஒன்றுக்கு ஒன்று நெடுந்தூரமாயிருந்தும்) உளங்களித்துமலர்ந்தது என்ன-சூரியனைக் கண்டவுடனேதாமரை, மனம்மகிழ்ந்து மலர்ச்சிகொண்டது என்ன ஆச்சரியம், கார்மேகம்-கருநிறமுள்ளமேகம் இருப்பது, எங்கே-எவ்விடத்திலே, பசுதோகை-பசுநிறமுள்ள மயில் இருப்பது, எங்கே-எவ்விடத்திலே, (ஒன்றுக்கு ஒன்று நெடுந்தூரமாயிருந்தும்) கருத்தில்நட்பு ஆனது என்ன (மயில்மேகத்தினிடத்தில்) சிநேகங்கொண்டு அதனைக்கண்டவுடனே களித்துக்கூத்தாடுவது என்ன ஆச்சரியம், மதியம் எங்கே-சந்திரன் இருப்பது, எவ்விடத்திலே, பெருகுமுகம் எங்கே-சிறந்த ஆம்பல்இருப்பது எவ்விடத்திலே, முகம்மலர்ந்து மகிழ்கொண்டதுஎன்ன(ஒன்றுக்கு ஒன்று நெடுந்தூரமாயிருந்தும்) (சந்திரனைக்கண்டவுடனே ஆம்பல்) மகிழ்ச்சிகொண்டு முகம்மலர்வது என்னஆச்சரியம் வல் இரவுவிடிவது எங்கே-பயங்கரமான இராப்பொழுது நீங்கிப்பகற்பொழுதுவருவது எவ்விடத்திலே, கோழி எங்கே-கோழியிருப்பது எவ்விடத்திலே, மகிழ்ந்துகூவிடுதல் என்ன (அப்படியிருந்தும் பொழுதுவிடிவது கண்டவளவிலே கோழிமகிழ்ச்சிகொண்டு கூப்பிடுவது என்னஆச்சரியம் அவை இயல்பாதல்போலவே) நீதி அரசர் எங்கேயிருந்தாலும் - செல்வமுள்ள அரசர்கள் எவ்விடத்திலே

யிருந்தாலும், அவர்களொடு நேசம்ஒன்றாய் இருக்கும் நீதி மிகுநல்லோர்கள் எங்கு இருந்தாலும் - அவ்வரசர்களுட னே நட்புப்பொருந்தியிருக்கிற நியாயத்தோடுமிக்க நற் குணமுடையவர்கள் எவ்விடத்திலிருந்தாலும், அவர் நிறை பட்சம் மறவார்கள்காண்-அவர்கள் ஒருத்தர்மேலொருத் தர் நிறைந்த அன்பை மறக்கமாட்டார்களன்றோ, மதிலு டன்-மதில்களும், கோபுரமும்-கோபுரங்களும், வாவியும் தடாகங்களும், புடைசூழ-பக்கங்களிலெல்லாஞ் சூழ்ந்தி ருக்க, மருவு-பொருந்திய, சோணாடு - சோழநாட்டுக்கு அதிபனே-தலைவனே, மயிலேறிவிளையாடு குகனேபுல் வய லீடு பலைமேவு குமரேசனே. எ-று.

வானத்தில் நெடுந்தூரத்திலுள்ள பொருள்களுக்கும் பூமியிலுள்ள பொருள்களுக்கும் ஒன்றுக்கு ஒன்று சிநேக குணம் மிகுதல் போலவே உலகத்தில் எவ்வளவு தூரத்தி லுள்ளார்க்கும் சிநேகம் மிகுதல் இயல்பென்பதாம். இரவு விடிவது எங்கும் உள்ளதாயினும் அதற்குக்காரணமான சூரியனது தோற்றம் வானத்திலுள்ளது பற்றி அதனைநெ டுந்தூரத்ததுபோலக் கூறினார்.

### கால மறிதல்.

காகம் பகற்காலம் வென்றிடுங் கூகையைக்
கனகமுடி யரசர் தாமுங்
கருதுசய காலமது கண்டந்த வேளையிற்
காரிய முடித்து விடுவார்
மேகமுங் கார்கால மதுகண்டு பயிர்விளைய
மென்மேலு மாரி பொழியும்

மிக்கான வறிவுளோர் வருதருண காலத்தின்
மிடியாள ருக்கு தவுவார்
நாகரிகமுறுகுயில் வசந்தகா லத்திலே
நலமென் றுவந்து கூவு
நல்லோர் குறித்ததைப் பதருமலந்தந்த
நாளையின் முடிப்பர் கண்டாய்
வாகனைய காலைகன மாலைபுல் லெனுமுலக
வாடிக்கை நிசமல் லவோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (சுகூ)

(இ-ள்.) காகம்-காகமானது பகல்காலம் -,பகற்காலத்தில், கூகையை வென்றுவிடும் (அதுபோலவே) கனகமுடி பொன்முடியைத்தரித்த, அரசர்தாமும்-அரசரும், கருது சயகாலமதுகண்டு-நினைத்தற்குரிய சயகாலத்தைப்பார்த்து, அந்தவேளையில்-அந்தச்சமயத்தில், காரியம் முடித்து விடுவார்-தமதுகாரியத்தை முடித்துவிடுவார்கள், மேகமும்-மேகமும், கார்காலமதுகண்டு-கார்காலத்தைப்பார்த்து, பயிர்விளைய-பயிர்கள்விளையும்படி, மேன்மேலும்-மேலுமேலும், மாரிபொழியும் - மழையைப்பொழியும், மிக்கான அறிவுளோர்-மேலான அறிவுள்ளவர்கள், வருதருணகாலத்தில்-வருகிற தருணகாலத்தில், மிடியாளருக்கு வுதவுவார்-தரித்திரருக்கு உதவிசெய்வார்கள், நாகரிகம் உறுகுயில்-நாகரிகம்பொருந்திய குயிலானது, வசந்தகாலத்திலே-வசந்தருதுவில், நலம் என்று வந்துகூவும்-

நன்மையென்று மகிழ்ந்து கூவாநிற்கும், நல்லோர்-நல்ல வர்கள், குறித்ததை-தாம் நினைத்ததை, பதறாமல்-அவசரப்படாமல், அந்தநதநாளையில்-அந்தந்தகாலத்தில், முடிப்பர்-முடிப்பார்கள், வாகு அனையகாலை கனமாலை புல்லெனும்-உலகைவாடிக்கை-உலகவழக்கம், நிசமல்லவோ-உண்மையல்லவோ, மயிலேறிவிளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே. எ-று.

சயகாலம்-வெல்லுங்காலம் கார்காலம்-மழைகாலம்-தருணகாலம்-ஆபத்காலம் மிடியாளர்-வறியர், வசந்தகாலம்-கோடைகாலம் வாகனையகாலை கனமாலை புல்லெனும் என்பது உலகத்துப்பழமொழி.

## இடனறிதல்.

தரையதனி லோடுதேர் நீள்கடலி லோடுமோ
சலதிமிசை யோடு கப்பல்
தரைமீதி லோடுமோ தண்ணீரி லுறுமுதலை
தன்முன்னே கரிநிற் குமோ
விரைமலர் முடிப்பரமர் வேணியர வினைவெல்ல
மிகுகருட னுலா குமோ
வேங்கைக ளிருக்கின்ற காடுதனி லஞ்சாமல்
வேறொருவர் செல்ல வசமோ
துரைகளைப் பெரியோரை யண்டிவாழ் வோர்தமைத்
துஷ்டர்பகை யென்ன செய்யுந்
துணைகண்டு சேரிட மறிந்துசே ரென்றெளவை
சொன்னகதை பொய்யல் லவே

வரையூது மாயனை யடுத்தலாற் பஞ்சவர்கள்
வன்போர் செயித்த தன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே (எ0)

(இ - ள்.) தரையதனில் ஓடுதேர் - பூமியின்மேலோடுகிறதேரானது, நீள்கடலில் வோடுமோ-நீண்டகடலிலே வோடுமோ, சலதிமிசை ஓடுகப்பல்-கடலின்மீதோடுகிற கப்பலானது, தரைமீதில் ஓடுமோ-பூமியின்மேலோடுமோ, தண்ணீரில் உறுமுதலை தனமுன்னே தண்ணீரில் வாழுகிற முதலையின் முன்னே, கரிநிற்குமோ-யானையானது நிற்குமோ, விரைமலர்முடி-மணமுள்ள மலர்மாலைகளையணிந்த சடையையுடைய, பரமர் - பரமசிவனது, வேணி-சடையிலுள்ள, அரவினை வெல்ல-பாம்பைவெல்லுதற்கு, மிகுகருடனால் ஆகுமோ-மேலான கருடனால் ஆகுமோ, வேங்கைகள் இருக்கின்ற-புலிகள்வாழ்கின்ற, காடுதனில்-காட்டில், அஞ்சாமல்-பயப்படாமல், வேறொருவர் செல்லவசமோ-வேறொருவர் போகவசமாகுமோ, துரைகளைபெரியோரை-துரைகளையும் பெரியோரையும், அண்டிவாழ்வோர்தமை - அடுத்துவாழ்வோர்களை, துஷ்டர் பகை என்னசெய்யும் - துஷ்டர்களுடைய பகையானது என்னசெய்யும், துணைகண்டு-துணையாவாரையறிந்து, சேரிடமறிந்துச்சேர் என்று-சேரிடமறிந்துசேரென்று ஒளவைசொன்னகதை பொய்யல்லவே-ஒளவையார்சொன்ன கதைபொய்யல்லவே, வரைஊதுமாயனை - வேய்ங்குழலையூதுகிற கண்ணனை, அடுத்தலால்-அடுத்ததனால், பஞ்சவர்கள்-பஞ்சபாண்டவர்கள், வன்போர்செயித்தது அன்றோ

வலிய பாரதயுத்தத்தில் வென்றதல்லவா, மயிலேறி விளை யாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே எ-று.

சலதி-கடல். கரி-யானை. விரை-வானை. வேணி-சடை வரை-மூங்கில். (புள்ளாங்குழல்.)

யாக்கை நிலையாமை.

மனுநன்மாந் தாதாமு னனவர்க ளெல்லாரு
மண்மே லிருந்து வாழ்ந்து
மடியா திருந்தபே ரில்லையவர் தேடியதை
வாரிவைத் தவரு மில்லை
பனியதனை நம்பியே யேர்பூட்டு கதையெனப்
பாழான வுடலை நம்பிப்
பார்மீதி லின்னம்வெகு நாளிருப் போமென்று
பலகோடி நினைவை யெண்ணி
அனிதமாய் விருதாவின் மாய்வதே யல்லாம
லன்பாக நின் பதத்தை
யர்ச்சித்து முத்திபெறல் வேண்டுமென் றெண்ணூர்க
ளாசைவலை யிற்சு ழலுவார்
வனிதையர்கள் காம விகாரமே பகையாகு
மற்றுமொரு பகைமை யுண்டோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (எக)

(இ-ள்.) மனுநல்மாந்தாதா முன்னனவர்கள் எல்லாரும் மனுநல்லமாந்தாதாமுதலானவர்களெல்லாரும், மண்மேல்

இருந்து வாழ்ந்து-பூமிமேலிருந்துவாழ்ந்து, மடியாதிருந்தபேர் இல்லை - இறவாமலிருந்தவர்களில்லை, அவர்தேடியதை-அவர்தேடிவைத்த பொருளை, வாரிவைத்தவரும் இல்லை-வாரிக்குவித்துவைத்தவருமில்லை, பனியதனைநம்பி-பனியைநம்பி, ஏர்பூட்டுகதையென - ஏர்பூட்டினகதைபோல, பாழானஉடலை நம்பி-பாழாகிய வுடம்பைநம்பி, பார்மீதில்-பூமியின்மேல், இன்னம்வெகுநாள் இருப்போம்என்று-இன்னம்வெகுகாலமிருப்போமென்று, பலகோடி நினைவை எண்ணி-பலகோடியெண்ணங்களை யெண்ணி, அனிதமாய்-அநியாயமாய், விருதாவில்-வீணாக, மாய்வதே அல்லாமல்-மடிவதேயன்றி, அன்பாகநின் பதத்தை-அன்போடுஉன் திருவடியை, அர்ச்சித்து-அர்ச்சனைபண்ணி, முத்திபெறல்வேண்டும் என்று எண்ணார்கள்-மோக்ஷமடையவேண்டுமென்று நினையார்கள், ஆசைவலையில் சுழலுவார்-ஆசையாகிய வலையிலகப்பட்டுழல்வார்கள், வனிதையர்கள்-மாதருடைய,காமவிகாரமே பகையாகும்-காமவிகாரமே பகையாயிருக்கும்,மற்றுமொருபகைமைஉண்டோ-வேறுமொருபகையுளதோ, மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு மலைமேவு குமரேசனே. எ-று.

மடிதல்-இறத்தல். நினைவு-எண்ணம். மாய்தல்-மடிதல் வனிதையர்-மாதர்.

வேட்டகத் திகழ்ச்சி.

வேட்டகந் தன்னிலே மருகன்வந் திடுமளவின்
மேன்மேலு முபசரித்து

விருந்துகள் சமைத்துநெய் பாறயிர் பதார்த்தவகை
வேண்டுவ வெலாம மைப்பார்
ஊட்டமிகு வர்க்கவகை செய்திடுவர் தைலமிட்
டுறுதியாய் முழுகு விப்பா
ரோயாது தின்னவே பாக்கிலை கொடுத்திடுவ
ருற்றநா ளுலா கிலோ
நாட்டமொரு படியிறங் குவதுபோன் மரியாதை
நாளுக்கு நாள்கு றைவுறும்
நகைசெய்வர் மைத்துனர்க ளலுவல்பார் போவென்று
நாணமன் மாமிசொல்வாள்
வாட்டமனை யாளொரு துரும்பாய் மதிப்பளவள்
மட்டியினு மட்டி யன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.                    (எஉ)

(இ-ள்.) வேட்டகம்தன்னில் - கலியாணவீட்டில், மருகன்வந்திடில்-மருமகன்வந்திடு மளவிலே, மேன்மேலும்உபசரித்து - மேலும்மேலும் உபசாரம்பண்ணி, விருந்துகள் சமைத்து - விருந்துபோசனங்கள் சமைத்து, நெய்பால் தயிர், பதார்த்தவகை-பதார்த்தவகைகள், வேண்டுவஎல்லாம் அமைப்பார்-இன்னம் வேண்டுமவற்றை யெல்லாம் அமைத்துவைப்பார்கள், ஊட்டம்மிகு - வலிவு மிகுதற்குரிய, வர்க்கவகை செய்திடுவர் - பலகாரவகைகள் செய்வார்கள், தைலமிட்டு-எண்ணெயிட்டு, உறுதியாய் முழுகுவிப்பார் - நன்றாக முழுக்காட்டுவார்கள், ஓயாதுதின்ன -

ஓயாமல் மெல்லுதற்கு, பாக்கிலைகொடுத்திடுவர் - பாக்கு வெற்றிலை கொடுப்பார்கள், உற்றநாள் நால்ஆகிலோ - பொருந்தியநாள் நாலானாலோ, நாட்டம் ஒருபடிஇறங்கு வதுபோல்-அன்பு ஒருபடி யிறங்குதல்போல, மரியாதை- மரியாதையானது, நாளுக்குநாள் குறைவுறும்-நாளுக்கு நாள் குறையும், மைத்துனர்கள் நகைசெய்வர்-மைத்துன ர்கள் சிரிப்பார்கள், மாமி-மாமியாரும், நாணமல்-வெட்க மில்லாமல், அலுவல்பார்போ வென்று சொல்லுவாள் - ஏதாகிலும் ஒருவேலை பார்போவென்று சொல்லுவாள், வாட்டம்மனையாள் - வாட்டத்தையுடைய மனைவியான வள், ஒரு துரும்பாய் மதிப்பள்-ஒரு துரும்பா யெண்ணு வாள், அவன் - அப்படிப்பட்டவேட்டகஞ் சேர்ந்தவன், மட்டியினும் மட்டி அன்றோ-மூடனிலுமூடனல்லவா, மயி லேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரே சனே, எ-று.

வேட்டகம்-மாமியார். வர்க்கவகை - பலகாரவகை பாக்கிலை-தாம்பூலம். அலுவல்-உத்தியோகம்.

செல்வ நிலையாமை.

ஓடமிடு மிடமது மணற்சுடுஞ் சுடுமிடமு
மோடமிக வோட க்கு
முற்றதோ ராற்றின் மடு மேடாகு மேடெலா
முறுபுனல்கொண் மடுவா யிடும்
நாடுகா டாகுமுயர் காடுநா டாகிவிடு
நவில்சகடு மேல்கீ ழதாய்

நடையூறு சந்தைபல கூடுமுட னேகலையு
நன்னிலவு மிருளாய் விடும்
நீடுபகல் போயபின் பிரவாகு மிரவுபோய்
நிறைபகற் போதாய் விடும்
நிதியோர் மிடித்திடுவர் மிடியோர் செழித்திடுவர்
நிசமல்ல வாழ்வு கண்டாய்
மாடுமனை பாரிசன மக்கணிதி பூஷணமு
மருவுகன வாகு மன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (எ௩)

(இ-ள்.) ஓடமிடும் இடமது-ஓடமோடுகிற இடமானது, மணல்சுடும்-மணல்சுடுதற்குரியஇடமாகும்,சுடும் இடமும்-சுடுகிறஇடத்திலும்,ஓடம்மிகநடக்கும்-ஓடமானதுமிகவும் நடக்கும், உற்றது - பொருந்தியதாகிய, ஓர் ஆற்றின் மடு மேடாகும் - ஒருயாற்றின்மடுவானதுமேடாகும், மேடெலாம் - மேடுமுழுதும், உறுபுனல்கொள் - மிகுந்த நீரைக் கொண்ட, மடு ஆயிடும்-மடுவாய்விடும், நாடுகாடு ஆகும்-நாடுகாடாய்விடும், உயர்காடுநாடு ஆகிவிடும்-உயர்ந்தகாடு நாடாகிவிடும், நவில்-சொல்லப்பட்ட, சகடு-வண்டியுருளையானது, மேல்கீழது ஆம் - மேலதுகீழதாகும், நடை ஊறு சந்தைபலகூடும் - மனிதர்நடையாடுகிற பலசந்தைகள்கூடும், உடனேகலையும்-உடனேகலைந்துபோகும், நல் நிலவும்-நல்லநிலாக்காலமும், இருள் ஆய்விடும்-இருட்கால

மாய்விடும், நீடுபகல்போனபின்பு-நீண்டபகற்காலம் கழிந்தபிறகு, இரவு ஆகும்-இராக்காலம்வரும், இரவுபோய்-இராக்காலம்போய், நிறைபகற்போது ஆய்விடும் - நிறைந்த பகற்காலமாய்விடும், நிதியோர்மிடித்திடுவர்-செல்வர் வறியராவர், மிடியோர்செழித்திடுவர்-வறியர் செழிப்பார்கள், (ஆதலால்) வாழ்வு-செல்வமானது, நிசம்அல்ல-மெய்யல்ல, மாடுமனை-எருதுவீடு, பாரி - மனைவி, சனம்-உறவினர், மக்கள்-பிள்ளைகள், நிதி-செல்வம், பூஷணமும்-ஆபரணமும், மருவு-பொருந்திய, கனவு ஆகுமன்றோ-கனவாகுமல்லவா, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே. எ-று.

ஓடம்-கப்பல். சகடு-சக்கரம். போது-பொழுது. நிதி-செல்வம். மிடி-வறுமை. பாரி-பாரியை (மனைவி.)

பிறந்தாற் பெறுபேறு.

சடமொன் றெடுத்தாற் புவிக்குநல் லவனென்று
　　தன்பேர் விளங்க வேண்டுஞ்
சதிருடனி தல்லாது மெய்ஞ்ஞானி யென்றவ
　　தரிக்கவே வேண்டு மல்லால்
திடமினிய ரணசூர வீரனிவ னென்னவே
　　திசைமெச்ச வேண்டு மல்லால்
தேகியென வருபவர்க் கில்லையென் றுமலே
　　செய்யவே வேண்டு மல்லால்
அடைவுடன் பலகல்வி யாராய்ந்து வித்துவா
　　னாகவே வேண்டு மல்லா

லறிவான துரைமக்க ளாகவர வேண்டுமிவ
ரதிகபூ பால ரையா
வடகுவடு கிடுகிடென வெழுகடலு மலையெறிய
மணியுரகன் முடிக ணெரிய
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (எச)

(இ-ள்.) சடமொன் று எடுத்தால் - சரீரமொன்றை எடுத்தால், புவிக்கு-பூமியில், நல்லவனென்று - நல்லவனென்று, தன்பேர் விளங்கவேண்டும்-தன்பேர்பிரகாசிக்கவேண்டும், சதிருடன் இதுஅல்லாது - சதுரதையோடு இதையல்லாமல், மெய்ஞ்ஞானியென்று பிறக்கவேண்டும், அல்லால்-அல்லாமல், திடம் இனிய - உறுதியின்மிகுந்த, ரணசூரவீரன் - ரணசூரவீரனுவோன், இவனென்ன - இவனேயென்று, திசைமெச்சவேண்டும் - திக்கிலுள்ளா ரெல்லாரும் மெச்சிக்கொள்ளவேண்டும், அல்லால் - அல்லாமல், தேகியென வருபவர்க்கு - தேகியென்றுவருவோருக்கு, இல்லையென்னுமல்-இல்லையென்று சொல்லாமல், செய்யவேண்டும்-உதவிசெய்யவேண்டும், அல்லால்-அல்லாமல், அடைவுடன்-முறையாக, பலகல்வி ஆராய்ந்து-பலவகைக்கல்விகளையும் ஆராய்ந்து, வித்துவான் ஆகவேண்டும்-வித்துவானுகவேண்டும், அல்லால்-அல்லாமல், அறிவான-விவேகமுள்ள, துரைமக்களாக வரவேண்டும்-துரைமக்களாகப் பிறக்கவேண்டும், இவர்-இவர்கள், அதிகம் - மேன்மையுள்ள, பூபாலர் - பூபாலராவர், ஐயா-ஐயனே, வடகுவடு-

மேருமலையானது, கிடுகிடெனை - கிடுகிடென் றசையவும், எழுகடலும் அலையெறிய-சப்தசமுத்திரங்களும் அலைமோதவும், மணி-மாணிக்கமுள்ள, உரகன்-ஆதிசேடனது, முடிகள்நெரிய-தலைகள்நெரியவும், மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

தேகியெனை-கொடுவென்று, பலகல்வி பனுநூல்கள் துரைமக்கள்-சீமான்பிள்ளைகள். பூபாலர் - பூமியிலுள்ளோரைக் காப்பாற்றுவோர், இவ்வுலகத்தில் மனிதனைப்பிறந்தவன் நல்லவன் மெய்ஞ்ஞானியென்பன முதலானபெயர்களுக்குரியனுதல் வேண்டுமென்பதாம்.

வேசை நிந்தை.

தேடித்தம் வீட்டிற் பணக்காரர் வந்திடிற்
றேகசீ வன்போ லவே
சினேகித்த வும்மையொரு பொழுதுகா ணுவிடிற்
செல்லுறு தன்ன மென்றே
கூடிச் சுகிப்பரென் னுசையுன் மேலென்று
கூசாம லாணை யிடுவார்
கொங்கையை வெடிக்கப் பிடிக்கக் கொடுத்திதழ்
கொடுப்பர்சும் பனமு கப்பர்
வேடிக்கை பேசியே கைமுதல் பறித்தபின்
வேறுபட நிந்தை செய்து
விடவிடப் பேசுவார் தாய்கலக மூட்டியே
விட்டுத் துரத்தி விடுவார்

வாடிக்கை யாயிந்த வண்டப் பரத்தையர்
மயக்கத்தை நம்பலாமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (எரு)

(இ-ள்.) பணக்காரர்-பணக்காரர்கள், தம்வீட்டில்-தம் வீட்டிற்கு, தேடிவந்திடில்-தேடிக்கொண்டுவந்துவிட்டால் தேகசீவன்போலவே-சரீரசரீரிகள்போலவே, சினேகித்த உம்மை-சினேகஞ்செய்ததங்களை, ஒருபொழுது காணுவிடின் ஒருபொழுதுகாணுவிட்டால், அன்னம் செல்லுறது என்று-சோறுசெல்லாது என்றுசொல்லி, கூடிசுகிப்பார்-கூடியின்பமடைவார்கள், என்ஆசை - என் விருப்பமுழுதும், உன்மேல் என்று - உன்மேலேயென்று, கூசாமல்-நாணுமல், ஆணையிடுவார் - ஆணையிடுவார்கள், கொங்கையை-தனங்களை, வெடிக்க - வெடிக்கும்படி, பிடிக்கக்கொடுத்து-பிடிக்கக்கொடுத்து, இதழ்கொடுப்பர்-இதழையுங் கொடுப்பார்கள், சும்பனம் உகப்பர் - (அந்தஇதழைஅப் புருடர்) சும்பித்தலைவிரும்புவார்கள், வேடிக்கைபேசி-வேடிக்கைவார்த்தைகள்பேசி, கைமுதல்பறித்தபின் - கைமுதலைப் பறித்துக்கொண்டபிறகு, வேறுபடநிந்தைசெய்து-வேறுகநிந்தித்து, விடவிடபேசுவார் - விடவிடபேசுவார்கள், தாய்கலகம்மூட்டிவிட்டு - தாய்கலகம்மூளச்செய்து, விட்டுதுரத்தி விடுவார் - துரத்திவிடுவார்கள், வாடிக்கையாய் வழக்கமாக, இந்தவண்டப்பரத்தையர்மயக்கத்தை-இந்ததுஷ்டவேசையரது காமமயக்கத்தை, நம்பலாமோ

நம்பவொண்ணுமோ, (ஒண்ணது) மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

தேகசீவன்போல-உடம்பு முயிரும்போல, சும்பநம்-சுவைத்தல் (சப்புதல்.) கைமுதல்-கையிலுள்ள முதற்பொருள், விடவிடப்பேசுதல்-மானங்கெடப் பேசுதல், தாய்க்கலகம்-தாய்ச்சண்டை. விட்டுத்துரத்தல்-வீட்டைவிட்டுத் துரத்தல்.

இதற்கிது உறுதியெனல்.

கைக்குறுதி வேல்வின் மனைக்குறுதி மனையாள்
கவிக்குறுதி பொருளடக்கங்
கன்னியர் தமக்குறுதி கற்புடைமை சொற்குறுதி
கண்டிடிற் சத்யவசனம்
மெய்க்குறுதி முன்பின் சபைக்குறுதி வித்வசனம்
வேசையர்க் குறுதி தேடல்
விரகருக் குறுதிபெண் மூப்பினுக் குறுதியூண்
வீரருக் குறுதி தீரம்
செய்க்குறுதி நீரரும் பார்க்குறுதி செங்கோல்
செழும்படைக் குறுதி வேழஞ்
செல்வந் தனக்குறுதி பிள்ளைகண கர்க்குறுதி
சேர்ந்திடுஞ் சர்ச்சனர்க ளாம்
மைக்குறுதி யாகிய விழிக்குற மடந்தைசுர
மங்கைமரு வுந் தலைவனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (எசு)

(இ-ள்.) கைக்குஉறுதி-(ஒருவனது) கைக்கு உறுதியாவது, வேல்வில்-வேலும்வில்லுமாம், மனைக்குஉறுதி - வீட்டிற் குறுதியாவது, மனையாள்-மனையாளாவாள், கவிக்கு உறுதி-கவிக்குறுதியாவது, பொருள் அடக்கம்-பொருளடக்கமாம், கன்னியர்தமக்கு உறுதி - கன்னியர்களுக்கு உறுதியாவது, கற்புடைமை-கற்புடைமையாம், சொற்கு உறுதிகண்டிடின்-சொல்லுக்குறுதியாவது பார்க்குமிடத்தில், சத்யவசனம் - உண்மைமொழியேயாம், மெய்க்குறுதி முன்பின்-சரீரத்துக்குறுதி தமையன்தம்பி என்பவராவர், சபைக்கு உறுதி-சபைக்கு உறுதியாவது, வித்வஜநம்-வித்துவசனங்களாவார், வேசையர்க்கு உறுதி-வேசையர்க்கு உறுதியாவது, தேடல்-பணந்தேடுதலேயாம், விரகருக்கு உறுதி-விரகருக்குறுதியாவது, பெண்-பெண்ணவள், மூப்பினுக்கு உறுதி ஊண்-முதுமைப்-பருவத்துக்கு உறுதியாவது உணவேயாம், வீரருக்குஉறுதிதீரம்-வீரருக்கு உறுதியாவது தைரியமாம், செய்க்குஉறுதிநீர்-வயலுக் குறுதியாவது நீராகும், அரும்பார்க்கு உறுதிசெங்கோல்-அரியவுலகத்துக்கு உறுதியாவது செங்கோலாம் செழுபடைக்கு உறுதி வேழம்-செழுமையாகிய படைக்கு உறுதியாவதுயானையாம், செல்வந்தனக்கு உறுதி பிள்ளைகள்-செல்வத்துக்குறுதி பிள்ளைகளேயாவர், நகர்க்குஉறுதி-நகரத்துக்குறுதியாவது, சேர்ந்திடும் சற்சநர்கள் ஆம்-கூடியிருக்கிற நன்மக்களே, மைக்கு உறுதியாகிய-அஞ்சநத்துக்குறுதியாகிய, விழி - கண்களையுடைய, குறமடந்தை-குறப்பெண்ணாகிய வள்ளிநாயகியும், சுரமங்கை-தெய்

யானையும், மருவும்-சேர்கின்ற, தலைவனே-இறைவனே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயலீடு மலைமேவு குமரேசனே, எ-று.

வறுமையிற் சிறுமை.

வறுமைதான் வந்திடிற் றாய்பழுது சொல்லுவாண்
மனையாட்டி சற்று மெண்ணாள்
வாக்கிற் பிறக்கின்ற சொல்லெலாம் பொல்லாத
வசனமாய் வந்து விளையும்
சிறுமையொடு தொலையா விசாரமே யல்லாது
சிந்தையிற் றைரிய மிலை
செய்யசபை தன்னிலே சென்றுவர வெட்கமாஞ்
செல்வரைக் காணி னாணும்
உறுதிபெறு வீரமுங் குன்றிடும் விருந்துவரி
னுயிருடன் செத்த பிணமா
மூலகம் பழித்திடும் பெருமையோர் முன்புசென்
றொருவரொடு செய்தி சொன்னால்
மறுவசன முஞ்சொலார் தன்பினிற் றன்பசிது
வந்தணுகி டாதருளு வாய்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயலீடு
மலைமேவு குமரேசனே. (எஎ)

(இ-ள்.) வறுமைதான்வந்திடில்-(ஒருவனுக்குத்) தரித்திரம் உண்டானால், தாய்பழுதுசொல்லுவாள் - அவனைப் பெற்றதாயாரும்(அவன்மேல்)குற்றங்கூறுவாள், மனையாட்டி-மனைவியானவள் சற்றும்எண்ணாள்-(அவனைச்) சிறிது

ம்மதிக்கமாட்டாள், வாக்கில்பிறக்கின்ற சொல் எலாம்-(அவனது) வாயினின்றுவருகிற சொற்களெல்லாம், பொல்லாதவசனம்ஆய் வந்துவிளையும் - தீங்குவிளைக்கிறசொற்களாய்த்தோன்றி அவ்வாறேபலிக்கும், (அவனுக்கு)சிறுமையொடு தொலையாவிசாரமே அல்லாது - எளிமையும் தீராக்கவலையுமே எப்பொழுதும் உண்டாவதல்லாமல், சிந்தையில் தைரியம்இல்லை - மனத்தில் தைரியமுண்டாவதில்லை, செய்யசபைதனிலேசென்றுவர - நல்லசபையிலே போய்வருவதற்கு, வெட்கம்ஆம் - (அவனுக்கு) வெட்கமுண்டாகும், செல்வரைகாணில்-செல்வமுடையவர்களைக் கண்டால், நாணும் - (அவன்) நாணமடைவான், உறுதிபெறுவீரமும் குன்றிடும் - வலிமைபெற்ற பராக்கிரமமும் (அவனுக்குக்) குறைந்துபோகும், விருந்துவரில்-(அவனிடத்துக்கு) விருந்தாளி வந்தால் உபசரிக்கப்பொருளில்லாமையால் அவன் உயிருடன் செத்தபிணம் ஆம் - உயிரோடிருக்கையிலேயே உயிர்நீங்கின வுடம்புபோலச்செயலழிந்துநிற்பான், உலகம் பழித்திடும்-(அவனை) உலகத்திலுள்ள சனங்களெல்லோரும் இகழ்ந்துபேசுவார்கள் (அவன்) பெருமையோர் முன்புசென்று - செல்வத்திற் பெரியோர்களுடைய முன்னிலையிற்போய், ஒருவரொடுசெய்திசொன்னால்-(அவர்களில்) ஒருத்தருடனே ஒருசெய்தியைக்கூறினால், மறுவசனமும்சொலார்-(அவனுக்குப்) பதிலுத்தரமுஞ் சொல்மாட்டார்கள், துன்பினில்துன்பம்இது வந்து அணுகிடாது - துன்பங்கள் எல்லாவற்றினும் மிக்க துன்பத்தைத்தருவதான இவ்வறுமை (யார்க்கும்) வந்து

சேராதபடி, அருளுவாய் - கருணைசெய்வாய், மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே.

"கல்லானேயானாலுங் கைப்பொருளொன் றுண்டாயின், எல்லாருஞ்சென் றங்கெதிர்கொள்வர்-இல்லானை, இல்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள், செல்லாதவன்வாயிற் சொல்" என்றார் ஒளவையாரும்" மனையாட்டி வீட்டிலிருந்து சம்சாரகாரியங்களை நிர்வகிப்பவள், ஆட்டி-ஆள்பவள்.

தீச்சார்பா னன்மையிழப்பு.

ஆனைதண் ணீரினிழல் பார்த்திடத் தவளைசென்
றங்கே கலக்கி யுவவு
மாயிரம் பேர்கூடி வீடுகட் டிடிலேத
மறைகுறளு முடனே வரும்
ஏனைநற் பெரியோர்கள் போசனஞ் செயுமளவி
லீக்கிடங் கிசைகே டதாம்
மின்பமிகு பசுவிலே கன்றுசென் றூட்டுதற்
கினியகோ னதுத டுக்கும்
சேனைமன் னவரென்ன கருமஞ்செய மிக்கினுஞ்
சிறியோர்க ளாற்குறைபடுஞ்
சிங்கத்தை யும்பெரிய ருஷபத்தை யும்பகைமை
செய்ததொரு நரியல்லவோ
மானையுந் திகழ்தெய்வ யானையுந் தழுவுமணி
மார்பனே யருளாளனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே (எஅ)

(இ-ள்.) ஆனை-யானையானது, தண்ணீரில்-நீரிலே,நிழல் பார்த்திட-தனதுநிழலைப்பாரா நிற்க, தவளை-தவளையான து, அங்கேசென்று-அவ்விடத்திற்போய்,கலக்கி உலவும்-(அந்தநீரை) கலக்கி உலாவுக்கொண்டிருக்கும், ஆயிரம்பே ர்கூடி வீடுகட்டிடின்-ஆயிரம்பேர் சேர்ந்து வீடுகட்டினால், ஏதம் அறை-(அதற்கொரு) குற்றம்சொல்லுகிற, குறளு ம்-குறளனும், உடனேவரும்-உடனேவருவான், ஏனைநல் பெரியோர்கள்-மற்றைப் பெரியோர்கள்,போசனம்செயு மளவில் - போசனம்செய்யுங்காலத்தில், ஈகிடந்து(அந்த) போசனத்தில் ஈவிழுந்து, இசைகேடதாகும்-(அவரது) பெ ருமைக்குக்கெடுதிவிளைப்பதாகும், இன்பமிகு பசுவிலே-இன்பமிகுந்தபசுவி னிடத்திலே, கன்றுசென்று உண்ணு தற்கு-கன்றுபோய் பாலுண்பதை, இனியகோன் அது தடுக்கும்-இனிய இடையன் அதைத்தடுப்பான், சேனை மன்னவர் - சேனையையுடைய அரசர்கள், என்னகருமம் நியமிக்கினும்-என்னகாரியத்தை நியமித்தாலும், சிறியோ ர்களால் - சிறியவர்களால், குறைபடும் (அந்தக்காரியம்) குறைவுபடும், சிங்கத்தையும் பெரியருஷபத்தையும்-சிங் கத்தையும் பெரிய எருதையும், ஒருநரியல்லவோ பகை மைசெய்தது - ஒருநரியல்லவா பகையுண்டாக்கினது, மா னையும்-மான்மகளாகிய வள்ளிநாயகியையும், திகழ்தெய் வயானையும்-விளங்குகிறதெய்வ யானையையும், தழுவு-தழு வுகிற, மணிமார்பனே - அழகிய மார்பையுடையவனே, அருளாளனே-அருளுடையோனே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

குறள்-கோட்சொல்லுவோன். இசைகேடு - வாந்தி செய்தல் முதலாயின.

இடையூறுற்றும் பயன்படாதவை.

ஆறுதண் ணீர்வற்றி விட்டாலு மூற்றுநீ
ரமுதபா னங்கொ டுக்கு
மாதவனை யொருபாதி கட்செவி மறைத்தாலு
மப்போது முதவி செய்வன்
கூறுமதி தேய்பிறைய தாகவே குறையினுங்
குவலயத் திருள்கெ டுக்குங்
கொல்லைதான் சாவிபோய் விட்டாலு மங்குவரு
குருவிக்கு மேய்ச்ச லுண்டு
வீறுட னுதாரிதான் மிடியான போதினிலு
மிகநாடி வருப வர்க்கு
வேறுவகை யில்லையென் றுரையாதி யன்றளவு
வியந்துள மகிழ்ந்து தவுவான்
மாறுபடு சூரசங் காரகம் பீரனே
வடிவே லணிந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (எக)

(இ-ள்.) ஆறுதண்ணீர் வற்றிவிட்டாலும்- ஆறானது தண்ணீர்வற்றிப்போனாலும், ஊற்றுநீர்-ஊற்றுநீரானது அமுதபானம்கொடுக்கும் - அமிர்தபானத்தையுதவும், ஆதவனை-

சூரியனை, ஒருபாதி-ஒருஅரைப்பங்கு, கட்செவி மறைத்தாலும்-பாம்பு மறைத்துவிட்டாலும், அப்போதும்-அப்பொழுதும், உதவிசெய்வன்-உலகத்திற் குதவிசெய்வான், கூறும்மதி-சொல்லப்பட்டசந்திரன், தேய்பிறையதாகக் குறையினும் - தேய்பிறையாகக் குறைந்தாலும், குவலயத்து இருள்சிதைக்கும் - உலகத்திலுள்ள இருளைநீக்கும், கொல்லைசாவிபோய்விட்டாலும்-கொல்லையானது சாவியாகப்போய்விட்டாலும், அங்குவருகுருவிக்கு-அவ்விடத்து வருகின்ற குருவிகளுக்கு, மேய்ச்சல்உண்டு-இரையுண்டு, வீறுடன்-மேன்மையோடு,உதாரி-உதாரகுணமுள்ளவன், தான்மிடியானபோதிலும்-தான்வறியனானகாலத்தும்,மிகநாடிவருபவர்க்கு - மிகவுந் தன்னைத் தேடிவருபவர்க்கு, வேறுவகை இல்லைஎன்று உரையாது - வேறுவழி யில்லையென்று சொல்லாது, இயன்றளவு-தன்னாலியன்றளவு,வியந்து - விரும்பி, உள்ளம்மகிழ்ந்து - மனமகிழ்ந்து, உதவுவான்-கொடுப்பான், மாறுபடு-மாறுபட்ட, சூரசங்கார-சூரனைச்சங்கரித்தவனே, கம்பீரனே - பெருமையுடையவனே, வடிவேல் அணிந்தமுருகா - வடிவேலைத்தரித்தமுருகக்கடவுளே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

அமுதபானம்-குடிநீர். கட்செவி-பாம்பு (இராகு கேதுக்கள்,) குருவி-சிறுபறவைகள். உதாரி-கொடையாளி-மிடி-தரித்திரம். மாறுபடுதல்-பகைத்தல்.

இன்னவர்க்கிது வில்லையெனல்.

சார்பிலா தவருக்கு நிலையேது முதலிலா
  தவருக் கிலாப மேது.

தையிலா தவர்தமக் குறவேது பணமிலா
  தார்க்கேது வேசை யுறவு
ஊரிலா தவர்தமக் கரசேது பசிவேளை
  யுண்டிடார்க் குறுதி நிலையே
துண்மையில் லாதவர்க் கறமேது முயல்விலார்க்
  குறுவதொரு செல்வ மேது
சோர்விலா தவருக்கு மற்றுமொரு பயமேது
  சுகமிலார்க் காசை யேது
துர்க்குண மிலாதவர்க் கெதிராளி யேதிடர்செய்
  துஷ்டர்க் கிரக்க மேது
மார்புருவ வாலிமே லஸ்திரம் விடுத்தநெடு
  மான் மருக னை முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
  மலைமேவு குமரேச னே. (அ0)

(இ-ள்.) சார்புஇல்லாதவருக்கு-ஒரு ஆதாரவில்லாதவர்களுக்கு, நிலைஏது-நிலைமையேது, முதல் இல்லாதவருக்கு-முதற்பொருளில்லாதவர்களுக்கு, வேசை உறவுஏது-வேசையராதநட்பேது, ஊர் இல்லாதவர்தமக்கு-ஊரில்லாதவர்களுக்கு, அரசு ஏது-அரசாட்சியேது, பசிவேளைஉண்டிடார்க்கு-பசிப்பொழுதில் உண்ணுதவர்களுக்கு, உறுதிநிலையேது-திடமானநிலையேது,உண்மைஇல்லாதவர்க்கு-மெய்ம்மை இல்லாதவர்களுக்கு, அறம்ஏது-தருமமேது, முயல்வு இல்லார்க்கு-முயற்சி யில்லாதவர்களுக்கு, உறுவதொருசெல்வம்ஏது-உண்டாவதாகிய ஒருசெல்வமேது,சோர்

வு இல்லாதவருக்கு-மனத்தளர்ச்சியில்லாதவர்க்கு, மற்றும் ஒருபயம்ஏது-வேறும் ஒருபயமேது, சுகம்இல்லார்க்கு ஆசைஏது-சுகமற்றவர்களுக்கு ஆசையேது, துர்க்குணம் இல்லாதவர்க்கு-கெட்டகுண மில்லாதவர்களுக்கு, எதிராளி ஏது-பகையாளியேது, இடர்செய்துஷ்டர்க்கு-(பிறர்க்கு) துன்பத்தைச்செய்கின்ற துஷ்டர்களுக்கு, இரக்கம் ஏது-தயைஏது, மார்புஉருவ-மார்பில் உருவியோடும்படி, வாலிமேல்-வாலியின்மீது அஸ்திரம் விடுத்த-அம்புஎய்த, நெடுமால்-திருமாலுக்கு, மருகன்ஆன-மருமகனாகிய, முருகா-முருகக்கடவுளே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

சார்பு-பற்றுக்கோடு. முதல்-முதற்பொருள். அரசு-அரசாட்சி. சோர்வு-தளர்வு வாலி-ஒருவானரசிரேஷ்டன்.

இதினுமிது நன்றெனல்.

பஞ்சரித் தருமையறி யார்பொருளை யெய்தலிற்
பலர்மனைப் பிச்சை நன்று
பரிவாக வுபசார மில்லா விருந்தினிற்
பட்டினி யிருக்கை நன்று
தஞ்சமொரு முயலையடு வென்றிதனில் யானையொடு
சமர்செய்து தோற்ற னன்று
சரசகுண மில்லாத பெண்களைச் சேர்தலிற்
சன்னியா சித்த னன்று

அஞ்சலார் தங்களொடு நட்பா யிருப்பதனி
 லரவினொடு பழகு வதுநன்
றந்தணர்க் காபத்தி லுதவா திருப்பதனி
 லாருயிர் விடுத்த னன்று
வஞ்சக ருடன்கூடி வாழ்தலிற் றனியே
 வருந்திடுஞ் சிறுமை நன்று
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேசனே. (௮௧)

(இ-ள்.) பஞ்சரித்து-கெஞ்சி, அருமை அறியார்பொருளை-தமது அருமையையறியாதவருடையபொருளை, எய்தலின்-பெறுதலினும், பலர்மனை-பலபேர்வீட்டிற்சென்றுஏற்கிற, பிச்சை-பிச்சையே, நன்று-நன்மையாம், பரிவாக-அன்பாக, உபசாரம் இல்லாவிருந்தினில்-உபசாரமில்லாத விருந்துண்பதைப்பார்க்கிலும், பட்டினியிருக்கை நன்று-பட்டினியாயிருத்தலே நன்மையாகும், தஞ்சம்ஒருமுயலை அடுவென்றிதனில்-பற்றுள்ள ஒருமுயலைக்கொன்ற வெற்றியைப்பார்க்கிலும், யானையொடு-யானையுடனே, சமர்செய்துதோற்றல்-போர்செய்து தோற்குதலே, நன்று - நன்மையாகும், சரசகுணம் இல்லாதபெண்களைச் சேர்தலின்-சரசகுணமில்லாத பெண்களைச்சேர்தலைப்பார்க்கிலும், சந்நியாசித்தல்-துறவடைதலே, நன்றுநன்மையாம், அஞ்சலார் தங்களொடு-பகைவருடனே, நட்பாயிருப்பதனின்-சிநேகமாயிருப்பதைப்பார்க்கிலும், அரவினொடு பழகுவது-பாம்போடுபழகுவது, நன்று - நன்மையாம், அந்தணர்க்கு-

வேதியர்க்கு, ஆபத்தில்-ஆபத்காலத்தில், உதவாதிருப்ப தனின்-உதவிசெய்யாதிருப்பதைப்பார்க்கிலும், ஆர் உயிர்விடுத்தல்-அரியவுயிரைவிடுவதே, நன்று - நன்மையாம், வஞ்சகருடன் கூடிவாழ்தலின்-வஞ்சகரோடுசேர்ந்து வாழ்வதைப்பார்க்கிலும், தனியே-தனியாகவேயிருந்து,வருந்திடும் சிறுமை-வருந்துகிற சிறுமையே, நன்று-நன்மையாம், மயிலேறி விளையாடு குகனேபுல் வயலீடு மலைமேவு குமரேசனே, எ-று.

பஞ்சரித்தல்-கெஞ்சுதல். பட்டினியிருக்கை-உண்ணாதிருத்தல். சரசகுணம் நயகுணம்.

நிலையாதவை.

கொற்றவர்கள் ராணுவமு மாறுநேராகிய
குளங்களும் தாசி யுறவுங்
குணமிலார் நேசமும் பாம்பொடு பழக்கமுங்
குலவுநீர் விளையாடலும்
பற்றலார் தமதிடை வருந்துவிசு வாசமும்
பழையதா யாதி நிணறும்
பரதார மாதரது போகமும் பெருகிவரு
பாங்கான வாற்று வரவும்
நற்றுமொரு துர்ப்புத்தி கேட்கின்ற பேருறவு
நல்லமத யானை நட்பும்
நாவிநல் லுறவுமொரு நாள்போ லிராதிவைக
ணம்பப் படாது கண்டாய்

மற்றுமொரு துணையில்லை நீதுணை யெனப்பரவும்
வானவர்கள் சிறைமீட்டவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (அஉ)

(இ-ள்.) கொற்றவர்கள் ராணுவமும்-அரசரதுபடைகளும், ஆறுநேராகிய குளங்களும்-ஆற்றுக்கெதிராகியகுளங்களும், தாசிவுறவும்-வேசையின் உறவும், குணம் இல்லார்நேசமும்-குணமில்லாதவர்களுடைய நட்பும், பாம்பொடுபழக்கமும்-பாம்புடனே பழகுதலும், குலவுநீர் விளையாடலும் - பெருகியநீரில் விளையாடுதலும், பற்றலார் தமதிடைவருந்துவிசுவாசமும் - பகைவர் தம்மிடத்தில் வருந்துகிற விசுவாசமும், பழையதாயாதியின் அன்பும்,—பரதாரம்-பிறன்மனைவியராகிய, மாதரதுபோகமும்-பெண்களுடைய போகமும். பெருகிவரு - நீர்பெருகிவருகிற, பாங்கான-அழகான, ஆற்றுவரவும் - ஆற்றுப்பெருக்கும், நற்றும்-பற்றுகிற, ஒருதுர்ப்புத்தி கேட்கின்றபேர் உறவும்-ஒரு கெட்டபுத்தியைக் கேட்கிறவர்களுடைய உறவும், நல்ல மதயானைநட்பும்-நல்லமதயானையின் சிநேகமும், நாவிநல் உறவும்-நாவியின்நல்ல சிநேகமும், (ஆகிய) இவைகள்-இவையாவும். ஒருநாள்போலிரா-ஒருநாள்போ லிருக்கமாட்டா, (ஆதலால்) நம்பப்படாது-நம்பவொண்ணாது மற்றும் ஒருதுணையில்லை, நீதுணையென-நீயேதுணையென்று, பரவும்-தோத்திரம்பண்ணின, வானவர்கள்-தேவர்க

ளுடைய, சிறைமீட்டவா-சிறைவிடுவித்தவனே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே.

குணமிலார்-நற்குணமில்லாதவர். நிணறு - அன்பு. நாவி-கஸ்தூரிமிருகம்.

நற்புலவர் தீப்புலவர்செயல்.

மிக்கான சோலையிற் குயில்சென்று மாங்கனி
விருப்பமொடு தேடி நாடும்
மிடைகருங் காகங்க ளொக்கனி யிருந்தாலும்
வேப்பங் கனிக்கு நாடும்
எக்காலும் வரிவண்டு பங்கேரு கத்தினி
லிருக்கின்ற தேனை நாடு
மெத்தனை சுகந்தவகை யுற்றாலு முருள்வண்
டினந்துர் மலத்தை நாடும்
தக்கோர் பொருட்சுவை நயங்களெங் கேயென்று
தாம்பார்த் துகந்து கொள்வார்
தாழ்வான வன்கண்ணர் குற்றமெங் கேயென்று
தமிழிலா ராய்வர் கண்டாய்
மைக்காவி விழிமாது தெய்வானை யுங்குறவர்
வள்ளியுந் தழுவு தலைவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (அங)

(இ-ள்.) மிக்கானசோலையில்-மேலானசோலையில், குயில்சென்று-குயில்போய், மாங்கனி-மாம்பழத்தை, விருப்பமொடு தேடிநாடும் - விருப்பத்துடன் தேடியாராயும்,

மிடை-நெருங்கின, கருகாகங்கள்-கரிய காக்கைகள், எக்கனியிருந்தாலும்-எந்தப்பழமிருந்தாலும், வேப்பங்கனிக்குநாடும் - வேப்பம்பழத்தையேதேடும், எக்காலும்வரிவண்டு - எந்தக்காலத்திலும் வரிவண்டுகள், பங்கேருகத்தினில் இருக்கின்ற - தாமரைப்பூவிலிருக்கிற, தேனைநாடும்-தேனையேதேடும், எத்தனைசுகந்தவகை உற்றாலும் - எத்தனைசுகந்தவர்க்கங்க ளிருந்தாலும், உருள்வண்டு இனம்-உருள்வண்டின்கூட்டம், துர்மலத்தைநாடும்-கெட்ட மலத்தையேதேடும், தக்கோர்-பெரியோர், பொருள்-பொருள்களின், சுவைநயங்கள் எங்கேயென்று-சுவைநயங்களெங்கேயென்று, தாம்பார்த்து - தாம்கண்டறிந்து, உகந்துகொள்வார் - சந்தோஷித்துக்கொள்வார்கள், தாழ்வான வன்கண்ணர்-இழிவாகிய வன்கண்ணர்கள், குற்றம் எங்கேயென-குற்றமெங்கே யிருக்கிறதென்று, தமிழில் ஆராய்வர் - தமிழ்ப்பாடல்களில் ஆராய்வார்கள், மைக்காவி-கருங்குவளைமலர்போன்ற, விழி-கண்களையுடைய, மாது-பெண்ணாகிய, தெய்வானையும் - தெய்வயானையும், குறவர் வள்ளியும்-குறவர் பெண்ணாகிய வள்ளிநாயகியும், தழுவு-தழுவுதற்குரிய, தலைவா - தலைவனே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

மிடைதல்-நெருங்குதல். வரிவண்டு - இராகம்பாடும் வண்டு, சுகந்தம்-நல்லமணம் வன்கண்ணர்-மூர்க்கர்.

தாழ்தற் பெருமை.

வேங்கைகள் பதுங்குதலு மாமுகி லொதுங்குதலும்
விரிசிலை குனிந் திடுதலும்

மேடம தகன்றிடலும் யானைக ளொடுங்குதலும்
வெள்விடைக டுள்ளி விழலும்
மூங்கில்கள் வணங்குதலு மேலவ ரிணங்குதலு
முனிவர்க ணயந்து கொளலும்
முதிர்படை யொதுங்குதலும் வினைஞர்க ளடங்குதலு
முதலினர் பயந்திடுதலும்
ஆங்கரவு சாய்குதலு மகிழ்மல ருலர்ந்திடலு
மாயர்குழல் சூடு படலு
மம்புவியி லிவைகாரி யங்களுக் கல்லாம
லதனு லிளைப்பு வருமோ
மாங்கனிக் காவரணை வலமது புரிந்துவளர்
மதகரிக் கிளைய முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (அச)

(இ-ள்.) (ஒவ்வொருசமயத்தில்)வேங்கைகள் பதுங்குதலும்-புலிகள்பதுங்கியிருத்தலும், மாமுகில்ஒதுங்குதலும்-பெரியமேகங்கள் விலகிச்செல்லுதலும், விரிசிலைகுனிந்திடுதலும்-பெரியவிற்கள்வளைந்திடுதலும், மேடம் அது அகன்றிடலும்-ஆடுகள்விலகிப் பின்னேசெல்லுதலும், யானைகள் ஒடுங்குதலும்-யானைகள் அடங்கியிருத்தலும், வெள்விடைகள் துள்ளிவிழலும் - வெண்மையான எருதுகள் துள்ளிவிழுந்திடுதலும், மூங்கில்கள்வளைதலும், மேலவர் இணங்குதலும் (வல்லமையினுற்) பெரியோர் அதிற்சிறியரோடு சந்தியாதற்கு இசைதலும், முனிவர்கள் நயந்து

கொளலும்-(கோபங்கொண்டு சபிக்கத்திறமுள்ள) முனி வர்கள் (அங்ஙனஞ் செய்யாது) அன்புகொண்டு நடத்த லும், முதிர்படை ஒதுங்குதலும்-வலிமை மிக்கசேனைகள் பின்வாங்குதலும், வினைஞர்கள் அடங்குதலும்-தொழில் திறமுள்ளவர்கள் அடங்கியிருத்தலும், முதலினர் பயந்திடு தலும்-தலைமைபெற்றவர் (தமக்குக் கீழ்ப்பட்டவர்க்கு) அ ஞ்சுதலும், ஆம் கரவு சாய்குதலும்-பெரியமுதலைகள் தலை சாய்ந்திருத்தலும், மகிழமலர் உலர்ந்திடலும் - மகிழம்பூ உலர்தலும், ஆயர்குழல் சூடுபடலும் - இடையர்வாயில் வைத்து ஊதும்வேய்ங்குழல் அனற்சூடு கொள்ளுதலும், (ஆகிய) இவை - இவைகள், காரியங்களுக்கு அல்லாமல் பின்பு ஒருபெருங்காரியத்தைக் குறித்தேயல்லாமல், அம் புவியில்-அழகியபூமியில், அதனால்-இங்ஙனம் மெலிதலால் இளைப்புவருமோ - (அவற்றிற்கு) ஒருகுறை உண்டாகு குமோ (உண்டாகாது என்றபடி,) மாங்கனிக்கு ஆ-மாம் பழத்தைப் பெறும்பொருட்டாக, அரனை - சிவபிரானை, வலம் அதுபுரிந்து-பிரதக்ஷணஞ்செய்து, வளர்-வளர்ந்த, மதகரிக்கு-மதம்பிடித்தயானையின் வடிவங்கொண்ட விநா யகமூர்த்திக்கு, இளைய-தம்பியான, முருகா - முருகக்கட வுளே, மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

புலிபதுங்குதல்-உடனே பாய்தற்கு, முகில் ஒதுங்கு தல், மழைபெய்தற்கு, வில்வளைதல்-உடனேபாய்ந்துமோ துதற்கு, யானை ஒடுங்குதல்-சமயமறிந்து கொல்லுதற்கு, எருது துள்ளிவிழுதல் - பின்பு எழுந்து ஊக்கங்கொண்டு

தொழில்செய்தற்கு மூங்கில்வளைதல்-பல்லக்குக்கணைமுத
லியனவாகப் பயன்படுதற்கு, மேலோர்கீழோரோடு சந்தி
க்கு இசைதல்-பின்புசமயத்தில் அவரை வெல்லுதற்கும்,
தற்காலத்தில் பெருமைபெறுதற்கும் முனிவர்கள் நயந்து
கொள்ளுதல்-தவவலிமைகுன்றாமல் பெருமை யடைதற்கு
வலிமைமிக்க சேனைபின்னிடுதல்-சமயமறிந்து முன்னிட்டு
பகைவெல்லுதற்கு தொழில் திறமுடையோர் அடங்குத
ல்-தங்கள்திறத்தை தொழிலிற்காட்டி மேன்மைபெறுதற்
கு. தலைவர்கள் கீழ்பட்டவர்க்கு அஞ்சிறைப்போல்-காட்டு
தல்-அவர்களை யாராய்தற்கு. முதலைதலைசாய்ந்திருத்தல்-
தனக்கு இரையாகும் பிராணியைத் தவறாது பற்றுதற்கு
மகிழம்பூ உலர்தல்-மிகுமணந்தருதற்கு, வேய்ங்குழல் சுடு
படுதல் இன்னிசைதருதற்கு. ஆங்கு அரவு எனப்பிரித்து
ஆங்கு என்பதை அசையாகக்கொண்டு அரவுசாய்தல் எ
ன்பதற்கு-பாம்பு தலைசாய்தல் என்றும்பொருள்கொள்ள
லாம் பாம்புதலைசாய்தல்-பின்பு படமெடுத்துக்கடித்தற்கு
ஒருகாலத்தில் சிவபிரான் நாரதமுனிவராற் கொணர்ந்து
கொடுக்கப்பட்ட திவ்யமான ஒருமாம்பழத்தைக் கையில்
வைத்துக்கொண் டிருக்கும்பொழுது, அதுகண்ட விநாய
கரும் சுப்பிரமணியரும் அக்கனியைத் தாம்தாம் பெறவே
ண்டும் என்னுங்கருத்தினராய் 'எனக்கு அதுகொடுக்க'
என்று ஒருங்குவேண்ட, சிவபிரான் விளையாட்டாக அக்
குமாரர் இருவரையுநோக்கி ;'உங்களில் உலகத்தை வல
ஞ்செய்து முந்திவருபவனுக்கு இதுகொடுப்பேன்' என்று
கூறியவளவிலே, முருகக்கடவுள் வெகு விரைவாக மயில்

வாகனத்தின்மீது ஏறிப் பூமிப்பிரதக்ஷணஞ் செய்தற்குச் செல்ல, அவர்வருமுன்னமே, விநாயகர் தந்திரமாக, பிரபஞ்சசொரூபியாயிருக்கிற அச்சிவபிரானையே ஒருமுறை வலம்வந்து 'நான் லோகப்பிரதக்ஷணஞ்செய்து முதலில் வந்துவிட்டேன்' என்றுகூறி மெய்ப்பித்து அக்கனியைப் பெற்றுக்களித்தனர் என்பது வரலாறு இப்பழம், நாரத முனிவர் பிரமதேவனை இசைபாடிக் களிப்பித்து அத்தேவனிடத்திலின்று வெகுமதியாகப்பெற்றது. மாதுளம் பழமென்று சிலநூல்கள் கூறும்.

தெய்வச்செயல்.

சோடாய் மரத்திற் புறாவிரண் டிருந்திடத்
துறவுகண் டேவே டுவன்
றோலாம லவையெய்ய வேண்டுமென் றொருகணை
தொடுத்துவில் வாங்கி நிற்க
ஊடாடி மேலே யெழும்பிடி லடிப்பதற்
குலவுரா சாளி கூட
வுயரப் பறந்துகொண் டேதிரிய வப்போ
துதைத்தசிலை வேட ணடியில்
சேடாக வல்விடந் தீண்டவே யவன்விழச்
சிலையிற் றொடுத்த வாளி
சென்றிரா சாளிமெய் தைத்துவிழ வவ்விரு
சிறைப்புறா வாழ்ந்த வன்றோ
வாடாம லிவையெலாஞ் சிவன்செயல்க ளல்லாதுன்
மனச்செயலி னாலும் வருமோ

மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேச னே. (அரு)

(இ-ள்.) சோடாய்-இணையாகி,மரத்தில்-ஒருமரத்திலே, புறவிரண்டு இருந்திட-இரண்டுபுறுக்களிருக்க, வேடுவன் துறவுகண்டு-ஒருவேடன் அவற்றின்உளவைக்கண்டு,அவை அவற்றை, தோலாமல்-தவறுமல், எய்யவேண்டுமென்று-அம்புஎய்யவேண்டுமென்று, ஒருகணைதொடுத்து-ஒருஅம்புதொடுத்து, வில்வாங்கிநிற்க-வில்வளைத்துக்கொண்டுநிற்க ஊடாடிமேலெழும்பிடில்-ஊடாடிமேலேபறக்குமானுல், அடிப்பதற்கு-அடித்துக்கொண்டுபோவதற்கு, உலவு-உலாவுகின்ற, ராஜாளிகூட-ராஜாளியுங்கூட, உயரபறந்து கொண்டேதிரிய - மேலே பறந்துகொண்டேதிரிய, அப்போது-அந்தச்சமயத்தில், உதைத்த சிலைவேடன் அடியில்-வில்லையுதைத்து உந்தின வேடனது காலில்,சேடு ஆக-மிகுதியாக, வல்விடம்தீண்டவே-வலியவிஷம்தீண்ட, அவன் விழ-அந்தவேடன் (பூமியில்) வீழ்ந்துவிட, சிலையில்தொடுத்தவாளி-வில்லிற்றொடுத்தஅம்பு, சென்று இராசாளிமெய்தைத்துவிழ-போய் இராசாளியினுடைய உடம்பில்தைத்து அதுகீழேவிழ, அ-அந்த, சிறைஇருபுறு-சிறைகளையுடைய இரண்டுபுறுக்களும், வாழ்ந்தஅன்றோ - வாழ்ந்தனவல்லவோ, வாடாமல்-சோராமல், இவைஎலாம் - இவைகள்யாவும், சிவன்செயல்கள் அல்லாது - சிவன்செய்கைகள் அல்லாமல், மனச்செயலினும் வருவோ-ஒருவனதுமனேசங்கல்பத்தாலும் உண்டாகுமோ, மயிலேறி விளையாடு குகனேபுல்வயனீடு மலைமேவு குமரேசனே. எ-று.

ஜோடு-ஜதை. கணை-அம்பு, வில்வாங்கல்-வில்வளைத்தல். ராசாளி-பறவைப்புலி, விடந்தீண்டுதல்-பாம்புகடித்தல். சிலை-வில், வாளி-அம்பு.

## பாடலியல்பு.

எழுத்தசைகள் சீர்தளைக ளடிதொடைகள் சிதையா
திருக்கவே வேண்டு மப்பா
லீரைம் பொருத்தமொடு மதுரமாய்ப் பளபளப்
பினியசொற் கமைய வேண்டும்
அழுத்தமிகு குறளினுக் கொப்பாக வேபொரு
ளடக்கமு மிருக்க வேண்டு
மன்பான பாவின மிசைந்துவரல் வேண்டுமு
னலங்கார முற்ற துறையில்
பழுத்துள முவந்தோசை யுற்றுவரல் வேண்டும்
படிக்குமிசை கூடல் வேண்டும்
பாங்காக வின்னவை பொருந்திடச் சொற்கவிதை
பாடிச் சிறப்பென் பர்காண்
மழுத்தினஞ் செங்கைதனில் வைத்தகங் காளனருள்
மைந்தனென வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (அசு)

(இ-ள்.) எழுத்து-எழுத்துக்கள், அடிதொடைகள்-அடிதொடைகள், (யாவும்) சிதையாதிருக்கவேவேண்டும்-கெடாமல் இருக்கவேவேண்டும், அப்பால்-அதற்குமேல்,ஈர்

ஐம்பொருத்தம் ஒடு-பத்துப்பொருத்தத்துடன், மதுரமா ய்-இனிமையாய், பளபளப்பு-பளபளப்பும், இனியசொற் கு-இனியசொற்களுக்கு அமையவேண்டும்-அமைந்திருக்க வேண்டும், அழுத்தமிகு - அழுத்தமிகுந்த, குறளினுக்கு ஒப்பாகவே-குறட்செய்யுட்கு நிகராகவே, பொருள் அட க்கமும் இருக்கவேண்டும்-பொருள் அடக்கமும் இருக்க வேண்டும், அன்பான-அன்போடுகூடின, பாஇனம்இசை ந்துவரல்வேண்டும்-பாவும் பாவினமும் பொருந்திவரல்வே ண்டும், முன்-முன்னே, அலங்காரம் உற்றதுறையில் - அல ங்காரம் பொருந்தியவழியில், பழுத்து-முதிர்ந்து, உள்ளம் உவந்து-மனமகிழ்ந்து ஓசை உற்றுவரல்வேண்டும்-நல்லோ சையும் பொருந்திவரல்வேண்டும், படிக்கும் இசைகூடல் வேண்டும்-படித்தற்குரிய இராகமும் பொருந்திட இவை கள் அமையும்படி, சொல்-சொல்லப்பட்டகவிதைபாடின்- கவிபாடினால், சிறப்பு என்பர் - சிறப்பென்றுசொல்லுவர் (பெரியோர்) தினம்-நாள்தோறும், செங்கைதனில் - செ வந்தகையினில், மழுவைத்த-மழுவையேந்திய, கங்காளன்- கங்காளனாகிய சிவபெருமான், அருள் - ஈன்ற, மைந்தன் என-புதல்வனென்று சொல்லும்படி, வந்த - அவதரித்த, முருகா-முருகக்கடவுளே, மயிலேறிவிளையாடு குகனே புல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

எழுத்து - அகரமுதலாகிய முப்பது எழுத்துக்கள். அசைகள்-நேரசைநிரையசைகள். சீர்-ஆசிரியவுரிச்சீர்மு

தலியன. தளை-ஆசிரியத்தளை முதலியன அடி - குறளடி முதலியன. தொடை-எதுகைத் தொடைமுதலியன. ஈரைம்பொருத்தம் பாலப்பொருத்தம் முதலியன. பளபளப்பு-தெளிவு. அழுத்தம்-பொருளாழம், பொருளடக்கம்-பொருளடங்கி யிருத்தல். பா-வெண்பாமுதலியன. பாவினம்-துறைதாழிசைமுதலியன அலங்காரம்-உவமைமுதலியன.

## விபூதி வாங்குமுறைமை.

பரிதனி லிருந்துமியல் சிவிகையி லிருந்துமுயர்
பலகையி லிருந்து மிகவே
பூங்கான வம்பலந் தனிலே யிருந்தும்
பருத்ததிண் ணையிலி ருந்தும்
தெரிவொடு கொடுப்பவர்கள் கீழ்நிற்க மேனின்று
திருநீறு வாங்கி யிடினுஞ்
செங்கையொன் றாலும்விரன் மூன்றாலும் வாங்கினுந்
திகழ்தம் பலத்தி னோடும்
அரியதொரு பாதையி னடக்கின்ற போதினு
மசுத்தநில மான வதினு
மங்கே தரிக்கினுந் தந்திடிற் றள்ளினு
மவர்க்குநர கென்பர் கண்டாய்
வரிவிழி மடந்தைகுற வள்ளிநா யகிதனை
மணந்துமகிழ் சகநா தனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (அஎ)

(இ-ள்.) பரிதனில்இருந்தும்-குதிரைமேலிருந்தும், இயல் சிவிகையில்இருந்தும் - பொருந்திய பல்லக்குமேலிருந்தும், உயர்பலகையில் இருந்தும்-உயர்ந்த பலகையின்மேலிருந்தும், மிகபாங்கான-மிகவும் அழகான, அம்பலம்தனிலே இருந்தும்-பொதுவிடத்திருந்தும், பருத்ததிண்ணையில் இருந்தும்-பெரியதிண்ணையின்மேலிருந்தும், தெரிவொடு கொடுப்பவர்கள்-விவேகத்தோடு கொடுக்கின்றவர்கள், கீழ்நிற்க-கீழேநிற்க, மேல்நின்று-மேலேநின்று, திருநீறு வாங்கி இடினும்-விபூதிவாங்கினாலும், செங்கைஒன்றாலும்-செவந்த ஒற்றைக்கையினாலும், விரல் மூன்றாலும்-மூன்று விரலாலும், வாங்கினும்-வாங்கினாலும், திகழ்தம்பலத்தோடும்-விளங்குகின்ற தம்பலத்தோடும், அரியது ஒருபாதையில்-அரிதாகிய ஒருவழியில், நடக்கின்றபோதிலும்-நடக்கின்றகாலத்திலும், அசுத்தநிலம்ஆன அதிலும் - அசுத்தமானநிலத்திலும், அங்கேதரிக்கினும்-வாங்கின அவ்விடத்திலேயே தரித்துக்கொண்டாலும், தந்திடின் தள்ளினும்-(பெரியோர்) கொடுக்கத் தடுத்துவிட்டாலும், அவர்க்கு-அத்தன்மையோர்க்கு, நரகு என்பர்-நரகம் சித்திக்குமென்றுசொல்லுவர் (பெரியோர்), வரிவிழி-ரேகைகளையுடைய கண்களுள்ள, மடந்தை-பெண்ணாகிய, குறவள்ளிநாயகிதனை-குறவள்ளிநாயகியை, மணந்து-மணஞ்செய்து, மகிழ்-மகிழ்ந்த, சகநாதனே-லோகநாதனே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

குதிரை முதலியவற்றின்மேலிருந்து விபூதிவாங்குவோர்க்கும் வாங்கின இடத்திலேயே தரிப்போர்க்கும்

பெரியோர் கொடுத்தால் தடுப்பவர்க்கும் நரகபிராப்தி யுண்டென்பது இச்செயுட்கருத்து. பரி-குதிரை. சிவிகை-பல்லக்கு. உயர்பலகை-உயர்ந்தபீடம். தம்பலம்-மென்ற வெத்திலைப்பாக்கு. பாதை-வழி.

## விபூதி தரிக்குமுறைமை.

பத்தியொடு சிவசிவா வென்று திரு நீற்றைப்
  பரிந்துகை யாலெ டுத்துப்
 பாரினில் விழாதபடி யண்ணாந்து செவியொடு
  பருத்தபுய மீதி லொழுக
நித்தமூ விரல்களா னெற்றியி னழுந்தவுற
  நினைவாய்த் தரிப்ப வர்க்கு
 நீடுவினை யணுகாது தேகபரி சுத்தமா
  நீங்காம னிமல னங்கே
சத்தியொடு நித்தம்வி ளையாடுவன் முகத்திலே
  தாண்டவஞ் செய்யுந் திரு
 சஞ்சலம் வராதுபர கதியுதவு மிவரையே
  சத்தியுஞ் சிவனென் னலாம்
மத்தினிய மேருவென வைத்தமு தினைக்கடையு
  மான்மருக னை முருகா
 மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
  மலைமேவு குமரேசனே. (அஅ)

(இ-ள்.) பத்தியொடு-பத்தியுடனே, சிவசிவாஎன்று-சிவசிவாவென்று உச்சரித்து, திருநீற்றை-விபூதியை, பரிந்து

கையால்எடுத்து - விரும்பிக்கையினல் அள்ளி, பாரினில் விழாதபடி-பூமியில் சிந்தாதபடி, அண்ணாந்து - நிமிர்ந்து, செவியொடு பருத்தபுயமீதில் ஒழுக-காதுகளோடு பெருத்ததோள்களின் மீதும்சிந்தும்படி, நித்தம்-நாள்தோறும், மூவிரல்களால்-மூன்றுவிரல்களால், நெற்றியில் அழுந்தல் உற-நெற்றியில் அழுந்தும்படி, நினைவாய் தரிப்பவர்க்கு-மறவாதுதரிப்பவர்க்கு,நீடுவினை அணுகாது-பெரியபாவம் சேராது,தேகபரிசுத்தம்ஆம்-சரீரசுத்தமுண்டாகும், நிமலன்-சிவபெருமான், அங்கே-அவ்விடத்தே, நித்தம்-நாள் தோறும்,நீங்காமல்-பிரியாமல், சத்தியொடுவிளையாடுவன் சத்தியோடுகூடி விளையாடிக்கொண்டிருப்பன்,முகத்திலே அவர்கள்முகத்தில், திருதாண்டவஞ்செய்யும் - இலக்குமி நடனஞ்செய்வாள், சஞ்சலம்வராது-சஞ்சலம் உண்டாகாது,பரகதிஉதவும்-மேலான மோட்சத்தையுங்கொடுக்கும், ஆதலால் இவரையே-பத்தியொடு விபூதிதரிக்கின்ற இவர்களையே, சத்தியம்-உண்மையாக, சிவன்எனலாம்-சிவபெருமான்என்றுசொல்லலாம், இனியமேரு-அழகானமேருமலையை, மத்துஎனவைத்து - மத்தாகநாட்டி, அமுதினை கடையும்-அமுதின்பொருட்டுக் கடைந்த,மால்-திருமாலுக்கு,மருகன்ஆன-மருகனகிய, முருகா-முருகக்கடவுளே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே. எ-று.

பத்தி-அன்பு. பரிதல்-விரும்புதல். அண்ணாத்தல்-நிமிர்தல். அழுந்தல்-பதிதல். நினைவாய்-சிரத்தையாய். (ஞாப

கமாய்,) நிமலன்-பரிசுத்தன். தாண்டவம்-நடனம். சஞ்சலம்-சலனம். மேருஎன்பது இவ்விடத்தில்மந்தரமலையைக் குறித்தது. அமுதினை-உருபுமயக்கம்.

இவ்வுறுப்பாற் பயனில்லெனல்.

தேவால யஞ்சுற் றிடாதகா லென்னகா
றெரிசியாக் கண்ணென் னகண்
தினமுமே நின்கமல பாதத்தை நினையாத
சிந்தைதா னென்ன சிந்தை
மேவாக மஞ்சிவ புராணமவை கேளாமல்
விட்டசெவி யென்ன செவிகள்
விமலனை வணங்காத சென்னியென் சென்னிபணி
விடைசெயாக் கையென் னகை
நாவார நினையேத் திடாதவா யென் னவாய்
நற்றீர்த்த மூழ்கா வுட
ஞனிலத் தென்னவுடல் பாவியா கியசனன
நண்ணிணும் பலமே துகாண்
மாவாகி வேலைதனில் வருசூரன் மார்புருவ
வடிவேலை விட்ட முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (அகூ)

(இ-ள்.) தேவாலயம் சுற்றிடாதகால் - தேவாலயத்தை வலம்வராதகால், என்னகால் - எத்தன்மைத்தாகியகால், தெரிசியாகண்-தெரிசனஞ்செய்யாதகண், என்னகண்-எத்தன்மைத்தாகியகண், தினமும்-நாள்தோறும், நின்-உனது

கமலம்-தாமரைமலர்போன்ற, பாதத்தை - திருவடியை, நினையாத-நினைக்காத, சிந்தை-மனம், என்னசிந்தை-எத் தன்மைத்தாகியமனம், மேவு-மனம்பொருந்திய, ஆகமம்-ஆகமமும், சிவபுராணம்-சிவபுராணமும், (ஆகிய) அவை-அவற்றை, கேளாமல்விட்டசெவி - கேளாதுவிட்ட காது கள், என்னசெவிகள்-எத்தன்மையவாகிய காதுகள், விம லனை-சிவபெருமானை, வணங்காத - பணியாத, சென்னி-தலை, என்சென்னி-எத்தன்மைத்தாகியதலை, பணிவிடை செய்யாதகை-தொண்டுசெய்யாதகை, என்னகை-எத்தன் மைத்தாகியகை, நா ஆர-நாநிரம்ப, நினைஏத்திடாதவாய்-உன்னைத் துதிக்காதவாய், என்னவாய்-எத்தன்மைத்தா கியவாய், நானிலத்து-உலகத்தில், நல்தீர்த்தம் - நல்லபுண் ணிய தீர்த்தங்களில், மூழ்காதஉடல் - முழுகாதஉடம்பு, என்ன உடல்-எத்தன்மைத்தாகிய உடம்பு, பாவியாகிய-பாபத்தை யுடையதாகிய, சனனம்நண்ணினால்-பிறவியெ டுத்தால், பலன்ஏது-பயன் யாது, மா ஆகி - மாமரமாகி, வேலைதனில்வரு-கடலில்வந்த, சூரன்-சூரபன்மனது, மார் புஉருவ-நெஞ்சிற்பட்டுருவும்படி, வடிவேலை-வடித்த வே லாயுதத்தை, விட்ட-பிரயோகித்த, முருகா - முருகக்கட வுளே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

தேவாலயம்-தேவர்கோயில். விமலன் - பரிசுத்தன். நல்தீர்த்தம்-கங்கைமுதலிய புண்ணியநதிகள் பாலைக்குநில மில்லாமையால் பூமியை நானிலமென்றார்,

நற்பொருளொடு தீப்பொருள்பிறத்தல்.

கோகனக மங்கையுடன் மூத்தவள் பிறந்தென்ன
குலவுமாட் டின்க ணதர்தான்

கூடப் பிறந்தென்ன தண்ணீரி னுடனே
கொடும்பாசி யுற்று மென்ன
மாகருணு மமுதினொடு நஞ்சம் பிறந்தென்ன
வல்லிரும் பிற்று ருத்தான்
வந்தே பிறந்தென்ன நெடுமரந் தனின்பொக்குள்
வளமொடு பிறந்தென் னவுண்
பாகமிகு செந்நெலொடு பதர்தான் பிறந்தென்ன
பன்னுமொரு தாய்வ யிற்றிற்
பண்புறு விவேகியொடு கயவர்கள் பிறந்தென்ன
பலனேது மில்லை யன்றோ
மாகனகமேருவைச் சிலையென வளைத்தசிவன்
மைந்தனென வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (கூ0)

(இ-ள்.) கோகநகமங்கையுடன்-திருமகளோடு, மூத்தவள்பிறந்து என்ன-மூதேவிபிறந்தாலென்ன, குலவும்-விளங்குகிற, ஆட்டின்கண்-ஆட்டினிடத்தில், அதர் - அதரானது, கூடப்பிறந்துஎன்ன-கூடவேபிறந்தாலென்ன, தண்ணீரினுடனே-நீருடன், கொடும்பாசி உற்றும்என்ன-மிகுந்தபாசி உண்டாயிருந்தாலென்ன, மாகர்உண்ணும்-தேவர்கள் உண்ணுகிற, அமுதினொடும் - அமிர்தத்துடன், நஞ்சம்பிறந்து என்ன-நஞ்சுபிறந்தா லென்ன, வல்இரும்பில்-வலியஇரும்பினிடத்தில், துரு-துருவானது, வந்துபிறந்து

என்ன-வந்துபிறந்தாலென்ன, நெடுமரந்தனில் - நீண்ட மரத்தில், மொக்குள்-மொக்குளானது, வளமொடு - வளமாக, பிறந்து என்ன-பிறந்தாலென்ன, உண்-உண்ணுதற்குரிய, பாகம்மிகு-பக்குவமிகுந்த, செந்நெலொடு-செந்நெல்லுடனே, பதர்-பதரானது, பிறந்து என்ன-பிறந்தாலென்ன, பன்னும்-சொல்லப்பட்ட, ஒருதாய்வயிற்றில் - ஒருதாயின்வயிற்றிலே, பண்புஉறு விவேகியொடு-நற்குணம் பொருந்திய விவேகியுடன், கயவர்கள்பிறந்து என்ன-கீழ்மக்கள் பிறந்தாலென்ன, பலன்ஏதும்இல்லை அன்றே-பயன்சிறிதும்இல்லையல்லவா, மா-பெரிய, கனகம்-பொன்மயமாகிய, மேருவை-மேருமலையை சிலையெனவளைத்த-வில்லாகவளைத்த, சிவன்மைந்தன்என - சிவபெருமானுக்குப் புதல்வனாக, வந்த-அவதரித்த, முருகா-முருகக்கடவுளே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

கோகநகமங்கை-தாமரைமலரில்வாழ்கின்றமாது. மூத்தவள்-அந்தத்திருமகளுக்கு மூத்தவள். அதர் - ஆட்டின் கழுத்தில் நீளமாகத்தொங்குகிறதோல். மாகம்-சுவர்க்கம். மாகர் - சுவர்க்கலோகவாசிகள். (தேவர்கள்) துரு - களிம்பு. மொக்குள்-புல்லுருவி. பதர் - உள்ளீடில்லாதநெல். (உமிக்கூடு.)

தன்னினத்தாலழிவு.

குலமான சம்மட்டி குறடுகைக் குதவியாய்க்
 கூரிரும் புகளை வெல்லுங்
கோடாலி தன்னுளே மரமது நுழைந்துதன்
 கோத்திர மெலாம ழிக்கும்

நலமான பார்வைசேர் குருவியா னதுவந்து
 நண்ணுபற வைகளை யார்க்கு
நற்புடன் வளர்ந்தகலை மானென்று சென்றுதன்
 னவில்சாதி தனையி ழுக்கும்
உலைநற் குடிதனிற் கோளர்க ளிருந்துகொண்
 டுற்றுரை யீட ழிப்ப
ருளவனில் லாமனா ரழியாதெ னச்சொல்லு
 முலகமொழி நிசமல் லவோ
வலமாக வந்தர னிடத்திற் கனிகொண்ட
 மதயானை தன்சோ தரா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேசனே. (கூக)

(இ-ள்) குலமானசம்மட்டி - தன்னினமான சம்மட்டி யும், குறடு-குறடும், கைக்கு உதவியாய்-கைக்கு உதவியா யிருந்துகொண்டு, கூர்இரும்புகளைவெல்லும்-கூர்மையாகிய இரும்புகளை அழிக்கும், கோடாலிதன்னிலே-கோடாலியி ல், மரமதுநுழைந்து-மரமானதுநுழைந்துதன்கோத்திரம் எல்லாமழிக்கும்-தன்வமிசத்தையெல்லாம் அழிக்கும், நல ம்ஆனபார்வைசேர்-நன்மையாகியபார்வையுள்ள, குருவி யானதுவந்து-குருவியானது வந்திருந்துகொண்டு, நண் ணு-அவ்விடத்தில்வருகிற, பறவைகளை ஆர்க்கும்-பக்ஷிக ளைக்கட்டிவசப்படுத்தும், நட்புடன்வளர்ந்தகலைமான்ஒன் று-சிநேகமாகவளர்ந்தஒருகலைமானனது,சென்று-போய்,

தன்-தனது, நவில்-சொல்லப்பட்ட, சாதிதனை இழுக்கும்-இனத்தைபிழுக்கும், உலவு-உலாவுகிற, நற்குடிதனில்-நல்லகுடியில், கோளர்கள் இருந்துகொண்டு-கோட்சொல்லுவோர் இருந்துகொண்டு, உற்றுரை-உறவினரை, ஈடழிப்பர்-பெருமையழிப்பார்கள், உளவன் இல்லாமல்-உளவாளியில்லாமல், ஊர் அழியாது-ஊர் அழியமாட்டாது, எனச்சொல்லும்-என்று சொல்லுகிற, உலகமொழி-லோகவாக்கியம், நிசம்அல்லவோ-உண்மையல்லவா, வலமாக்வந்து-பிரதக்ஷிணமாய்வந்து, அரசனிடத்தில்-சிவபெருமானிடத்தில், கனிகொண்ட-கனியைவாங்கின, மதயானைதன்சோதரா - விநாயகரது சகோதரனே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

கோடாலி-கோடரி. (மரங்களைவெட்டிச்சாய்க்கும்) ஓரிருப்புக்கருமி ஆர்த்தல்-கூட்டல். ஈடு - பெருமை. உளவன்-ஆந்தரியந்தெரிந்தவன். கனி-மாம்பழம். விநாயகர் யானைமுகத்தை யுடையவராதலால் அவரைமதயானையென்றேகூறினர். சோதரன்-ஒரு தாய்வயிற்றிற் பிறந்தவன்.

## வீணுக் குழைத்தல்.

குயின்முட்டை தனதென்று காக்கையடை காக்குங்
குணம்போலு மீக்க ளெல்லாங்
கூடியே தாமுண்ண வேண்டுமென் றேதினங்
கூடுய்த்த நறவு போலும்
பயில்சோர ருக்குப் பிறந்திடத் தாம்பெற்ற
பாலனென் றுட்க ருதியே

பாராட்டி முத்தமிட் டன்பாய் வளர்த்திடும்
  பண்பிலாப் புருடர் போலும்
துயிலின்றி நிதிகளைத் தேடியே யொருவர்பாற்
  றெட்டுத் தெறித்தி டாமல்
தொகைபண்ணி வைத்திடுவர் கைக்கொண்டு போகவரு
  சொந்தமா னவர்வே றுகாண்
வயிரமொடு சூரனைச் சங்கார மேசெய்து
  வானவர்க் குதவு தலைவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
  மலைமேவு குமரேசனே. (கூஉ)

(இ-ள்.) குயில்முட்டை - குயிலின் முட்டையை, தனது என்று-தனதென்றுநினைத்து, காக்கை காகமானது, அடைகாக்கும் குணம்போலும்-அடைகாக்கும் குணம்போலவும், ஈக்கள் எல்லாம்-ஈக்கள் எல்லாமும், கூடி-சேர்ந்து, தாம்உண்ணவேண்டுமென்று - தாம்குடிக்கவேண்டுமென்று, தினம்-நாள்தோறும், கூடு - தமதுகூட்டில், உய்த்த-சேர்த்து வைத்த, நறவுபோலும்-தேனைப்போலவும், பயில்-சிநேகித்த, சோரருக்கு - கள்ளபுருடருக்கு, பிறந்திட-பிறக்க, தாம்பெற்றபாலனென்று-தாம்பெற்ற புதல்வன் என்று, உள்கருதி-மனத்தில்எண்ணி, பாராட்டி முத்தமிட்டு-கொண்டாடிமுத்தமிட்டு, அன்பாய் வளர்த்திடும்-அன்போடு வளர்க்கின்ற, பண்புஇலா புருடர்போலும்-நற்குணமில்லாத புருஷர்போலவும், துயில்இன்றி-தூக்கமில்லாமல், நிதிகளைத்தேடி-திரவியங்களைச் சம்பாதித்து, ஒரு

வர்பால்-ஒருவரிடத்து, தொட்டுதெறித்திடாமல்-தொட்டுத் தெறிக்காமல், தொகைபண்ணிவைத்திடுவர்-தொகை செய்து வைத்திடுவார்கள் (ஆனால் அந்தநிதிகளைக்) கைக்கொண்டு போகவரு-கைப்பற்றிப் போகவருகிற, சொந்தமானவர்-சொந்தக்காரர், வேறு - வேறானவரே; வயிரமொடு-மனவைரத்தோடு, சூரனை - சூரபதுமனை, சங்காரஞ்செய்த-சங்கரித்து, வானவர்க்கு-தேவர்களுக்கு, உதவு உதவின, தலைவா - முதல்வனே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

காகமுதலியவை குயில்முட்டைமுதலியவற்றைத் தம்மதென்றுகருதிப் பிறர்க்கு உதவியாக்குதல்போல உலோபிகள் திரவியத்தைத்தேடித் தாம்நுகராமல் பிறருக்கே உதவுவர் என்பது இச்செய்யுட்கருத்து தொகைபண்ணிவைத்தல்-சேர்த்துவைத்தல்.

இதுசேரினிதுபயன்படாதெனல்.

அழலுக்குளே விட்ட நெய்யும் பெருக்கான
வாற்றிற் கறைத்த புளியு
மரிதான கமரிற் கவிழ்த்திட்ட பாலும்வரு
மலகைகட் கிடுபூசையும்
சுழல்பெருங் காற்றினில் வெடித்தபஞ் சும்மணற்
சொரிகரும் பனிநீருநீள்
சொல்லரிய காட்டுக் கெறித்தநில வுங்கடல்
சுழிக்குளே விடுகப் பலும்

விழலுக் கிறைத்திட்ட தண்ணீரு மோகமாய
வேசைக் களித்த பொருளும்
வீணருக் கேசெய்த நன்றியும் பலனில்லை
விருதாவி தென்பர் கண்டாய்
மழலைப் பசுங்கிள்ளை முன்கைமலை மங்கைதரு
வண்ணக் குழந்தை முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (௬௩)

(இ-ள்.) அழலுக்குளே விட்டநெய்யும்-நெருப்பிற்சொரிந்தநெய்யும், பெருக்கான ஆற்றில்கரைத்தபுளியும்-நீர்ப்பெருக்காகிய ஆற்றிலேகரைத்துவிட்ட புளியும், அரிதான-அரிதாகிய, கமரில்-நிலவெடிப்பில், கவிழ்த்திட்ட பாலும்-கவிழ்ந்துவிட்டபாலும், வரும் (அழைத்தால்ஓடி) வருகிற அலகைகட்கு-பேய்களுக்கு, இடுபூசையும்-செய்கிற பூசையும், சுழல்-சுற்றுகிற, பெருங்காற்றினில்-பெருங்காற்றிலே வெடித்தபஞ்சும்-வெடித்தபஞ்சம், மணல்சொரி-மணலிற்கொட்டின, நறு-மணமுள்ள, பனிநீரும்-பனிநீரும், நீள்-நீண்ட, சொல் அரிய-சொல்லுதற்கரிய, காட்டுக்கு எரித்தநிலவும்-காட்டிலெரித்தநிலாவும், கடல்சுழிக்குளே விடுகப்பலும்-கடற்சுழியில் ஓட்டினகப்பலும், விழலுக் கிறைத்துவிட்டநீரும், மோகமாய்-மோகங்கொண்டு, வேசைக்களித்தபொருளும்-வேசைக்குக்கொடுத்தபொருளும், வீணருக்குசெய்தநன்றியும், வீணர்களுக்குச்செய்த உபகாரமும், பலன்இல்லை-பயன்படுவனவல்ல, இது-இது, விருதா என்

பர்-வீணென்று சொல்லுவர் (பெரியோர்) மழலை-மழலைச் சொற்களையுடைய, பசுங்கிள்ளை-பசுங்கிளியை, முன்கை-முன்கையிலுடைய, மலைமங்கை-பார்வதிதேவி, தரு-பெற்ற, வண்ணம்-அழகாகிய, குழந்தை - குழந்தையுருவான, முருகா-முருகக்கடவுளே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயலீடு மலைமேவு குமரேசனே. எ-று.

கமர்-நிலவெடிப்பு. சுழல் பெருங்காற்று - சூறைக்காற்று. நிலவு-சந்திரிகை. விழல் ஓர்வகைப்புல். இறைத்தல்-பாய்ச்சுதல். வீணர்-பயனற்றவர். மலைமங்கை-பர்வதராஜகுமாரி.

கைவிட தகாதவர்.

அன்னைசுற் றங்களையு மற்றைநாண் முதலாக
வடுத்துவரு பழையோரையு
மடுபகைவ ரிற்றப்பி வந்தவொரு வேந்தனையு
மன்பான பெரியோரையும்
தன்னைநம் பினரையு மேழையா னவரையுஞ்
சார்ந்தமறை யோர்தம்மையுந்
தருணமிது வென்றுநல் லாபத்து வேளையிற்
சரணம் புகுந்தோரையும்
நன்னயவ தாகமுன் னுதவிசெய் தோரையு
நாளுந் தனக் குறுதியாய்
நத்துசே வகனையுங் காப்பதல் லாதுகை
நழுவவிட லாகா துகாண்

மன்னயிலு மினியசெஞ் சேவலுஞ் செங்கைமலர்
வைத்தசர வணபூ பனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (கூச)

(இ-ள்.) அன்னை சுற்றங்களையும்-பெற்றதாயையும்மற்ற பந்துக்களையும், அற்றைநாள்முதல் ஆ அடுத்துவருபழை யோரையும்-அன்றைத்தினம்முதலாக (முதலிற்பார்த்த) அத்தினந்தொடங்கி வெகுநாளாகத் தன்னை யடுத்துவரு கிற பழைமையான பரிசயமுள்ளவர்களையும், அடுபகை வரில்தப்பிவந்த ஒருவேந்தனையும்-கொல்லவந்த பகைவர் களுக்கு அஞ்சி (அவர்களிடத்தினின்று) தப்பிவந்த ஓர் அரசனையும், அன்பு ஆனபெரியோரையும்-அன்பு வைக் கத்தக்க பெரியோர்களையும், தன்னை நம்பினரையும்-தன் னை நம்பினவர்களையும், ஏழை ஆனவரையும்-பொருளில் லாதவர்களையும், சார்ந்த மறையோர்தம்மையும்-தன்னை அடுத்த அந்தணர்களையும், நல் ஆபத்துவேளையில், மிக்க துன்பம் நேர்ந்தசமயத்தில், இது தருணம் என்று சரணம் புகுந்தோரையும் - இதுபாதுகாத்தற்குரிய சமயமென்று சொல்லிவந்து சரணமடைந்தவர்களையும், நல்நயம் அது ஆக முன் உதவிசெய்தோரையும்-மிக்க இனிமையாகத் (தனக்கு) முன்பு உதவிசெய்தவர்களையும், நாளும் தன க்கு உறுதி ஆய் நத்துசேவகனையும்-தினந்தோறும் தன க்கு நல்லதொழில்செய்பவனைத்தன்னிடத்து அன்புகொ ண்ட ஊழியக்காரனையும், காப்பது அல்லாது-பாதுகாப் பதேயல்லாமல், கைநழுவவிடல் ஆகாது-சோர்ந்து கைவி ட்டிடக்கூடாது, மன்-பெருமையையுடைய, அயிலும்-

வேலாயுதத்தையும், இனியசெம் சேவலும்-(கண்ணுக்கு) இனிமையான அழகிய கோழிவடிவத்தையெழுதிய கொடியையும், செம்கை மலர்வைத்த-சிவந்த தாமரைமலர் போன்ற திருக்கைகளிற் கொண்டருளிய, சரவணபூபனே சரவணபூமிக்குத் தலைவனானமுருகனே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

முன்னுதவி செய்தல்-தானோர் உதவியையும் அவர்க்குச்செய்யாமலிருக்கையில் அவர் தாம்முன்புதனக்கு ஓர் உதவிசெய்தல், மன் அயில்-மற்றை யாயுதங்கட்கெல்லாம் தலைமையானவேல், பிறருடைய ஆயுதங்களுக்கு அழிவடையாமல் நிலைபெற்றவேல் எனினுமாம். 'எவர்மேல்விடுக்கினு மவர்தம்' மாயிருந்திறலும் வரங்களுஞ்சிந்திமன்னுயிருண்ப தெப்படைக்கும், நாயகமாவதொரு தனிச்சுடர் வேல்நல்கியே மதலைகைக்கொடுத்தான்' என்றார் கந்தபுராணத்தும். சேவல்பறவையின ஆண்பாற்பெயர். சேவல்என்பது-இங்கு அதன் வடிவமெழுதிய கொடிக்கு இருமடியாகுபெயராம். சரவணபூபன் என்பதற்கு-சரவணத்தில்தோன்றியதலைவன் என்பதுகருத்து.

தகாதசெயல்.

அண்டிவரு முற்றார் பசித்தங் கிருக்கவே
　　வன்னியர்க் குதவு வோரு
　மாசுதபு பெரியோர்செய் நேசத்தை விட்டுப்பி
　　னற்பரை யடுத்த பேரும்

கொண்டவொரு மனையா ளிருக்கப் பரத்தையைக்
கொண்டாடி மருவு வோருங்
கூறுசற் பாத்திர மிருக்கமிகு தானமது
குணமிலார்க் கீந்தபேரும்
கண்டுவரு விதியோரை நம்பியே பழையரைக்
கைவிட் டிருந்த பேருங்
கரிவாலை விட்டுநரி வால்பற்றி நதிநீர்
கடக்கின்ற மரியா தைகாண்
வண்டடர் கடப்பமலர் மாலிகா பரணமணி
மார்பனே யருளா ளனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (௬௫)

(இ-ள்.) அண்டிவரும் உற்றுர்-அடுத்துவருகிற உறவின ர், அங்குபசித்து இருக்க-அவ்விடத்தில் பசித்திருக்க, அ ன்னியர்க்கு உதவுவோரும்-பிறருக்கு உதவிசெய்வோரும் ஆசுதபு-குற்றத்தைக்கெடுத்த, பெரியோர் செய்-பெரியவ ரோடுசெய்த, நேசத்தைவிட்டு சிநேகத்தைவிட்டு,பின்-பி றகு, அற்பரை அடுத்தபேரும்-அற்பர்களை அண்டினபே ரும், கொண்ட ஒருமனையாள் இருக்க-கொண்ட ஒருமனை வியானவளிருக்க, பரத்தையை-வேசையை,கொண்டாடி மருவுவோரும்-கொண்டாடிப்புணர்வோரும்,கூறுசற்பாத் திரம் இருக்க-சொல்லப்பட்ட சற்பாத்திரமிருக்க, குணம் இல்லார்க்கு-நற்குணமில்லாதவர்க்கு, மிகுதானம் ஈந்தபே

ரும்-மிருந்த தாநஞ்செய்தபேரும், கண்டுவரு-பார்த்துவ
ருகிற, புதியோரை-புதியவர்களை, நம்பி-நம்பி, பழைய
ரை-பழையவர்களை, கைவிட்டு இருந்தபேரும்-கைவிட்டி
ருந்தபேர்களும், கரிவாலைவிட்டு-யானையின்வாலைவிட்டு,
நரிவால்பற்றி-நரியின்வாலைப் பிடித்துக்கொண்டு, நதிநீர்-
ஆற்றுநீரை, கடக்கின்ற மரியாதை-தாண்டுகிற செய்கை
போலாகும், வண்டு அடர்-வண்டுகள் நெருங்கின, கடப்
பமலர்மாலிகா-கடப்பம்பூமாலையை, ஆபரணம்-ஆபரண
மாகத்தரித்த, மணி-அழகிய, மார்பனே-மார்பையுடை
யவனே, மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு மலைமே
வு குமரேசனே, எ-று.

அண்டிவருதல்-ஆதரவாயெண்ணிவருதல். அங்கு-அ
ந்தச்செல்வர்வீட்டில். ஆசு-குற்றம். தபுதல்-கெடுத்தல்.
அற்பர்-இழிந்தவர். மருவுதல்-புணர்தல். சற்பாத்திரம்-ந
ல்லபாத்திரம். கொடுக்கத்தகுந்த நல்லிடம். தானம்-
கொடை. கண்டு-செல்வத்தைப்பார்த்து. ஆபரணம்-அணி
யெனவும் பிரிக்கலாம்.

## நல்லோர் முறை.

கூடியே சோதரர்கள் வாழ்தலா லுந்தரு
குழந்தைபல பெறுத லாலுங்
குணமாக வேபிச்சை யிட்டுண்கை யாலுங்
கொடும்பிதிர்க் கிடுத லாலுந்
தேடியே தெய்வங்களுக்கீத லாலுந்
தியாகங் கொடுத்த லாலுஞ்

சிறியோர்கள் செய்திடும் பிழையைப் பொறுத்துச்
சினத்தைத் தவிர்த்த லாலு
நாடியே தாழ்வாய் வணங்கிடுத லாலுமிக
நல்வார்த்தை சொல்ல லாலு
நன்மையே தருமலாற் றாழ்ச்சிகள் வாராவிவை
நல்லோர்கள் செயுமு றைமைகாண்
வாடிமன நொந்துதமிழ் சொன்னநக் கீரன்முன்
வந்துதவி செய்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (கூ௬)

(இ-ள்.) சோதர்கள்-சகோதரர்கள், கூடிவாழ்தலாலு ம்-சேர்ந்துவாழ்கையாலும், தகு - தகுதியாகிய பலகுழந் தை பெறுதலாலும்-பலகுழந்தைகளைப் பெறுகையாலும், குணமாக - நற்குணத்தோடு, பிச்சை இட்டு உண்கையா லும்-பிச்சைபகிர்ந்து உண்ணுகையாலும், கொள்ளும்-ஏற் றுக்கொள்ளுகின்ற, பிதிர்க்கு - பிதிர்த்தேவதைகளுக்கு, இடுதலாலும்-அவிசுகொடுத்தலாலும், தேடி-தேடிக்கொ ண்டுபோய், தெய்வங்களுக்கு - தேவதைகளுக்கு, ஈதலா லும் - உபயோகப்படுத்தலாலும், தியாகம்கொடுத்தலாலு ம்-தானங்கொடுக்கையாலும், சிறியோர்கள்-சிறியவர்கள், செய்திடும்பிழை செய்கின்ற குற்றங்களை, பொறுத்து-ம ன்னித்து, சினத்தை தவிர்த்தலாலும்-கோபத்தை ஒழித் துவிடுகையாலும், நாடி - தேடி, தாழ்வாய் - பணிவாய், வணங்கிடுதலாலும் - தொழுதலாலும், மிக - மிகுதியாக,

நல்வார்த்தை சொல்லலாலும் - இன்சொற்கள் சொல்லு தலாலும், நன்மையே தருமலால் - நன்மையையே கொடுக்குமல்லாமல், தாழ்ச்சிகள்வரா - தீமைகள் உண்டாக மாட்டா, இவை-இந்தக்காரியங்கள்யாவும், நல்லோர்கள் செய்யும்முறைமை-நல்லவர்கள் செய்கின்றமுறைமையாகும், மனம்வாடி நொந்து-மனம்வாடிவருந்தி, தமிழ்சொன்ன - தமிழ்ப்பிரபந்தம்சொல்லின, நக்கீரன்முன்வந்து-நக்கீரனுக்கு எதிரேவந்து, உதவிசெய்தமுருகா-(அவனுக்குச்) சகாயஞ்செய்த முருகக்கடவுளே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவுகுமரேசனே. எ-று.

கொளும்-திலதர்ப்பணாதிகளைஏற்றுக்கொள்ளுகின்ற தேடி என்பதற்கு பொருள்சம்பாதித்து என்றும் உரைக்கலாம் பொறுத்தல்-சகித்தல், தாழ்ச்சிகள்-தீமைகள், நக்கீரன்சொன்னதமிழ் திருமுருகாற்றுப்படை யென்னும் பிரபந்தம்.

அடைக்கலங்காத்தல்.

அஞ்சலெனு நாயினுட் றருமன் சுமந்துமுன்
றுற்றைக் கடத்து வித்தா
னடைக்கல மெனுங்கயற் காகநெடு மாலுட
னருச்சுனன் சமர்புரிந் தான்
தஞ்சமென வந்திடு புறவுக்கு முன்சிபி
சரீரந் தனைக்கொ டுத்தான்
தடமலைச் சிறகரிந் தவனைமுன் காக்கத்
ததீசிமுது கென்பளித் தான்

இன்சொலுட னேபூத தயவுடைய ராயினே
ரெவருக்கு மாபத் திலே
யினியதஞ் சீவனை விடுத்தாகி லுங்காத்
திரங்கி ரக்ஷிப்ப ரன்றே
வஞ்சகிர வுஞ்சமொடு தாருகன் சிங்கமுகன்
வளர்சூர னுடல் கீண்டவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (கூஎ)

(இ-ள்.) முன்-முன்பு, தருமன்-தருமபுத்திரன், அஞ்சல் என-அஞ்சாதே என்றுசொல்லி, அபயம்-அளித்து, நாயின்உடல்சுமந்து-நாயினது உடம்பைச்சுமந்து, ஆற்றைகடத்துவித்தான்-(அந்நாய்) ஆறுகடக்குப்படிசெய்வித்தான், அருச்சுனன்-அருச்சுநன், அடைக்கலம் எனும்கயற்கு ஆக-அடைக்கலமென்றுசொல்லிவந்துதன்னைச்சரணமடைந்தகயன் என்னும்கந்தருவனுக்காக, நெடுமாலுடன்சமர் புரிந்தான்-பெருமைக்குணமுடைய திருமாலினது திருவவதாரமான கண்ணபிரானுடனே போர்செய்தான், முன்-முன்பு, சிபி-சிபிச்சக்கரவர்த்தி, தஞ்சம்என வந்திடுபுறவுக்கு-அடைக்கலமென்றுசொல்லிவந்து தன்னையடைந்த புறவுக்காக, சரீரந்தனைகொடுத்தான்-தன்உடம்பை அறுத்துக்கொடுத்தான், முன்-முன்பு, ததீசி-ததீசி என்னும் முனிவன், தடமலைசிறகு அரிந்தவனைகாக்க, பெரிய மலைகளின் இறகுகளை அறுத்தவனான இந்திரனைப் பாதுகாக்கும் பொருட்டு, முதுகு என்பு அளித்தான்-(தன்னுடைய)முதுகெலும்பைக் கொடுத்தான், இன்சொலுடனே பூததய

வுடையர் ஆயினோர்-இனிமையானபேச்சைப் பேசுதலோ டு பிராணிகளிடத்தில் கருணையையும் உடையவர்களான வர்கள், எவருக்கும்-(தம்மைச்சரணமடைந்தவர்) யாவர் க்கும், ஆபத்திலே-ஆபத்துக்காலத்திலே, இனியதம் சீவ னைவிடுத்து ஆகிலும்-(அவ்வாபத்தைத் தீர்த்தற்பொருட் டு) இனிமையான தங்களுயிரைவிட்டாவது, இறங்கி கா த்து ரட்சிப்பர் அன்றோ-இரக்கங்கொண்டு பாதுகாத்து அருளுவரன்றோ, வஞ்சம் கிரவுஞ்சமொடு-வஞ்சனையையு டைய கிரௌஞ்சகிரி யுடனே, தாருகன் சிங்கமுகன் வளா ர்சூரன்உடல்-தாரகாசுரன் சிங்கமுகாசுரன் வளர்ந்த சூர பதுமன் என்பவர்களுடைய உடலை, கீண்டவா - (வேல் கொண்டு) பிளந்தவனே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

நாயினுடல் தருமன் சுமந்தகதை:—கண்ணபிரான்ப ரமபதமடைந்ததையும், கலியுகம்தொடங்கிவிட்டதையும் அறிந்து பஞ்சபாண்டவர்கள் இவ்வுலகத்தை வலியவிடக் கருதியவர்களாய்த் திரௌபதியுடன் மகாப்ரஸ்தானமாக ப்பெரும்பிரயாணம் புறப்பட்டபோது, தருமபுத்திரரு டைய ஜீவகாருணியத்தைப் பரிசோதிக்கக்கருதியவனாய், யமன், ஒருநாய்வடிவுகொண்டு அத்தினாபுரியினின்று அவ ர்களுடனேவிடாது தொடர்ந்து சென்றான். வடதிசை நோக்கி நெடுந்தூரஞ்சென்ற அவர்கள் மேருமலையைச் சாருமளவில், திரௌபதி, சகாதேவன், நகுலன், அருச் சுனன், வீமன், என்ற இவர்கள் ஒருவர்பின் ஒருவராய்

வலிமைகுன்றிக் கீழ்விழுந்து மனிதவுடம்பைநீத்து வேறு வடிவங்கொண்டு பரலோகஞ்சேர்ந்தார்கள். பின்பு, தருமன் அவர்கள் வீழ்ந்ததைப்பொருள்செய்யாமல் தானும் நாயுமாக அப்பாற் சென்றுகொண்டிருக்கையில், இந்திரன் விமானத்துடனே எதிர்ப்பட்டுவந்து தருமபுத்திரனை நோக்கி 'நீ இதில் ஏறிக்கொண்டு சுவர்க்கலோகத்துக்கு வருக' என்றுகூற, தருமபுத்திரன் இந்நாய்க்கும் அவ்விமானத்தில் இடந்தரவேண்டும் என்றுவேண்டினன். அதற்கு இந்திரன் உடன்படாமல் மிருகசன்மத்தின் இழிவையும், அதிலும் நாய்ப்பிறப்பின் தாழ்வையும், மேலுலகஞ்செல்வார்க்கு இப்படிப்பட்ட பாசங்கூடாதென்பதையும் வற்புறுத்திக்கூறிமறுக்க, தருமபுத்திரன் 'சரணமடைந்த உயிரைக்காப்பது மிகவும் மேலான தருமமாதலின்' என்னையேகதியாக அடைந்து என்னிடம்வந்துள்ள இந்நாயை நான்கைவிடமாட்டேன், இதுவும் என்னுடனே சுவர்க்கத்துக்கு வரவேண்டுவதே, என்று உறுதியாகக் கூறும்பொழுது, யமன் நாய்வடிவத்தைவிட்டுத் தன்வடிவத்தைக்கொண்டுதோன்றி, தருமபுத்திரனுடைய சரணாகதரட்சண தருமத்தைக்கொண்டாடி, தான் அவனை இவ்வாறு பரிசோதித்த தன்மையைக்கூறி, பின்பு அவனைமேலுலகத்திற்கு அழைத்துப்போயினன் என்பது மகாபாரதத்து மகாப்ரஸ்தாந பருவத்தின் வரலாறு.

அங்ஙனம் தருமபுத்திரன் நாயுந்தானுமாகச்சென்றுகொண்டிருந்தபொழுது, யமன் அவனது அன்பைப் பரி

சோதித்தற்காகப்பெரிய ஒருநதியை உண்டாக்க, அதனைக்கடக்கும் பொருட்டுத் தருமபுத்திரன் நீரிலிறங்கியபொழுது நாய்தனக்கு இனிக்கதியில்லையென்று கவலைப்பட, அதுகண்டு தருமபுத்திரன் 'அஞ்சாதே' என்றுசொல்லிஅதனையெடுத்துத் தோளில்வைத்துக்கொண்டு பெருவெள்ளத்தில் நீந்திச்சென்று அக்கரைசேர்ந்தான் என்பது, இங்குக்குறிக்கப்பட்டது ஆற்றை என்பதற்கு-வழியை என்னும் பொருள் கொள்ளலாம்.

கயனுக்காக அருச்சுனன் கண்ணனோடுபோர்புரிந்த கதை:—நிஷதபருவத சிகரத்து மணிபுரத்தில் வாழ்பவனை கயனென்னுங்கந்தருவன் தவம்புரிந்து பிரமனிடமிருந்து வரமாகப்பெற்ற விமானத்திலேறி எங்குந் தடையின்றித்திரிந்து அடிக்கடி சத்தியலோகம் சேர்ந்து பிரமனைவணங்கிவரும் வழக்கப்படி ஒருநாள் தனக்குரிய பலமகளிருடனே வினோதமாக விமானமேறி வானத்தின்மீது சென்றுகொண்டிருக்கையில், அவன்வெற்றிலையுண்டு உமிழ்ந்த எச்சிற்றம்பலம், கிரீடார்த்தமாக ரைவதக பருவதத்தில் எழுந்தருளிய கண்ணபிரான் சந்தியாவந்தனஞ்செய்கையில் அர்க்கியஜலத்தையேந்திய கையிலே விழுந்திட்டதனால், அப்பெருமான் மிக்ககோபங்கொண்டு அக்கந்தருவனைக் கொல்லுவதாகக்கருதிச் சபதஞ்செய்கையில், ஓடிச்சென்ற அவன் எங்கும் சரணம்புகுமிடம் பெறானாய்ப்பின்பு நாரதமுனிவர் சொல்லியபடி அருச்சுனனைச் சர

ணமடைய, அருச்சுனன், தனக்கு உற்றதுணைவனான கண்ணபிரான் பக்கல் அபசாரப்பட்டவனிவன் என்பதை யறியாமல் அவனைப்பாதுகாப்பதாக ஏற்று அம்புறத்தூணியில் வைத்துக்கொண்டபின்பு, கண்ணன் தூதர்மூலமாகவும் அக்குரூரர் மூலமாகவும் சுபத்திரை மூலமாகவும், 'இவனை விட்டிடுக' என்று தெரிவிக்க, அருச்சுனன் அதற்கு இணங்காமல் 'சரணமடைந்தவனை விடமாட்டேன்' என்ன, இதுகாரணமாக இருவர்க்கும் பெரும்போர் நிகழ்ந்தது; அப்போரின் உக்கிரத்தால் உலகம் நிலைகுலைவது கண்டு சிவபிரான் இருவரையும் சமாதானப்படுத்தியமை பற்றியும், கயனுடனே அருச்சுனன் கண்ணனைச் சரணமடைந்தமைபற்றியும், கருணாநிதியான கண்ணன் கோபந் தணிந்து கயனது பிழையைப் பொறுத்தருளினன்.

புறவுக்காகச் சிபி உடல்கொடுத்தகதை:—சூரியகுலத்து அரசனாகிய சிபியென்பவன் அரசாளுகையில் அவனது மேன்மைக்குணத்தைப் பரிசோதிக்கும்பொருட்டு இந்திரன் பெரும்பருந்தாகவும், யமன் சிறுபுறவாகவும்வடிவமெடுத்து அப்புறவைப் பருந்துதுரத்திவர, அது சிபியைச்சரணமடைய, அரசன் அதற்கு அபயமளிக்க, பின்னே வந்தபருந்து 'என்இரையைக்கொடுத்துவிடு' என்றுகேட்க, மன்னவன் 'அடைக்கலம் புகுந்தவரை ஆதரியாதுவிடுதல் அதிபாதகமாதலால், இதையன்றி எதுகேட்டாலும் கொடுப்பேன்' என்ன, பருந்து 'இந்தப்புறவின் எடையளவுதசை உன் உடம்பில் அரிந்துகொடு' என்ன, வேந்தன்

சம்மதித்தது உடனே உடம்பிலுள்ள உறுப்புக்களையெல்லாம் ஒவ்வொன்றாக அறுத்து வைத்தும் எடை குறைந்தமையால், தானே தராசுத்தட்டிலேறி எடையை நிறைக்க உடனே அத்தேவர்கள் பிரத்தியக்ஷமாகிச் சக்கரவர்த்தியை மிகவும்கொண்டாடி அவனது உடம்பு முன்போல நிறைவுறும்படி வரமளித்துப்போயினர் என்பதாம். (யமன் வேடனாகியும், இந்திரன்புறாவாகியும் வந்ததாகவும் கதைகூறப்படுவது உண்டு.)

ததீசி இந்திரனுக்கு முதுகெலும்பு அளித்தகதை:—தேவர்களும் அசுரர்களும் திருப்பாற்கடல் கடையவந்தபொழுது, 'யார்கையிலும் ஆயுதமொன்றும் இருக்கக்கூடாது' என்று திருமால் கட்டளையிட்டதனால், அனைவரும் தம்தம் ஆயுதங்களையெல்லாம் ததீசிமுனிவனிடம் கொடுத்துவிட்டனர். பின்பு அவர்கள் நெடுங்காலம் கடல்கடைந்துகொண்டிருந்ததனால் அப்படைக்கலங்களைப் பெற்றுக்கொள்ளாமைபற்றி அம்முனிவர் அவற்றையெல்லாம் தம் தவவலிமைகொண்டு விழுங்கிவிட்டதனால் அவ்வாயுதங்களெல்லாம் ஒன்றாய்த்திரண்டு அம்முனிவரது வலியமுதுகின் தண்டாய் அமைந்தது. பின்பு இந்திரன் மகாபலபராக்கிரம சாலியான விருத்திராசுரனுடன் போர் புரிகையில் தனது வச்சிராயுதத்தை அசுரன்மேல்வீச அது அவனைச் சிறிதும் ஊறுபடுத்தமாட்டாமற்போனதனால், இந்திரன் திருமாலைத்துதிக்க, அப்பெருமான் 'ததீசிமுனிவரது எலும்பை வச்சிராயுதமாகச்செய்து அதுகொண்டு விருத்தி

ரனைக்கொல்வாய்' என்றுகூறவே, இந்திரன் முனிவரைச் சரணமடைந்து செய்திகூறி 'முதுகெலும்பைத் தரவேண்டும்' என்றுவேண்ட, அதற்கு உடன்பட்டு அவர் யோகத்தால் உயிர்துறக்க, இந்திரன் அவரதுமுதுகெலும்பையெடுத்து விசுவகர்மாவைக் கொண்டு வச்சிராயுதமாகச் செய்துகொண்டு அதனால் விருத்திராசுரனைத் துணித்துக்கொன்றனன் என்பதாம்.

இந்திரன் மலைச்சிறகு அரிந்தகதை:—ஆதிகாலத்தில் மலைகளெல்லாம் பறவைகள்போல இறகுடையனவாய் அவற்றால் உலகமெங்கும் பறந்துதிரிந்து பலவிடங்களிலுட்கார்ந்து அவ்விடங்களையெல்லாம் பிராணிகளுடனே பாழாக்கிவருகையில். அத்துன்பத்தைப்பொறுக்கமாட்டாத தேவர்கள் முனிவர்கள் வேண்டியதனால் இந்திரன் வச்சிராயுதங்கொண்டு அவற்றின் இறகுகளை அறுத்துத்தள்ளினன் என்பதாம்.

ஈற்றடியிற் குறித்தகதை:—அசுரேசனது மகளாகிய மாயை என்னும் பெயர்பெற்ற சுரசையென்பவள் காசிபமகாமுனிவரைக்கூடிப்பெற்ற புத்திரர்களாகிய சூரபதுமன்சிங்கமுகன் தாரகன் என்றமூவரும் பற்பலவகையாக உலகத்தை வருத்தினவளவில், அத்துன்பம்பொறுக்கமாட்டாத தேவர்களின் வேண்டுகோளின்படி சிவபிரான் குமாரக்கடவுளை உண்டாக்கியனுப்ப, அக்கடவுள் தனக்கு உரியகணங்களுடனே புறப்பட்டுச் சென்று போர்புரிந்து அவர்களை வேரோடழித்துத்தேவர்களைப் பாதுகாத்தனன் என்பதாம்.

அவர்களில் தாரகாசுரனோடு முருகக்கடவுளுக்குப் போர், அவ்வசுரனுக்கு இருப்பிடமான கிரௌஞ்சகிரி யில் நடந்தது. சாபத்தால் அம்மலைவடிவமான கிரௌஞ் சன் என்னும் அசுரன் அப்பொழுது மாயையினால் பல பெருந்தீங்குகள்செய்ய, முருகக்கடவுள் வேலினால் அம்ம லைவடிவத்தைப்பிளந்து அவ்வசுரனையும் அழித்தொழித் தனன்.

## யோக்கியா யோக்கியம்.

பாலினொடு தேன்வந்து சேரில்ருசி யதிகமாம்
பருகுநீர் சேரி லென்னும்
பவளத்தி னிடைமுத்தை வைத்திடிற் சோபிதம்
படிகமணி கோக்கி லென்னும்
மேலினிய மன்னர்பால் யானைசேர் வதுகனத்தை
மேஷமது சேரி லென்னும்
மிக்கான தங்கத்தி னவமணி யுறிற்பெருமை
வெண்கல் லழுத்தி லென்னும்
வாலிப மினர்களுட னிளையோர்கள் சேரினலம்
வளைகிழவர் சேரி லென்னும்
மருவுநல் லோரிடம் பெரியோர் வரிற்பிரியம்
வருகயவர் சேரி லென்னும்
மாலிகை தரித்தமணி மார்பனே தெய்வானை
வள்ளிக்கு வாய்த்த கணவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (௬அ)

(இ-ள்.) பாலினொடு - பாலுடனே, தேன்வந்துசேரில்-தேன்வந்துகூடினால், ருசிஅதிகம்ஆம்-சுவைமிகுதியாகும் பருகு-குடிக்கிற, நீர்சேரில்-நீர்சேர்ந்தால், என் ஆம்-என்னபயனுண்டாகும், பவளத்தினிடை-பவளத்தின்நடுவில், முத்தைவைத்திடில் - முத்தைவைத்தால், சோபிதம்-அழகாகும் படிகமணி-பளிங்குமணியை, கோக்கில் என்னும்-கோத்தால் என்னபயனுண்டாகும், மேல்-மேலான, இனிய-இனிமையுள்ள, மன்னர்பால்-அரசர்களிடத்து, யானைசேர்வது கனதை-யானைசேர்ந்திருத்தல் பெருமையாகும், மேஷம்சேரில் என்னும்-ஆடுசேர்ந்தால் என்னபயனுண்டாகும், மிக்கான-மேலான, தங்கத்தில்-தங்கத்தில், நவமணி உறில்-நவரத்தினங்கள் பதிக்கப்பெற்றால், பெருமை-பெருமையாகும், வெண்கல்-வெள்ளைக்கல்லை. அழுத்தினால்-பதித்தால், என்னும்-என்னபயனுண்டாகும், வாலிபம் மின்னார்களுடன்-இளம்பெண்களோடு, இளையோர்கள்சேரின்-இளையமைந்தர்கள்சேர்ந்தால், நலம்-அழகாகும், வளைகிழவர்-முதுகுவளைந்த கிழவர்கள், சேரில்-சேர்ந்தால், என்னும்-என்னபயனுண்டாகும், மருவு நல்லோரிடம்-பொருந்திய நல்லோர்களிடத்துக்கு, பெரியோர்வரில்-பெரியோர்கள் வந்தால், பிரியம்-இஷ்டமாகும், வருகயவர்-வருகின்றகீழ்மக்கள், சேரில்-சேர்ந்தால், என்னும் என்னபயனுண்டாகும். மாலிகை - மாலைகளை, தரித்த-அணிந்த, மணிமார்பனே - அழகிய மார்பையுடையவனே, தெய்வானை வள்ளிக்கு - தெய்வயானைக்கும் வள்ளி

நாயகிக்கும், வாய்த்த-கிடைத்த, கணவா - கொழுநனே, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

ருசி-இன்சுவை. பருகுதல்-குடித்தல். சோபிதம்-பிரகாசமெனினும் அமையும். கனதை-கௌரவம், மேஷம்-ஆடு. அது-பகுதிப்பொருள். விகுதிதங்கம்-உயர்ந்தபொன். வெண்கல்-பளிங்குக்கல். மின்னார்கள்-மின்கொடிபோல்பவர்கள். மாலிகை-மாலிகாஎன்னும்வடசொற்றிரிபு.

பெரியோ ரியல்பு.

அன்ன தா னஞ்செய்தல் பெரியோர்சொல்வழிநிற்ற
லாபத்தின் வந்த பேருக்
கபயங் கொடுத்திடுத னல்லினஞ் சேர்ந்திடுத
லாசிரியன் வழிநின் றவன்
சொன்னமொழி தவறாது செய்திடுதல் தாய்தந்தை
துணையடி யருச்சனைசெயல்
சோம்பலில் லாமலுயிர் போகினும் வாய்மைமொழி
தொல்புவியி னட்டி யிடுதல்
மன்னரைச் சேர்ந்தொழுகல் கற்புடைய மனைவியொடு
வைகினுந் தாம ரையிலை
மருவுநீ ரெனவுறாத விவையெலா மேலவர்த
மாண்பென் றுரைப்ப ரன்றோ
வன்னமயின் மேலிவர்ந் திவ்வுலகை யொருநொடியில்
வலமாக வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (௯௯)

(இ-ள்.) அன்னதானம் செய்தல் - அன்னதானஞ்செய்த லும், பெரியோர்சொல்வழி நிற்றல்-பெரியோரது சொல் வழியில்நிற்றலும், ஆபத்தின் வந்தபேருக்கு-ஆபத்தடை ந்துவந்தவர்க்கு, அபயம் கொடுத்திடுதல்-அபயங்கொடுத் தலும், நல்லினம் சேர்ந்திடுதல்-நல்லினத்தைச்சேர்தலும், ஆசிரியன்வழிநின்று-ஆசாரியனது வழியிலேநின்று, அவ ன்-அந்த ஆசாரியன், சொன்னமொழி - சொன்னசொற் படியே, தவறுதுசெய்திடுதல்-தப்பாமல்செய்தலும், தாய் தந்தை-தாய்தந்தையருடைய, துணை அடி - இரண்டுதிரு வடிகளையும், அருச்சனை செயல் - அருச்சனை செய்தலும், சோம்பல் இல்லாமல் - சோப்பலின்றி, உயிர்போகினும்- உயிர்போனாலும், வாய்மைமொழி - உண்மைமொழியை, தொல்புவியில் - பழையதாகிய இவ்வுலகத்தில், நாட்டியிடு தல்-நிலைபெறுத்துதலும், மன்னரைச்சேர்ந்து ஒழுகல்-அர சரைச் சேர்ந்தொழுகுதலும், கற்பு உடைய - கற்புள்ள, மனைவியொடு வைகினும்-மனையாளோடுகூடியிருந்தாலும், தாமரையிலை - தாமரையிலையின்மேல், மருவும் - பொருந் திய, நீர் என உறுதல்-நீர்போலப் பொருந்தியிருத்தலும் ஆகிய, இவையெல்லாம்-இவையாவும், மேலவர்-மேலோ ர்களுடைய, மாண்பு என்று-பெருமைக்குணங்களென்று, உரைப்பர் அன்றோ-(பெரியோர்கள்) சொல்லுவார்களல் லவா, வன்னம்-அழகாகிய, மயில்மேல் இவர்ந்து-மயிலின் மேலேறி, இவ்வுலகை - இந்தவுலகத்தை, ஒருநொடியில்- ஒருநொடிப்பொழுதில், வலமாகவந்த - பிரதட்சிணமாய்

வந்த, முருகா-முருகக்கடவுளே, மயிலேறி விளையாடு குக னேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

தானம்கொடுத்தல். ஆபத்து-இடர். அபயங்கொடுத்தல்-அஞ்சாதேயென்று சொல்லுதல் நல்லினம்-நல்லோர் கூட்டம். அருச்சனைசெயல்-மலர்தூவல். வாய்மை - உண்மை. தாமரையிலைமருவு நீரெனவுறுதல்-தாமரையிலையும் தண்ணீரும் கூடியிருந்தும், பற்றற்றிருத்தல் போலப்-பற்றற்றிருத்தல்.

நூற்பயன்.

வன்னமயி லேறிவரு வேலாயுதக் கடவுண்
மலைமே லுகந்த முருகன்
வள்ளிக் கொடிக்கினிய வேங்கைமர மானோன்
வானவர்கள் சேனைபதி
கன்னன்மொழி யுமையா டிருப்புதல்வ னரன்மகன்
கங்கைபெற் றருள்புத் திரன்
கணபதிக் கிளையவொரு மெய்ஞ்ஞான தேசிகக்
கடவுளா வினன்குடி யினன்
பன்னரிய புல்வயலில் வாலகும ரேசர்மேற்
பரிந்துகுரு பாத தாசன்
பரங்கான தமிழாசி ரியவிருத் தத்தினறை
பாடலொரு நூறு நாடி
நன்னயம தாகப் படித்தபேர் கேட்டபேர்
நாடொறுங் கற்ற பேர்கள்

மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (க00)

(இ-ள்.) வன்னம்-அழகாகிய, மயில்ஏறிவரு - மயில்மே லேறிவருகிற, வேலாயுதக்கடவுள்-வேலாயுதன் என்னுந் திருநாமத்தையுடைய கடவுள், மலைமேல்உகந்த முருகன்-மலையின்மேலிடங்களை யெல்லாம்விரும்பின முருகன்-வள்ளிக்கொடிக்கு இனிய வேங்கைமரம் ஆகினேன் - வள்ளி நாயகியின் பொருட்டு இனிதாகிய வேங்கைமரமானவன், வானவர்கள் சேனைபதி - தேவசேனைபதி, கன்னல்மொழி-கருப்பஞ்சாற்றை நிகர்த்த இனியசொல்லையுடைய,உமையாள்-உமாதேவிக்கு, திருப்புதல்வன் - அழகியபுத்திரன், அரன்மகன் - சிவன்மகன், கங்கைபெற்றருள் புத்திரன்-கங்கைபெற்றருளின புத்திரன், கணபதிக்கு - விநாயகருக்கு, இளைய-இளையவராகிய, ஒரு-ஒப்பற்ற, மெய்ஞ்ஞான தேசிகக்கடவுள்-மெய்ஞ்ஞானதேசிகனாகிய கடவுள், ஆவினன்குடியினன்-திருவாவினன்குடியை யுடையவன், பன் அரிய-சொல்லுதற்கரிய, புல்வயலில் திருப்புல்வயலிலெழுந்தருளியிருக்கிற, வாலகுமரேசர்மேல் - பாலசுப்பிரமணியர்மீது பரிந்து-அன்புகொண்டு, குருபாததாசன் - குருபாததாசனானவன், பாங்கான-அழகாகிய, தமிழ் ஆசிரிய விருத்தத்தின்-தமிழ் ஆசிரியவிருத்தங்களால், அறை-பாடின, பாடல்ஒருநூறும்-ஒருநூறுபாடலையும்,நாடி-தேடி, நல்நயமதாக படித்தபேர்-நல்ல விருப்பத்தோடு படித்தவர்களும், கேட்டபேர்-கேட்டபேர்களும், நாள்தொறும்

கற்றபேர்கள் - தினந்தோறுங் கற்றபேர்களும், ஞானயோகம் பெறுவர் - ஞானயோக நிலைகளையடைவார்கள், பதவியாவும்பெறுவர் - பதவிகளெல்லாம் பெறுவார்கள், நல்முத்தியும் பெறுவர்-நல்லமோக்ஷத்தையும் அடைவார்கள், மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே, எ-று.

வன்னம்-நிறம் எனினுமமையும். வள்ளிக்கொடிக்கினிய வேங்கைமரம் என்பதற்கு வள்ளிக்கொடி படர்தற்கினிதாகிய வேங்கைமரம் என்றுமுரைக்கலாம். கன்னல் சர்க்கரை யெனினுமாம். ஆவினன்குடி-முருகர் திருப்பதிகளாகிய ஆறிலொரு திருப்பதி. நன்னயமதாகப் படித்தபேர்-இசையோடு படித்தபேர் என்றலுமொன்று.

குமரேசசதகம் மூலமும் - உரையும்

முற்றிற்று.

---

